ஈழநாடன் மேலைப்புலோலி

நா. கதிரைவேற் பிள்ளை

# உண்மைச் சரித்திரம்.

—— ※[※]※ ——

முத்தமிழ்க் கவிராஜ சிரோமணி

டாக்டர்

தஞ்சை சண்முகம்பிள்ளை யவர்களால்

இயற்றப்பெற்றுப்

புதுவை சைகோன் சின்னையா அச்சியந்திரசாலையில்

பிரசுரஞ் செய்யப்பெற்றது.

—— ※ ——

PONDICHERRY.

——

1909-ம் வரு

# முகவுரை

கடல் சூழ்ந்த பூவுலகத்தின் கண் ணுள்ள பரத கண்ட மாகிய இந்து தேசம் "தேவபூமி" யென்பதும் அதற்குப் புறம்பாயுள்ள இலங்கை "தீபம் இராக்கத பூமி" யென்பதும், இராமாயண முதலிய இதிகாச புராணாதிகளா லறியலாம். பூர்வகாலத்தில் இலங்கையி லுள்ள இராவணன் தெய்வ பூமியிலுள்ள இராமபிரானுக் கிடர்செய் தழிந்ததும், பிற்காலத்தில் ஏமநாதன் பாணபத்திரருக்கு இடர்செய் தொழிந்ததும், பௌத்தர் மாணிக்கவாசகசுவாமிகளுக்கு இடர்செய் தொழிந்ததும்போல இக்காலத்தில் இலங்கையி லிருந்த ஆறுமுக நாவலர், சபாபதி நாவலர், நா. கதிரைவேற்பிள்ளை இவர்கள் தெய்வ பூமியாகிய சோழ நாட்டி லுள்ள இராமலிங்க சுவாமிகள் விஷயத்தில் இடர் செய் தொழிந்ததும் யாவரு மறிந்ததொன்றே. இவர் களிழைத்த தீமைகளெல்லாஞ் சரித்திரத்தில் நன்கு விளக்கப்பட்டிருக்கின்றன, ஆண்டுணர்க. இம் மூவருள் முன் னிருவர்களும் உலகம் பழிக்கு மென்ற மானத்திற் கஞ்சித் தங்கள் சொரூபத்தை வெளிகாட்டாது கரந்து நின்று இடர் செய்தனர். பின்னவர் பழி பாவத்துக்கஞ்சாது தமது வஞ்சக வடிவை உலகர் காணும்படி தமது மானமென்னும் போர்வையை உதறிவிட்டு வெளியே வந்தவர். இக்திரையார் இராமலிங்க சுவாமிகளின்மீது பொறுக்கமுடியாத தீங்குகளிழைத்தமையால் போலீசு, ஹைகோர்ட்டு முதலிய நீதித்தலங்களுக்குப் போக நேர்ந்தது. காலங் கலியுகமானதாலும் இராஜாங்கத்தார் அன்னிய மதஸ்தர்களா யிருந்ததினாலும் கொண்டுபோன வழக்குத் தக்கபடி விசாரிக்கப்படாது தள்ளிவிடப்பட்டது. இராஜாங்கத்தார் தண்டியாதொழியினும் தெய்வம் தண்டியாதுவிட்டதோ? இதை உண்மையுணர்ந்தா ரறிந்தே யிருக்கின்றார்கள்.

இக்கதிரையார் மரணாந்த காலத்தில் நீலகிரிக்குன்னூர் (Coonoor) ஆஸ்பத்திரியில் போடப்பட்டு அவர் தம் பந்துக்களுக்குத் தெரிவிக்க முடியாமல் வாயடைத்துக் கிடக்கவும், இதுசெய்தியை அவ்வூரிலுள்ள சொக்கலிங்கபிள்ளையென்பார் அவர் பந்துக்களுக்குத் தெரிவிக்கும் பொருட்டுச் சுதேசமித்திரனில் விளம்பரமிட்டிருக்கவும், திரு - வி. கலியாணசுந்தர முதலியார் எழுதிய சரித்திரத்தில், " சுர நோயால் பீடிக்கப்பட்ட அக்காலத்தும் அவரைக் காணவந்த பெரியோர்கட்குச் சிவமான்மியங்களையே எங்குரவர் போதித்தா ரெனின், அன்னவரின் சைவப்பெற்றியை யறிவிலி எங்ஙனம் உரைப்பேன்?" எனவும், " அவர் இறக்கு[illegible]லத்தில் தேவாரஞ்

சொல்லச் சொல்லி அருகிருந்தார்க்குப் பொருளுரைத்து இறந்தார்." என வும் சிறப்புரையும் எழுதி யிருக்கின்றார். எவ்வாறாகக் கூறினுங் கூறிக் கொள்க. இவ ரிறந்தகாலத்தில் இவ ரருகிருந்த மேற்படி சொக்கலிங்க பிள்ளை தமது சரமகவியில் "நானுமறியேன் அவளும் பொய் சொல்லாள்" என்ற பழமொழியைப் புதுக்குமாறு இவர் இயமவாதனைபட் டிறந்தார் என"

"கால னுயிரைக் கவர்ந்தேகக் கனலா ராக்கை நீறாக்கப்
பாலு மாற்றிக் கரைக்கவதைப் பண்பார் நதியங் கொண்டேக
வேலனருளிவ் விதமானால் வித்தை மிகுசீர் நற்கதிரை [லையே."
வேல வினியா மென்செய்வோம் மீட்டும் வலியோ வெமக்கி

எனக் கூறி யிருக்கிறபடியால் இவர் சிவலோகஞ் சேராது இயமலோகஞ் சேர்ந்தாரெனத் தெரிய வருகின்றது. (77-வது பக்கத்திற் காண்க.) அன் றும் இக்கதிரையார் இறந்தமையை இராமலிங்கசுவாமிகளின் கூட்டத்தார் கேட்டு, இவரது கல்வியும் கேள்வியும் நன்மை பயப்பியாது தீமைக்கே யெழுந்துச் சென்றதே, இவர் தலைவிதி இருந்த வாறென்னே? என இரக்க முற்று இனி இவரைப் பற்றிப் பேசுவது தகுதியன்றுமெனச் சீற்றந் தணிந்து சாந்தமானார்கள். இஃது இங்ஙனமிருப்ப,

கதிரைவேற்பிள்ளை இறந்த பின்னர் அவர் தம் மாணாக்கர்களென வெளி வந்த திரு - வி. கலியாணசுந்தர முதலியார் என்பாரும், பி. பால சுந்தர நாய்க்கரும் தங்கள் ஆசிரியரான கதிரையார் இராமலிங்க சுவாமி யைத் தூஷித்துத் தீரா நரகிற் காளானமை மறந்தோ, அல்லது நன்மை யேயாயினும், தீமையேயாயினும் மாறுக, நாம் அவர் சென்ற வழியிற் செல் வதே தகுதியாமெனக் கருதியோ, கதிரைவேற்பிள்ளை சரித்திரமென இவ்விருவரும் தனித் தனியே எழுதி அதனுள் மேற்படி சுவாமிகளைப் பற் றித் தூஷணையான வசை வாசகங்களை நிரப்பி வெளியிட்டிருக்கின்றார்கள். அதில் முக்கியமாயுள்ள சிலவற்றை எடுத்து விவகரிப்பாம்.

சென்னையிலுள்ளார் சிலர் முல்லா வீதியில் ஓர் சபை சேர்த்து எங் குருநாதனையும் (கதிரையார்) எங்கள் பரமாசிரியரையும் தூஷணித்து, இராமலிங்க பிள்ளை பாடலை அருட்பாவென்றும், ஐந்தாம் வேதமென்றும், அவ்வை ஐந்தாங்குரவரென்றும் உபந்நியாசித்தனர். அது காரணமாகக் கதிரைவேற்பிள்ளை இராமலிங்க பிள்ளை பாடல் ஆபாசதர்ப்பணம் அல்லது மருட்பா மறுப்பு என ஓர் நூலை எழுதி வெளியிட நேர்ந்ததெனச் சரித்திரம் எழுதியிருக்கின்றார்கள். இராமலிங்க சுவாமிகள் கூட்டத்தார் ஒருபோதும் அவ்வாறு கூறினதே கிடையாது. இது அச்சபையில் வந்திருந்தோர்

யாவரும் அறிந்த விஷயமேயாம். 1898ம்-ஆல் செய்யுள் ரூபமாக எழுதி வெளியிட்ட ஆறுமுக நாவலர் சரித்திரம் என்னும் புத்தகத்தில்

"பிறந்திறந் துழலுஞ் செய்கை பெருச்சிவ பிரானைப் பாடன்
"மறந்திடா நால்வ ரோடி வருமோரு வராது மென்னும்
"திறந்திகழ் தருசித் தாந்தந் தெளிந்தநா வலரை வேண்டி
"யறந்திறம் பாச்ச பைக்கங் கதிபதி யாக்கிக் கொண்டு.

என ஆறுமுக நாவலரை ஐந்தாங் குரவ ரெனப் பாடி வைத்துக்கொண்டு "தான் திருடி அயல் வீடு நம்பாள்." என்ற பழமொழியைப் புதுக்க ஐந் தாங்குரவரென அவர் சார்பார் கூறினார்களெனப் பகட்டுரையாடுகிறார்கள். இது புதுமையினும் புதுமையேயாம்.

பன்னிரு திருமுறைகளே திருவருட்பா வென்றும், அவற்றைக் கொண்டாடுபவர்களே உண்மையான சைவர்களென்றுங் கூறித் திரியுங் கதிரைவேற் பிள்ளையும் அவர் சார்பாரும் அத் திருமுறைகளை உள்ள படியே நம்பி யிருப்பார்களாயின் அத் திருமுறைகளுக்கு மாறாக ஒரு போதும் நடந்திருக்க மாட்டார்களன்றோ. அத்திருமுறைகளில் ஒன் றாகிய சுந்தரமூர்த்தி சுவாமிகள் தேவாரத்தில்,

"பத்தராய்ப் பணிவார்க ளெல்லார்க்கு மடியேன்
பரமனையே பாடுவா ரடியார்க்கு மடியேன்
சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கு மடியேன்.
..........................................................
..........................................................
அப்பாலு மடிசார்ந்தா ரடியார்க்கு மடியேன்
ஆரூர னாரூரி லம்மானுக் காளே."

எனப் பாடியிருக்கிறபடியே இராமலிங்க சுவாமிகள் மண் பெண் பொருளாதி யாசைகளை முற்றத்துறந்து சதா நிஷ்டராயிருந்து நடராஜப் பெருமானைப் பத்தராகிப் பணிந்தும், பரமனையே பாடியும், சித்தத் தைச் சிவன்பாலே வைத்தும், 63 நாயன்மார்களின் பின்னர் அப் பாலுமடி சார்ந்தாராக விருந்தும், அவர் மீது அடாத நிந்தனைகளை மனங் கூசாது கூறுமிவர்கள் எவ்வாறு பன்னிரு திருமுறைகளைப் போற் றும் சைவராவார்?

(Police magistrate) நியாயாதிபதியவர்களால் எங் குருநாதற்கு மாயாவாத தும்ஸகோளரி-பட்டம் உறுதி செய்யப்பட்டதெனக் கூறித் திரிகின்றார்கள். இதுவும் பொய்யேயாம். இச்சரித்திரம் 7-வது பக் கத்திற் காண்க!

கதிரைவேற் பிள்ளை ஜாதியை விசாரிக்குமிடத்தில் (இவர் தாம் வேளாளரெனக் கூறிக்கொண்ட போதிலும்) இவர் வேளாளரைச் சூத்திரரென வாதித்தமையால் சிலர் இவர் வேளாளராகாரெனவும்; இவர் தந்தை நாகப்பிள்ளை என்பார் பூசாரியென வழங்குவதாலும், இக்கதிரையார் சென்னையிலுள்ள பூசாரிகளிடத்து அதிக நேயமுற்றிருந்தமையாலும், (8, 60-வது பக்கங்களிற் காண்க.) சிலர் இவரைப் பூசாரிவகுப்பாரோ! வெனவும்; யாழ்ப்பாணத்துக் கீரிமலை சைவப்பிரசாரகராய மகாவித்துவான் வரம்பையர் எழுதிய சரமகவியில் இவரை

> மாகப் பிள்ளை சிறுவழுவால் வந்த ணைந்த தெனவாய்ந்த
> நாகப் பிள்ளை தவப்பயனாய் நண்ணு தெய்வ சுபக்கிரக
> யோகப் பிள்ளை துடிப்பிள்ளை யுண்மைச் சைவக் குலப்பிள்ளை
> யாகப் பிள்ளை யெனவுதித்த வண்ணல் கதிரை வேற்பிள்ளை.

துடிப்பிள்ளை யெனப் பாடியிருப்பதால் சிலர் இவரை மயிர் வினைஞரோ! எனவும்; இக் கதிரையார் தாம் (இலங்கணிப் பிள்ளையென மாறு பெயர் கொண்டு) எழுதிய பாசுபதாஸ்திர பிரயோக பிரசண்ட மாருதக் கோடை யிடி என்ற பத்திரிகையில் "பறைப் பிரகாசன் பதமலரோங்க!" வெனத் தோத்திரஞ் செய்திருப்பதால் (34-வது பக்கத்திற் காண்க.) சிலர் இவரைப் பறையரோ! வெனவும்; இவர் யாழ்ப்பாணப் பேரகராதியில் வேளான் (குயவன்) என்பான் வேளாளருள் ஓர் வகுப்பானென வெழுதி யிருப்பதால் சிலர் இவரைக் குயவரோ! எனவும் அபிப்பிராயப்படுகிறார்கள். அதனால் இவர் இன்ன ஜாதியரென உண்மை விளங்கவில்லை.

இது நிற்க, இவரது சமய நிலைமையை விசாரிக்குமிடத்தில் இவர் தாம் சைவரெனக் கூறிக்கொண்டு சைவப்பிரசங்கம் செய்தாரேனும் இவர் யாழ்நாட்டிலிருந்த காலத்தில் இளமைப்பருவமுதல் கிறிஸ்தவன் வீட்டில் உண்டு வளர்ந்தமையாலும், (2-வது பக்கத்திற் காண்க.) சென்னை வந்து சேர்ந்த காலத்தும் தாமிறக்கிறவரையில் சைவ சமய விரோதிகளாயுள்ள பாதிரிமார்கள் சார்பிலிருந்து ஜீவித்து வந்தமையாலும் (95-வது பக்கத்திற் காண்க.) சிவ ஞானியாயுள்ள இராமலிங்க சுவாமிகளைத் தூஷணித்து வந்தமையாலும், இவர் உண்மையில் சைவசமயத்தவரோ? அல்லது கிறிஸ்தவ சமயத்தவரோ? வென விளங்கவில்லை.

பன்னிரு திருமுறைகளே அருட்பாவாமன்றி இராமலிங்க பிள்ளை பாடல் அருட்பாவாகா மருட்பாவே எனக் கதிரையார் தூஷணித்ததைக் கேட்ட காஞ்சி ஆலால <u>சுந்தரம் பிள்ளை</u> அவர்கள் சிந்தாதரிப்பேட்டை

யில் சுவாமிகள் விஷயமாகக் கூடிய சபையில் "திருவருள் என்றால் சமைய குரவர்கள் நால்வருக்குத் தான் சொந்தமோ? பின்னுள்ளோர் அவ் வருளை யடைந்து பாடக்கூடாதோ?" என்று மறுத்ததைக் கேட்ட கதிரையார் இவரை எவ்வாறு நமது கக்ஷியில் சேர்ப்பதென் றாலோசித்துப் "பேராசைக்காரனே பெரும் புளுகன் வெல்லவேண்டு" மென்ற பழமொழிக் கேற்ப ஓர் சூக்ஷி செய்யலாயினர். ஓர் நாள் அவ் வாலால சுந்தரம் பிள்ளை இருக்குமிடந் தேடிவந்து நீர் 'தேவி பாகவதம்' அச்சிட ஆரம்பித்துப் பொருளுதவியன்றி நிறுத்திவிட்டீரே. நீர் இராமலிங்க பிள்ளை கக்ஷியில் சேராது நமது கக்ஷிக் குதவியா யிருப்பீராகில் அந்நூலை நாமே நிறைவேற்றுவிப்பதோடு இன்னும் வேண்டுமான உதவிகளுஞ் செய்வேமெனப் போதிக்கவும், சுயலாபத்தைக் கருதிய இச் சுந்தரர் புத்தி மாறி அருட்பாவென்பது இராமலிங்கபிள்ளை பாடலாகா, பன்னிரு திருமுறைகளேயா மென முற்கூறிய வாக்கை மாற்றிப் பிரசங்கஞ் செய்யலாயினர்.

இக் கதிரையார் நீலகிரிக் குன்னூரில் போயிருந்த காலத்து அங்கு உபாத்தியாயராக விருக்குஞ் சொக்கலிங்கபிள்ளையின் உதவியை வேண்டி வையகத்தாரெல்லாரும் உம்மைப் புகழ்ந்து கொண்டாடும்படி செய்வேமென்று போதித்தார். இதை

மன்னுகடல் சூழ்ந்த வையகத்தா ரெல்லாரும்
உன்னைமிக மெச்சி யுரைக்கும்வகை செய்வேனு
னென்னவெனக் குரைத்த வின்கதிரை வேற்பிள்ளை
மன்னவனே யையா மறையச்செ லலழகோ?

என அவர் பாடிய சாம கவியாற் காண்க.

இவ்விதமாகத் தமது கக்ஷியில் சேரும்படி நாகை—வேதாசலம்பிள்ளையவர்களிடம் ஆ. குமாரசாமி முதலியார், சி. நாராயணசாமி நாய்க்கர், கோவிந்த நாய்க்கர், சோமசுந்தர முதலியார் ஆகிய இவர்களைத் தூதனுப்பியும் இஷ்டர்களைக் கொண்டு சொல்லுவித்தும் அவர் இவர்தம் மாய வலையி லகப்பட வில்லை. இவற்றால் தமது கக்ஷியை ஸ்தாபிக்கு நிமித்தம் கற்றவரையும் மற்றவரையும் வசப்படுத்த வல்லாரென்பது தெரிய வருகின்றது.

"இக் கதிரையார் மனைவி யிறந்தபின் யாழ்ப்பாணத்திலிருக்கையில் இவரைப் புனர் விவாகஞ் செய்துகொள்ளும்படி இவரது தாய் தந்தையர் கட்டாயப் படுத்தவுஞ் சம்மதிக்கமாட்டேனென்றார். பின்னர் இடைவிடாது ஒருவேளை யுண்டியேற்று ஸ்ரீ கந்தசாமியார் ஆலயத்தில் உப

வாசமிருக்க ஸ்ரீ கந்தசாமியார் முன்தோன்றி அஞ்சற்க, புனர் விவாகம் வேண்டாம், அவதானஞ் செய்யப் பிரயத்தனப்படுக, யாம் முன்னிற்கின்றேமென்றருளி அந்தர்த்தானமாயினர். பெருமானது அனுபூதி யுற்றபின் அடுத்தவாரமே யாழ்ப்பாணத்து மேலைப் புலோலி புதாச் சந்நதி கந்தசாமி கோயிலின்கண் சோடசாவதானஞ் செய்தனர்." என்றூர்.

ஈண்டுப் புனர்விவாகம் வேண்டாமென்றவிவர் எதற்காக உபவாசமிருந்தார்? இவர் எதுக்காக அஞ்சினர்? எதற்காகக் கந்தசாமி வந்து அஞ்ச வேண்டாமெனத் தேற்றினர்? நீ அவதானஞ் செய்ய முயலுக, நாம் முன்னின்று முடித்து வைக்கின்றேமென்று கந்தவேளை வலியகட்டளையிட்டனரே. இவர் யாழ்ப்பாணத்தில் அஷ்டாதசாவதானஞ் செய்ய முயன்று தவறினதும், சென்னையில் சதாவதானஞ் செய்வேமென வாரம்பித்து, நான்கிலொரு கூறுயினுஞ் செய்ய வேலாது தவறினதும் யாது காரணம்? கந்தவேள் இவர் அவதானஞ் செய்ய வரமளித்ததாகக் கூறியது மெய்மையாமோ?

இக்கதிரையார் உபவாசமிருந்ததற்கே மெச்சிக் கந்தவேள் இவர் சாக்ஷாத்தே திருவுருக் கொண்டெழுந்தாரென்றும், வரமளித்த பின்னர் அந்தர்த்தானமாயினர் (எனவே திருவுருவம் நீங்கி அருவமாய் மறைந்தார்) என்றுங் கூறினரெனின், சதா நிஷ்டராயிருந்த இராமலிங்க சுவாமிகளிடம் நடராஜப்பெருமான் எழுந்தருளி வந்திருப்பாரென இவர் என் ஒப்பாராயினர்?

கந்தவேள் அருள்பெற்ற கதிரையார் மரணந்தகாலத்தில் தாமிருக்க வேண்டிய விடத்தில் இருக்கவொட்டாமல் நீலகிரிக் குன்னூரில் நோயாளிச்சாலையில் போடப்பட்டு வாயடைத்தும் கண்புதைத்தும் காதடைத்தும் 5 நாள் மரணவேதனையில் சிலேட்டுமத்தால் இயமவாதனைப்பட்டும் இறக்கக் கண்டீகென்னையோ! இவையெல்லாம் சிவ ஞானியாயுள்ள இராமலிங்க சுவாமிகளைத் தூஷித்த பயனென்றுணரவேண்டும்.

இப்பாலசுந்தர நாய்க்கர் எழுதிய சரித்திர உரையில் தமது ஆசிரியர் இறந்ததைப்பற்றி உள்ளூர் வெளியூர் முதலிய இடங்களிலுள்ள நண்பர்களுக்குத் தெரிவிக்க அவர்கள் அனுப்பிய சரமகவிகளை வெளியிட வாரம்பித்த காலத்தில், தமது கக்ஷியிலுள்ளார் சிலர் தமக்கு மிக்க நட்புடையார் போலக் காட்டி யன்புபாராட்டிக் காப்பிகளைப் பார்வையிட்டுத் தருகிறோமென வாங்கி வைத்துக்கொண்டு பலவிதமாகப் பெரியோர்க்கிழித்துக் கூறி, கேட்பவர் மனம் புண்படுமாறு அவதூறுகளைச் சொல்லியுங் காலங்

கழித்தார் என்றும், பின்னர் தந்திரோபாயஞ் செய்து அக்காப்பிகளை அழைப்பித்து அச்சிட்டேனென்றுங் கூறி யிருக்கின்றார்.

இதனால் கதிரையார் பெரியோரை நிந்தித்ததும், வைணவமத கண்டனை செய்ததும், அவர் ஜீவதிசை காலத்தே அவர்கக்ஷியிற் சேர்ந்தார் பலருக்கும் வருத்தத்தையே விளைத்துவந்தன. இவர் இறந்தவுடனே இவர்கட்டிலகப்பட்டா ரெல்லாரும் கட்டுடைந்து இவர் கக்ஷியில் நின்றும் நீங்கிவிட்டார்களென்பதும் அதனாலேயே இவர் மேலெழுதிய சாமகவிகளை வெளியிடச் சம்மதமில்லாதவர்களாக இருந்தார்களென்பதும் நன்கு விளங்குகின்றன. மேலும் அவர் சரித்திரத்தை எழுத வந்தவர்களும் இருகக்ஷியாகப் பிரிந்து இரண்டு சரித்திரம் எழுதலானார்கள். அநேகர் திருவருட்பா கக்ஷியில்வந்து சேர்ந்துவிட்டார்கள். (102-வது பக்கத்திற் காண்க.) இவை நிற்க,

அக்கமணியையும் அருணீற்றையும் அன்புடனணிந்து பன்னிரு திருமுறைகளைப் பாராயணஞ்செய்யும் பக்தஜன சபையார் கதிரைவேற் பிள்ளை திருவுருவப் படங்களைத் தத்தஞ் சபைகளிலும் இல்லங்களிலும் ஸ்தாபித்து மெய்ப்பத்திபுடன் பூசித்து வாழ்கின்றார்கள் என்றெழுதி யிருக்கின்றார்.

சத்தகுரவர்களைப் பூசிக்கவேண்டுமெனச் சாத்திரங்கள் ஏற்பட்டிருப்பதால் சைவசமயாசிரியர் நால்வரோடு இவர்கள் ஆறுமுக நாவலர் 5-ம் குரவர், சபாபதி நாவலர் 6-ம் குரவர், கதிரைவேற் பிள்ளை 7-ம் குரவர் என அமைத்துக்கொண்டு பரமாசிரியர் நால்வருக்கொப்பாகப் பின்னவர் மூவருக்குங் குருபூசைகளும் நடத்தி வருகிறார்கள். (99, 100, 101-வது பக்கத்திற் காண்க.) அறுபத்துமூன்று நாயன்மார்கள் திருநக்ஷத்திரப் பத்திரிகைகளில் ஆறுமுக நாவலர் திருநக்ஷத்திரத்தையுஞ் சேர்த்து வெளியிடுகின்றார்கள். பின்னவர்களையும் வெளியிடுவார்போலும். இது கலியுக தர்மமன்றோ.

இஃதெவ்வாறாயினுமாகுக. திரு - வி. கலியாணசுந்தர முதலியாரும் பூ. பாலசுந்தர நாய்க்கரும் கதிரைவேற் பிள்ளையைப்பற்றி எழுதிய சரித்திரங்களை உற்று நோக்குமளவில் பெரும்பாலும் கட்டுக்கதையாக விருக்கின்றதேயன்றி உண்மை சற்றும் விளங்கவில்லை. அதனால் அவர்கள் எழுதிய சரித்திரங்களை உலகத்தார் கண்டு மயங்காவண்ணம் உள்ளதை உள்ளவாறுணர்த்த வேண்டுமெனக் கருதி இக்கதிரையார் சரித்திரத்தை யாங்களும் எழுதி வெளியிட நேர்ந்தது. இதில் மேற்படி கதிரையாரின் பூர்வ சரித்திரங்களைப்பற்றி அப்போதைக்கப்போது வெளிப்பட்ட

பத்திரங்களின் ஆதாரவைக்கொண்டும் நடுநிலைமை மாறாத உண்மைச் சிவனடியார்களின் வாய்மொழிகளைக் கொண்டும் அவர்கள் விடுத்த கடிதங்களைக்கொண்டும் வருட மாதந் தேதி முறையாய் "நடந்தவண்ண முறைத்தல்" என்னும் ஆன்றோர் கோட்பாட்டின்படி எழுதியுள்ளோம். ஆதலின் இதை துவேஷத்தினா லெழுதியதாக நந்தமிழ் நேயர்கள் கருதலாகா.

சிவமயம்.

## ஈழநாட்டு மேலைப்புலோலி
# நா. கதிரைவேற் பிள்ளை
# உண்மைச் சரித்திரம்.

---

### காப்பு.

செம்மை யாவுஞ் செழித்துல கோங்கவும்
பொய்மை யாவும் புறம்போந் தொளிக்கவும்
மெய்மை யாவும் வெளிவந் தொளிரவுந்
தூய்மை யைங்கரத் தோன்றலை யுள்குவாம்.

பூர்வகாலத்தில் இராவணனால் ஆளப்பட்ட இலங்கையென்னும் பெயருள்ள ஈழநாட்டில் யாழ்ப்பாணத்தைச் சார்ந்த மேலைப் புலோலியில் நாகப்பிள்ளை யென்பார் ஒருவ ரிருந்தார். அவரை வேளாளரெனவும் பூசாரி யெனவுங் கூறுவர். அவர் கொட்டிலில் ஓர் வேல் வைத்துப் பூசித்து வந்தார். பின்னர் அக்கொட்டிலைச் சாந்தினாற் கட்டி இக்காலத்தும் பூசித்து வருகின்றார். அந்தக் கட்டடத்துக்கு இப்போது புதுச் சந்நதி கந்தசாமி கோயில் என்றும், அவ் வேலைப் பூசித்து வந்த அவருக்கு ஷை கோயில் தருமகர்த்தா வென்றும் வழங்கிவருகிறார்கள். அவருக்குச் சில பிள்ளைகளும் பெண்களுமுண்டு. அவர்களில் (இப்போது கதிரைவேற் பிள்ளையெனப் பெயர் வைத்து வழங்கும்) வேலுப்பிள்ளை யென்ற குமாரர் 1874-ம் வருஷத்தில் பிறந்தார்.

இவர் இளவயது முதல் குத்துச் சண்டை, வெட்டுச் சண்டை, பாணா வரிசை முதலிய சிலம்பப் பழக்கங்களிலும், சுவரேறிக் குதித்தல் முதலிய துணிவான கிருத்தியங்களிலும் மிகக் கைதேர்ந்தவராகித் தேக திடமும் மனோ திடமும் பெற்றவர். எழுதுவதிலும் பேசுவதிலும் மிகச் சமர்த்தர்; வாய்ச் சண்டையி லிளைத்தால் கைச் சண்டை யாரம்பிப்பர். இலக்கண விலக்கியங்களிலுஞ் சிறிது பயின்றவர். சாம தான பேத தண்ட மென்னுஞ் சதுர்வித உபாயங்களிலும் மிகச் சமர்த்தர். மெய்யைப் பொய்யெனவும், பொய்யை மெய்யெனவுஞ் சாதிக்க வல்லர். அக்காலத்தில் சூரபத்மன்,

இராவணாதியர்கள், தேவர்களுக்கும் மகரிஷிகளுக்குந் தீங்கிழைத்த வாறு இவரும் பெரியோர்களுக்குத் தீங்கிழைப்பதிலும், அவர்களை நிந்திப்பதிலும் அஞ்சாத நெஞ்சு பெற்றவர்.

"தீவினையா ரஞ்சார் விழுமியா ரஞ்சுவர்
தீவினை யென்னுஞ் செருக்கு"

என்னும் வேதவாக்கியத்தைப் புதுப்பித்து விளக்கினார். ஆதலின் அக்காலத்தில் இராவணனிடத் துதித்த இந்திரசித்தே இவரென்னலாம். இவர் இராணுவத்தில் சேர்ந்திருப்பாராகில் இதுவரையிலுங் காப்டன் ( Captain ), மேஜர் ( Major ) என்னும் பட்டாபிதானங்கள் பெற்றிருப்பர். இவர் பாதிரிமார், உபதேசிமார்களுடன் பழகி விவிலிய நூலிற் பயின்று அவர்கள் பிரசங்கிப்பதுபோலக் காலசைத்துங் கையசைத்தும் உடம்பசைத்தும் பற்பல அபிநயங்கள் காட்டித் தெருக்களில் நின்று பிரசங்கிப்பதில் மிகச் சமர்த்தர்.

இவர் சிலகாலமாக ஸ்ரேங் கனகரத்தினம் என்னும் ஓர் கிறிஸ்தவர் வீட்டில் உண்டு வளர்ந்து வேலை செய்துகொண்டிருந்தார்.

பின்னர்ச் சிலகாலம் இவர் சதாசிவம் பிள்ளை யென்கிற ஒரு ( Notary Public ) நொத்தாரிசுவினிடங் குமாஸ்தாவாக விருந்தார். அந்நாளில் சில கள்ளச் சாசனங்கள் பிறப்பித்தாரென வழக்கு நேர்ந்து வேலையினின்றும் நீக்கப்பட்டார்.

பின்னர்ச் சிலகாலம் மேலைப்புலோலி சைவ வித்தியாசாலையில் சிறிய வகுப்புப் பிள்ளைகளுக்கு உபாத்தியாயரா யிருந்து, தமிழ்ப் பாடங் கற்பித்து வந்தார்.

அந்நாளில் இவருக்கு மணம்புரிவிக்க உத்தேசித்தார்கள். அக்காலத்தில் கோவிந்தப்பிள்ளை யென்பாருக்கு இரத்தினம் என்னும் ஓர் பெண், பருவகால மடைந்து முன்னொரு வரனுக்கு நிச்சயிக்கப் பட்டிருந்தாள். யாது காரணத்தாலோ? அந்த விவாகம் முடியவில்லை. பிறகு அவளை இவர் மணம்புரியலாயினார். அந்தப் பெண்ணின் இனத்தாரில் பலர் கிறிஸ்தவர்களா யிருந்தபோதிலும் அவள் சைவமதமேயாம். அந்தப் பெண்ணுக்கு வடிவாம்பிகையென இவர் வேறு பெயர் சூட்டினார். இவர் அந்தப் பெண்ணோடு கூடி வாழ்ந்திருக்கும் நாளில், பொன்னம்மாள் என ஒரு பெண் குழந்தை பிறந்தது. அதற்குப் பிற்காலத்தில் சிவஞானம்பிகை யென வேறு பெயர் சூட்டினர்.

---

## நா. வேற்பிள்ளை இலங்கைத் தீபத்தார் தெண்டனைக் கஞ்சிச் சென்னை வந்து சேர்ந்தது.

அந்நாளில் இலங்கையில் ஆ. வேலுப்பிள்ளை யென்பார் ஒருவரிருந்தார். இவரைப் பெரிய மகன் வேலுப்பிள்ளை யென்றும், முதலாளியார் என்றுங் கூறுவர். இவரிடம் நா. வேலுப்பிள்ளை தமக்கு ஒரு தொகை பணம் வேண்டுமெனப் பிராமிசெரி நோட்டு எழுதிக் கொடுத்துப் பணம் வாங்கியிருந்தார். சிலகாலஞ் சென்ற பின்னர்ச் செம்புக் காசுகளை ஓர் பையிற் கட்டிக்கொண்டுபோய், இதோ பணங் கொண்டுவந்திருக்கிறேன்; பத்திரத்தைக் கொண்டுவாருமென்று கேட்க, அம்முதலாளி உண்மையென நம்பிப் பத்திரத்தைக் கொண்டு வந்து இவர் கையில் கொடுக்க, அதை வாங்கி வாசித்துப் பார்த்துத் தன் சட்டைப் பையில் வைத்துக்கொண்டு, இந்தப் பணப்பை உங்கள் வசமாக இருக்கட்டும். இன்றையத் தினம் நான் அவசரமாகப் போகவேண்டியதிருப்பதால், நாளையத் தினம் வந்து கணக்குத் தீர்த்துவிடுகிறேனெனச் சொல்லிப் போயினர். முதலாளி இந்தப் பையிலுள்ளது வெள்ளி நாணயமென்று நம்பிப், பையைப் பத்திரப் படுத்தி வைத்திருந்தார். சிலநாள் வரையினும் பார்த்திருந்தும் இவர் வாராமை கண்டு பையை அவிழ்த்துப் பார்க்கச் செப்புக் காசுகளாக விருக்கக் கண்டு, நம்பி நடந்த நமக்கு இப்படித் துரோகஞ் செய்தானே பாவியென்று உடனே பருத்தித்துறை போலீசு கோர்ட்டில் வழக்குத் தொடுத்தார். நா. வேலுப்பிள்ளை இனி நாம் இவடமிருந்தால் தெண்டிக்கப்படுவோமென அஞ்சி, அந்நாட்டை விட்டு 1895-ம் வருஷத்தில் சென்னையில் வந்து சேர்ந்தார்.

## நா. வேற்பிள்ளை நா. கதிரைவேற்பிள்ளை யானது.

அது நாள் முதல் வேலுப்பிள்ளை யென்ற இயற்கைப் பெயரை மாற்றி நா. கதிரைவேற்பிள்ளை எனப் பெயர் வைத்து வழங்கி வந்தார்.

இவர் சென்னை வந்த நாள் முதல் உண்ணவுணவுக்கும், உடுக்க ஆடைக்கும், மிக வருந்திச் சென்னைக் கடுத்த குயப்பேட்டைக் கந்த

சாமி கோயில் தெருவில் ஓர் வீட்டுத் திண்ணையில் அயர்ந்து வந்து உட்கார்ந்தார். அவ்வீட்டிலுள்ள தங்கவேலுப்பிள்ளை யென்பார் வெளிவந்து இவரைப் பார்த்து நீர் யாவர்? எங்கிருப்பது? எங்கு வந்தீர்? என வினவினர். அதற்கு இவர் ஐய, என் பேர் கதிரைவேற் பிள்ளை யென்பார், நான் இருப்பது சிதம்பரம், இங்கு யாத்திரை யாக வந்தேன் என்றார். அதற்குத் தங்கவேலுப்பிள்ளை நீர் பூர்வம் இருப்ப தெவ்வூர்? அதை விட்டு வருவானேன்? என்றார். அதற்குக் கதிரையார் நான் இருப்பது யாழ்ப்பாணம், என் தாய் தந்தையர் என்னைக் கைசோரவிட்டார்கள் எனக் கூறிக் கண்களில் நீர் சோரக் கலங்கினர். அதைக் கண்டு மனமிளகி உமக்கு வேண்டுவதென் னென்றார். கதிரைவேற்பிள்ளை காற்படி அரிசி உண்டானால் சமைத் துண்டு பசியாறுவேன் என்றார். தங்கவேலுப்பிள்ளை அவ்வாறே கொடுத்துதவினர். பின் கதிரைவேற்பிள்ளை அவரோடு நட்பாடி அவர் சார்பிலிருந்து சிறுபிள்ளைகளுக்குப் பாடஞ் சொல்லி ஜீவித்து வந் தார். அதுவுமன்றிச் சென்னைக் குசப்பேட்டையில் மாயாவாதி யாகவிருந்து இறந்துபோன சச்சிதானந்தப் பிள்ளையின் சமாதிக் குப் பூசை செய்துவந்த இவரது நண்பர் சுப்பிரமணியப்பிள்ளை யாழ்ப்பாணம் போக நேர்ந்த காலத்தில் இக் கதிரையார் அவர் போய்த் திரும்பி வருகிறவரையில் மேற்படி சமாதிக்குப் பூஜை செய்து ஜீவித்து வந்தார். பின்னர்ச் சில காலஞ் சென்னை முத்தி யாலுப்பேட்டை சிப்பன் பிரசுக்குத் தலைவரா யிருந்த சை. இரத்தின செட்டியாரை யடுத்து அவர் அச்சாபிசில் அச்சிடப்பட்ட புத்தகங் கள், பத்திரிகைகளில் அச்சுப் பிழை திருத்திக் கொடுத்தும் ஜீவனஞ் செய்து வந்தார். அக்காலத்தில் அவர் வெளியிட்டு வந்த மாயா வாத பத்திரிகைகளை வாசித்து அம்மதக் கோட்பாடுகளில் சில கற் றுணர்ந்தார்.

---

## நா. கதிரைவேற்பிள்ளை காமவிகாரத்தா லிடர்பட்டது.

---

பின்னர்ச் சிலகாலஞ் சென்னைக் கிறிஸ்டியன் காலேஜில் தமிழ் உபாத்தியாயர்களுக்குப் பதிலாக வேலைபார்த்து வந்தார். அது கா லத்தில் குசப்பேட்டையில் ஜலமெடுக்க வந்த ஓர் பள்ளிப் பெண்ணை சைகை செய்து அழைக்கவும் அதைக் கண்டிருந்த அவள் கணவன்

இவரை உதைத்து அடிக்கவும் அருகிருந்தவர்கள் இவர்கள் சண்டையைவிலக்கி இவருக்குஞ் சமாதானஞ் சொல்லி யனுப்பிவிட்டார்கள்.

1897-ம் வருடத்தில் வேப்பேரி ஸ். பி. ஜி. ஹைஸ்கூலில் கீழ் வகுப்புப் பிள்ளைகளுக்கு உபாத்தியாயராக வேலைபார்த்து வந்தார். அக்காலத்தில் சென்னைப் பெத்துநாயக்கன் பேட்டையிலுள்ள சைவ சித்தாந்தசரப மென்னப் பெயர் பெற்று விளங்கும் அஷ்டாவதானம் பூவை - கலியாணசுந்தர முதலியாரை அடுத்து அவரிடஞ் சில சைவ சித்தாந்த நூல் பயின்று அவர் பிரசங்கஞ் செய்யு மிடமெல்லாம் இவரும் உடன் சென்றிருந்து அவர் செய்யும் பிரசங்க முறைகளைக் கற்றுணர்ந்து அவர் பிரசங்கித்துவிட்டவுடன் இவருஞ் சிற்சில உபந்நியாசஞ் செய்யப் பயின்றனர்.

அக்காலத்தில் குசப்பேட்டையில் வீடு கூட்டும் ஓர் சான்ருன் மகளை இவர் கைப்பிடிக்கவும், அவள் இவரை வாரியா லடிக்கவும், அதைக் கண்டிருந்த சான்ருர்கள் இவரை நையப்புடைத்துப் போலீசில் கொண்டுபோக, இவர் 7 ரூபா அபராதமும் விதிக்கப் பெற்ருர். இதன் உண்மை சென்னைப் பிரிசிடென்ஸி மாஜிஸ்திரேட்டு 1904-ம் வருஷத்திய 14-575-வது காலண்டர் நெம்பரில் இவர் கொடுத்த வாக்குமூலத்தா லறியலாம்.

" I was fined 6 or 7 years ago for an assault on a woman. "

1898-ம் வருஷத்தில் இவர் மைலாப்பூர் சென்ட் தோமையார் ஹைஸ்கூலில் தமிழ் உபாத்தியாயராகப் போ யமர்ந்தார். அக்காலத்தில் குசப்பேட்டைக் கந்தசாமி கோயிலில் காஞ்சிபுரம் வித்வான் சோணுசலக் கவிராய ரென்பார் பெரிய புராணத்தில் திருநீலநக்க நாயனூர் சரித்திரப் பிரசங்கஞ் செய்து வருகையில், கதிரையார் அவ்விடஞ் சென்று குதர்க்க வாதஞ் செய்து காலக்ஷேபம் நடக்க வொட்டாமல் தடைசெய்தனர். பிரசங்க முடிவில் உமக்குச் சமாதனஞ் சொல்லுவோமெனப் புராணிகர் சொல்வதையுங் கேளாமல், சபையார் அபிப்பிராயத்தையும் நோக்காது, வம்புக்கு வாதிட்டார். அச்சபையிலுள்ளார் ஒருவர் இவரைப் பிடரியைப் பிடித்து வெளியே தள்ளி அவமானப்படுத்தினூர்.

அக்காலத்தில் கதிரையார் சூளையில் வைதிக சைவ சித்தாந்த சண்டமாருதம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகரிடஞ் சென்று அவரை அடுத்து அவர் செய்துவந்த மாயாவாத கண்டனங்களையும் வைணவ மத கண்டனங்களையுஞ் சிறிது கற்றுணர்ந்தார். இவ்வாருகத்

தொண்டைமண்டலத்திலுள்ள சமூகங்களில் பழகி அவர்களைப்போல இவரும் பற்பல விடங்களில் பிரசங்கஞ் செய்யத் தலைப்பட்டார்.

1899-ம் வருஷத்தில் குயப்பேட்டையில் நடேசப்பிள்ளை என்பாரொருவர் சீமையில் கடிதத்தினால் செய்யப்பட்டு வந்த விளையாட்டுச் சாமான்களில் ஒன்றாகிய விநோதமாயுள்ள க்ஷவர கத்தியின் வேலைத் திறத்தை இவரிடங் கொண்டுவந்து காண்பித்தார். அதைக் கண்டு மகிழ்ச்சி யடையாது இதைக் கொண்டுபோனால் உன் மனையாளுக்கு வேலைசெய்ய உதவுமென்றார். நடேசப்பிள்ளை உடனே சீற்றங்கொண்டு இரைச்சலிட் டெழுந்தனர். அருகிருந்தா ரெல்லாரும் இவரைப் புடைத்து வெளியே தள்ளிக் கற்களைவாரி யடித்தார்கள். அக்கற்களி லொன்று இவர் புருவத்திற்பட்டு உதிரம் பெருகி ஓர் பெரிய காயத்தை உண்டாக்கியது. அது அவர் மரணபரியந்தம் மறையாதிருந்தமை யாவரு மறிந்ததொன்றே. கதிரையார் அன்றே அவ்வீதியை விட்டு வேப்பேரி சிதம்பர முதலியார் அச்சாபீசில் போய்ச் சேர்ந்தார். பின் அவர் சம்ரக்ஷணையிலிருந்து யாழ்ப்பாணப் பேரகராதி ஒன்று 1894-ம் வரு வெளியிட்டார். அதில் வேளாளர் வைசியரென் றிருப்பதை மாற்றிச் சூத்திரரென அச்சிட்டார். ஷை முதலியார் இவரது மாறுபாட்டை யறிந்து பழய பிரதியின்படி வேளாளர் வைசியரென 1901-ம் வரு இரண்டாம் பிரதி அச்சிடுவித்தார்.

பின்னர் இக்கதிரையார் தமது ஜீவனத்துக்குத்தக்க வருவாயின்மையால் நாம் செய்யத் தகுவதென்னையென யோசிக்கலாயினர். "ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்குப் பிழைப்புண்டாம்" எனப் பழமொழி யிருப்பதால் சூளை, படவேட்டம்மன்கோயில், அயனவரம், புரசைபாக்கம், சிந்தாத்திரிப்பேட்டை இவை முதலிய ஒதுக்கான இடங்களில் எழுத்து வாசனை யறியாத ஏழை மதியினர்களையுஞ் சிறுவர்களையும், கரையார், பூசாரிகள் முதலிய இழிஜனங்களையும் ஆங்காங்குக் கூட்டங் கூட்டிச் சைவ சித்தாந்த சஞ்சீவினி சபை, வேதாந்தப் பிரசங்க சபை, சுத்தாத்வைத சைவ சித்தாந்த சபை என இவ்விதமாக உலகத்தார் பிரமைகொள்ளும்படி பற்பல சபைகள் ஏற்படுத்தி அவர்களுள் தனவந்தராயுள்ள ஒவ்வொருவரையும் அவ்வச் சபைகளுக்குக் காரியதரிசிக ளாக்கி அவர்களுக்கு ஒவ்வோர் பட்டமுங் கொடுத்து அச்சபைகளுக்கெல்லாந் தாம் சபா நாயகராயிருந்து பிரசங்கஞ் செய்து அவர்கள் தமக்குப் பற்பல பட்டங்கள்

கொடுத்ததாகத் தாமே பட்டங் கட்டிக்கொண்டும், பலவிதமான வரும்படி செய்துகொண்டும் ஜீவித்து வந்தார்.

இவர் இச்சபைகளில் பிரசங்கஞ் செய்யும்போது சிவபெருமானது பெருமையினையும், அவனை யடையும் மார்க்கத்தையும், சைவ சித்தாந்தத்தி னுண்மைப் பொருளையும் எடுத்து விளக்கி ஜனங்களுக்குப் பொது நன்மையைப் பயப்பியாது மாயா வாதத்தையும் வைணவத்தையும் வரம்பு கடந்து கண்டித்தும் மதத்துவேஷத்தையும் வீராவேசத்தையும் வளர்த்து வந்தனர்.

அந்தந்த மதத்தார்கள் வாதிக்க வந்தால் அவர்கள் அரைப் பேதை கற்பேதையா யிருந்தால், குதர்க்க வாதஞ் செய்து ஓட்டிவிடுவார். கிஞ்சித்து வல்லவராக வந்தால், வேறு காலத்தில் வாதஞ் செய்வாமென்றும், சபைத் தலைவன் சரியானவனல்லன், அவனை நீக்கி வேறொருவனை வைக்கவேண்டுமென்றும், தர்க்க லக்ஷணந் தெரியாதவனோடு நாம் வாதிக்கமாட்டேமென்றும், விதண்டா வாதஞ் செய்து, சாக்குச் சொல்லித் தப்பித்துக்கொள்வர். தமக்கு எதிர் கக்ஷியார் வாராத காலத்தில் ஊமைக்கு உளறுவாயன் உற்பாதபிண்ட மென்பதுபோலக் கரடு முரடாயுள்ள சில சங்கச் செய்யுட்களைப் பாடஞ் செய்துகொண்டு அவற்றைப் பிரசங்க காலத்தில் மழை பொழிவதுபோலப் பிரசங்கமாரி பொழிவர். அக்காலத்தில் சபையிலுள்ள சாமானியர் இவர் கல்வித் திறத்தை யாவரால் அளவிட் டறியக்கூடுமென நினைத்து இவரை இணையற்ற வித்வானெனக் கொண்டாடுவர்.

இதுகாலத்தில் யாழ்ப்பாணத்திலுள்ள ஒருவரால் பாடப்பட்ட கதிர்காமக் கலம்பகம் என்னும் ஓர் சிறிய நூலை அச்சிட்டு வெளிப்படுத்தினர்.

---

## மாயாவாதச் சண்டை விளைத்தது.

---

( 12 - 8 - 1897 ) இக்கதிரையார் மாயாவாதிகளை வென்றுவிட்டதாகவும், அதனால் பற்பலவித ஜன சமூகத்தில், ஈழ நாட்டுச் செந்தில்காதையர் இவருக்கு "மாயாவாத தும்ஸ கோளரி" பட்டம் அளித்ததாகவும், அப்பட்டம் இவருக்கு இராஜாங்கத்தாரால் உறுதி செய்யப்பட்டதெனவும் ஜெயபேரிகை யடித்து வந்தனர். சிவஞான

போதம், சிவஞானசித்தியார் முதலிய ஒவ்வொரு சைவ சித்தாந்த நூற்களிலும் மாயாவாதஞ் சண்டிக்கப்பட்டிருப்பதை யாவரோ யறியார்? இச்சென்னையில் மாயாவாதங்களில் சமர்த்தர்களாயிருந்த சை. இரத்தின செட்டியார், சச்சிதானந்தப்பிள்ளை, சிதம்பரம் ஸ்ரீநிவாச சாஸ்திரியார் இவர்களை யெல்லாம் மாயாவாதத்தில் வென்று இளஞ் சிங்கவேறென எதிரற் றுலாவிநின்ற ரூளை - சோமசுந்தர நாயசர் தாம் இவ்விசமான பட்டமேதேனுஞ் சூட்டிக்கொண்டனரா? அவரைவிட இவர் வாதத்தில் சமர்த்தரா? ஸ்ரீநாயகர் எழுதிவைத்த புத்தகங்களைப் பாடஞ் செய்துகொண்டு இவர் தமது சீடர்களாயுள்ள கதிரையாரும் பூசாரிகளும் நிறைந்துள்ள சபையில் சாஸ்திரங்களில் பூரண ஆராய்ச்சி யில்லாத ஓர் பிராமணனை வென்றதினால் இக்கதிரையாருக்கு அவ்வித பட்டம் நிலைபெறுமா? தியாஜாபிச்கல் ஹைஸ்கூல் பண்டிதர் வடிவேல் செட்டியாரும் அவர்போன்ற சிலரும் இவர் செய்யும் பிரசங்கத்தில் வந்தெதிர்த்தபோது அவர்கள் கேள்விக்கு விடைகூற வகையறியாது பூனையைக் கண்ட எலிபோல அஞ்சி நடுநடுங்கி வீட்டிலுள்ள ஓர் அறையில் புகுந்து கதவடைத்துத் தாளிட்டுக்கொண்ட இவர் தாமோ மாயாவாத தும்ஸ கோளரி யாவர்? தாயானவள் தன் பிள்ளையை ஆசை மிகுதியால் எனது "இராஜாவே" எனக் கொண்டாடின் அக்குழந்தையை உலகிலுள்ளோர் உலகை யாளும் இராஜனெனக் கொள்வரோ? ஒருபோதுங் கொள்ளார். செந்தில்நாதையாரும் ஈழநாட்டாராயிருந்ததினாலும், கதிரையார் இவர் சீடரா யிருந்ததினாலும் அவ்வபிமானத்தினால், செந்தில்நாதையர் இவருக்கு மாயாவாத தும்ஸ கோளரியென்னும் இவ்விதப் பொருந்தாப் பட்டமளித்தாரெனினும் அதனை உலகத்தார் ஒப்புவாரா? இவ்விதப் பட்டம் இராஜாங்கத்தாரால் தமக்கு உறுதிசெய்யப்பட்டதெனக் கூறுவது பெரும் பித்தேயாம். இராஜாங்கத்தார் இவரை மாயாவாதத்தில் பரிக்ஷை செய்தனரா? அல்லது பரிக்ஷை செய்வித்தனரா? அல்லது இவரைப் பரிக்ஷை செய்து பட்டமளிப்பது இராஜாங்கத்தார் தொழிலா? அவர்கள் அப்பட்டத்தை இவருக்கு எவ்வாறு உறுதிசெய்தனர்? இராஜாங்கத்தார் வாக்குமூலம் வாங்கும்போது யார் யார் என்ன சொல்லுகிறார்களோ அவ்வண்ணம் ஏட்டில் பதியவேண்டியவர்கள்தாமே. வேறென்ன செய்யலாம்? இதனால் இவருக்கு அப்பட்டம் இராஜாங்கத்தாரால் உறுதிசெய்யப்பட்டதென எவ்வாறு கொள்ளக்கூடும்?

## வைணவ மதச் சண்டை விளைத்தது.

1901-ம் ௵ முதல் 1902-ம் ௵ வரையிலும் இக்கதிரையார், ஞானசோமசுந்தர நாயகர் திரட்டிவைத்த வைணவ மத கண்டனங்களைப் பாடஞ் செய்துகொண்டும் பாம்பன் குமரகுரு சுவாமிகள் ஆதரவைக்கொண்டும், புரசைபாக்கம், மயிலாப்பூர், சென்னை முதலிய பற்பல இடங்களில் சபை கூட்டி வைணவச் சண்டை மூட்டிப் பிரசங்கித்து வந்தனர். எதிர் கக்ஷியில் ஏகாங்கியார் முதலானோர் வேறு இடங்களில் சபை கூட்டி எதிர் வாதஞ் செய்து வந்தனர். இவ்விரு கக்ஷியாரும் எதிரிகள் வாதத்திற்கு வரலாமென்று பத்திரிகை மூலமாய் அறைகூவி யழைத்ததே யன்றி ஒருவர்க் கொருவர் எதிர்நின்று வாதஞ் செய்ததின்றும்.

இக்கதிரையார் 1898-ம் ௵ அச்சிட்ட ஏகாதசி புராண பதிப்புரையில் " சைவமொன்றும், வைஷ்ணவமொன்று மிருப்பாருட் சிலர் சிவன் விஷ்ணு வென்பன பரப்பொருளொன்றனையே குறித் துரைக்கப்படும் இருதிரு நாமங்களென் றுணராமையானும், தத்துவ வாராச்சியிற் றலைப்படாமையானும், " ஊற்றிருந்து நறவொழுகுந் தளவத்தாரோ யுனையிகழ்ந்தோ ரெமை யிகழ்ந்தோர் " எனக் காசி காண்டத்தும், " வெள்ளை யறிவின் மாயோனை வெருளி லீசன் வெகுளுமால் " எனக் கூர்ம புராணத்தும், " ஓலிடு புராரியு முராரியு முணர்ந்தோர்க், கேலுற வொரோ பொருளெனும்படித் தெளிந்தான் " எனப் பாரதத்தும், ஆரணாக மாதி கலைகளினும் அறையப்பட்டனவற்றை அறியாமையானும், மாறி மாறித் தூஷித்து மயங்கா நிற்பர். இவர்க்கு நன்மதி காட்டி யுய்க்குந்தாம் பராபர பரமேயாம் " என இவரே எழுதியிருக்கின்றனர். இவர் அக்காலத்தில் சிவனுக்கும் விஷ்ணுவுக்குஞ் சமரசங் காட்டி எழுதியதென்னை? இக்காலத்தில் பற்பல சபை கூட்டி விஷ்ணுவை நிந்தித்தது மன்றி 1902-ம் வருஷத்தில் தாம் எழுதிய சைவபூஷண சந்திரிகை யென்னும் நூலில் அளவு கடந்து தூஷித்து அச்சிட்டதென்னை? என ஆராயுமிடத்தில் வயிறு வளர்ப்பதற்கே யென வெளியாகின்றது. முற்காலத்தில் வைணவர்கள் பொருளுதவி செய்தமையால் ஆங்குச் சமரசங் கூறி எழுதினர். இக்காலத்தில் சைவர்களிடம் பொருள் பெறும் நிமித்தங் கக்ஷி யுண்டாக்கி வைணவ தூஷணை செய்ய வாரம்பித்தாரென வெளியாகின்றது.

இவ்விதமாகக் கதிரையார் சென்னை, அயனாவரம், குயப்பேட்டை முதலிய இடங்களில் ஜனங்களைக் கூட்டி ஆங்காங்குச் சபை சேர்த்துப் பிரசங்கஞ் செய்து சைவம், வைணவம், மாயாவாதம், திருவருட்பா முதலிய விவகாரங்களைப்பற்றிக் கக்ஷிகளுண்டாக்கிச் சண்டைகளை மூட்டி அதனால் தமக்கு வருமானங்கள் ஏற்படுத்திக்கொண்டு ஜீவித்து வந்தார்.

அதன் பின்னர் கண்டிகதிர்காம வேலருக்குத் தங்கவேல் செய்ய வேண்டுமென்று சில பொருள் சேகரித்தார்.

சில நாட் கழிந்த பின்னர் "உண்டி வினைக்காளின்மையால் நான் வருந்துகின்றேன், விவாகஞ் செய்துகொள்ளவேண்டு"மெனச் சுமார் 400-500 ரூபா வரையில் பொருள் சேகரித்தார்.

இவ்விருவகைப் பொருளையுங் கொண்டு தமது இருப்பிடமாகிய யாழ்ப்பாணம் போய்ச் சேர்ந்தார். இது இவ்வாறிருக்க, முற்காலத்தில் கதிரையார் யாழ்ப்பாணத்தில் மோசஞ் செய்துவந்த முதலாளி ஆ. வேலுப்பிள்ளை நீதித்தலத்தில் வாங்கிவைத்திருந்த வாரண்டில் பிடிபட்டுச் சென்னையிலிருந்து கொண்டுபோன பணத்திலிருந்து செலவு செய்து அபராதங் கொடுத்து மீண்டு வந்தார்.

சில நாள் அங்கிருந்து பின்னர் மனைவியையும் மகளையும் அழைத்துக்கொண்டு ஆகஸ்ட்டு மீ சென்னை வந்து சேர்ந்து புரசைபாக்கம் முத்தியாலு நாடக்கன் தெருவில் வீடு அமர்த்தி அதில் குடிபுகுந்திருந்தார்.

கண்டி கதிர்காம வேலருக்குத் தங்கவேல் செய்வதற்காகச் சேகரித்த பொருளை இவர் தமது சொந்த காரியத்துக்கு உபயோகித்துக்கொண்டதை யோசிக்குமளவில் கடவுள் ஒருவரில்லையென்பது இவரது துணிபேபோலும்! ஆறுமுக நாவலர் தமது யாழ்ப்பாண சமய நிலை 24-வது பிரிவில் "கடவுள் இல்லை, ஆன்மா வில்லை, மோக்ஷமில்லை, நரகமில்லையென வாதித்தல், பாம்புக்குத் தலை காட்டி மீனுக்கு வால் காட்டும் மலங்குபோலச் சைவருக்குச் சைவராயுங் கிறிஸ்தவருக்குக் கிறிஸ்தவராயும் நடித்தல் யாழ்ப்பாணத்தில் தலைப்பட்டோங்குகின்றது" எனக் கூறியது அவரது மாணாக்கரின் மாணாக்கரான இவரிடத்தே விளக்கமாகின்றது. அதனால் இக் கதிரையார் விபூதி ருத்திராக்ஷந் தரித்ததும், சைவப் பிரசங்கஞ் செய்ததும் நாடக மாத்திரையாமென விளங்குகின்றது.

இவர் புரசையாக்கத்தில் வசித்து வரும் நாளில் அக்கம்பக்கங் களிலுள்ளாருடன் சண்டையிடுவதும், ஒருவருக்கொருவர் அடித் துக்கொள்வதுஞ் சுபாவத்தி லேற்பட்டிருந்தது. இவர் குடியிருந்த விற் கருகில் நால்வர் பரமாசிரியர் சபையெனச் சிலர் ஓர் சபை த்திக் காலக்ஷேபஞ் செய்து வந்தார்கள். அதில் இவர் பிரவே அதிலுள்ள சபைத் தலைவரை நீக்கித் தம்மைச் சபைத் தலைவ கொள்ளவேண்டுமென்று அங்கிருந்த ஒருவர்க்கும் அவர் மக ரும் ஆகவொட்டாமற் கலகம் விளைத்துச் சண்டை யுண்டாக்கியும் அது காரணத்தால் தாமுந் தாம் குடியிருந்த தெருவாரிற் சிலரும் வீட்டுக் கூரைமேலிருந்த ஓட்டைப் பிடுங்கி எறிந்து ஒருவரோடொரு வர் அடித்துக்கொண்டும், எழும்பூர் பிரசிடென்ஸி மாஜிஸ்திரேட்டு கோர்ட்டில் இருவராலும் பிரியாது செய்யப்பட்டுப் பின்னர் சமா தானம் விரும்பி மீண்டனர். இதனுண்மை “பன்னிருபொய் யகற்றல்” என்னும் பத்திரிகையில் விளக்கப்பட்டிருக்கின்றது. ஆண்டுணர்க.

இஃதன்றியுந் தாம் குடியிருந்த வீட்டை மராமத்துச் செய்து கொடுக்கச் சொல்லி வீட்டுக்காரருக்குச் செலவு வைத்ததுமன்றி வீட்டு வாடகையில் 50 ரூபா வரை கொடாமலே அந்த வீட்டை யொழித்துவிட்டு வேளாளத் தெருவில் வீடமர்த்திக்கொண்டுபோய்ச் சேர்ந்தார்.

---

## புத்தமதச் சண்டை விளைத்தது.

---

1903-ம் ௵ ஜுன் மாதத்தில் இக்கதிரைவேற்பிள்ளை புத்தமத கண்டனமென ஓர் சுவடியை எழுதி அச்சிடுவித்துப் பல பிள்ளைகளையுங் கரையார் பூசாரிகளையுங் கூட்டி வைத்துக்கொண்டு புத்தமத கண் டனஞ் செய்கிறேமெனப் புரளிப் பிரசங்கஞ் செய்தார். இவரை எந்தப் புத்தர்கள் வந்தெதிர்த்தார்கள்? இவர் எவரை வாதில் வென் றார்? காரணமின்றி இவ்வாறு செய்ததானது முன்னர் மாயாவாத தும்ஸ கோளரியென்றும் அத்துவித சித்தாந்த மதோத்தாரணரென் றும், ஆரணி சமஸ்தான வித்வான் என்றும் நான்காஞ் சங்கப் புலவ ரென்றும் பற்பல பட்டாபிதானங்களை வகித்துக்கொண்டதுபோலச் சம்பந்த சுவாமிகளுக் கேற்பட்டுள்ள “ பரசமய கோளரி ” என்னும் பட்டம் பெறுதற்காக வென விளங்குகின்றது.

ஆதிகாலத்தில் நமது தமிழ் அரசில் "கோல் எவ்வழியோ? குடியவ்வழி!" என நடந்து வந்தது யாவருமறிந்ததொன்றே. உருக்குமாங்கத வரசன் வைணவ சமயத்தனா யிருந்ததினால் ஏகாதசி [illegible]தத்தைத் தானனுஷ்டித்து வந்தபடியே குடிகளுங் கொ[illegible] வேண்டுமென்று பறை யறைவித்து நிற்பந்தப்படுத்தி நடத்[illegible]னென்றும், அதனால் அவன் நாட்டிலுள்ளா ரெல்லாரும் வை[illegible]மடைந்தார்களென்றும், அதனால் எமலோகம் ஒருவருமில்லா[illegible]ழடைந்து விட்டதென்றும் புராணங்களி லிருப்பதைக் கண்டி[illegible]றோம். அதனால் அரசன் வைணவ மதமானால் சைவங் குன்றி வைணவ மேலோங்கும். அரசன் சைவ மதமானால் சைவமத மோங்கி வைணவங் குன்றும். அதுபோலப் பாண்டியன் சமண மதம் புகுந்த காலத்துச் சமணோங்கிப் பூசை நைவேத்திய மின்றிச் சிவாலயங்களெல்லாம் மூடப்பட்டிருந்தன. சிவானுக்கிரகத்தினால் மாணிக்கவாசக சுவாமிகளும், சம்பந்த சுவாமிகளும் அவதரித்துப் புத்த சமண மதங்களை யழித்துச் சைவத்தை நிலைநிறுத்தினார்கள். அதனால் தேவாரத்து ஒவ்வோர் பதிகங்களினும் புத்தர் சமணர் வழிபோகாதீர் எனக் கட்டளை யிடப்பட்டிருக்கிறது. திருவாசகத்திலும் அவ்வாறே புத்த சமண மதங்கள் கண்டிக்கப்பட்டிருக்கின்றன. தேவாரந் திருவாசகம் வாசிக்கும் ஒவ்வொருவரும் புத்த சமண மதங்களை ஒரு பொருளாகக் கனவிலும் நினைப்பதில்லை. இக்காலத்திலோவென்றால், ஆங்கிலேயர் அரசாக்ஷியில் தாங்கள் கிறிஸ்தவ மதத்தராயிருந்தும் ஏனைய மத வாதிகள் தங்கள் தங்கள் மதங்களைப் போற்றி வரும்படி காத்துவருகிறார்கள். அதனால் இக்காலத்தில் சைவ சமாஜம், வைணவ சமாஜம், புத்த சமாஜம், பிர்ம சமாஜம் என ஏற்பட்டு அந்தந்த மத கோட்பாட்டின்படி பிரசங்கங்கள் நடந்து வருகின்றன. தமி ழறியா மிலேச்ச தேசங்களில் எனவே சீனம், பிர்ம தேசம், வடவிந்தியா, ஈழ நாடு முதலிய விடங்களில் பௌத்தஞ் சமணம் மிகுதியாகக் கொண்டாடப்பட்டு வருகின்றன. இத்தொண்டைமண்டலத் துள்ள 79 நாடுகளிலுஞ் சமணர், கோயில் கட்டிப் பூசித்து வருகிறார்கள். ஆகினுஞ் சைவம் மிகுந்திருப்பதினால் பழக்க வாசனையால் சமணரும் புத்தரும் தங்கள் மதத்தில் அருவருப்புத் தோன்றி அநேகர் சைவராகிவிட்டார்கள். அவர்களை நீறுபூசி வேளாளரெனக் கூறுகிறார்கள். இப்படிப்பட்ட காலத்தில் இவர்களை ஓர் பொருட்படுத்தி இவர்கள்மீது இக்கதிரையார் தண்டெடுத்து வந்த காரணமென்னையோ? நம்முடைய மதத்திற்கு நேர் விரோதி

கள் கிறிஸ்தவர்களாக விருக்கின்றார்கள். அவர்களது வித்யாசாலைகளில் வாசிக்கப்போகிற நம்முடைய சிறுவர்களைத் துற்போதனை செய்து தாய் தந்தையர்களுக்கு உதவாதபடி தங்கள் மதத்தி லிழுத்துக்கொண்டு சைவராயுள்ளவர்களை யெல்லாம் பறையரிடத்தில் மதுமாமிசங்கள் உண்ணச் செய்து மிலேச்சராக்கிவிடுகிறார்கள். இவ்வளவு தீங்கு செய்யும் கிறிஸ்தவர்களது மதத்தைக் கதிரையார் கண்டனை செய்து சீர்திருத்தஞ் செய்யாது அக்கிறிஸ்தவர்களுக் குதவியாயிருந்து அவர்களது வேதபுத்தகங்களைச் சீர்திருத்திக் கொடுத்துஞ் சைவ சமயங்களுக்கு விரோதமான பத்திரிகைகள் எழுதிக் கொடுத்தும் வந்த இவர்தாமோ புத்த மதத்தைக் கண்டிக்க வெளிவந்தவர்? இவர்தாமோ சுத்த சைவராவர்? யாவர் மெச்சும்படி இப்புத்தமத கண்டனம் எழுதி விடுத்தார்? எல்லாஞ் சாண் வயிறு வளர்க்கவென்று விளங்கவில்லையா? இவர் கிறிஸ்தவ மதங் கண்டிக்கப் புகுந்தால் நீர் ஆதியில் நமது கிறிஸ்தவர்களில் ஒருவராயிருந்த நமது ஸ்ரோங்கு கனகரத்தினம் வீட்டில் உண்டு வளர்ந்ததை மறந்து உண்ட வீட்டிற்கு இரண்டகஞ் செய்யலாமா? எனக் கேள்வி நிகழுமென்றஞ்சி யன்றோ கிறிஸ்தவமத கண்டனஞ் செய்யா தொழிந்தார்.

---

## ஜாதி சண்டை விளைத்தது.

---

## (1902—1903)

1902-ம் வருஷத்தில் வருண சிந்தாமணியென ஓர் நூல் வெளிவந்தது. அதில் வேளாளர் வைசியராமென ஆரியத்திலும் திராவிடத்திலுமுள்ள பிரபல பிரமாணங்களை ஆதரவாகக் காட்டி எழுதப்பட்டிருந்தது. இக்கதிரைவேற்பிள்ளை அப்பிரமாணங்களைச் சற்றும் மதியாது வேளாளர் சூத்திர ராவாரன்றி வைசியராகாரென 3 வருஷகாலமாகப் பற்பல பத்திரிகைகளெழுதி ஆரவாரித்துத் திரிந்தனர். ஆனால் இவர் கண்டனங்களெல்லாம் கல்வி கேள்விகளிற் சிறந்த பல பெயரால் மறுக்கப்பட்டு வந்தன.

அவ்வளவில் நில்லாது வேளாளர் சூத்திரரே! என ஸ்தாபிக்கிறோம், அதற்காக நாம் 1000 ரூபா பந்தயங் கட்டுகின்றோம்; எவரேனும் அவர் வைசியரே யாமென ஸ்தாபிக்க வல்லாராயின் நம் முன்வந்து வாதிக்கலாமென விளம்பர மிட்டனர். அதை யாரும் பொருட்

படுத்தவில்லை. பிறகு 28-5-1903-ம் வருஷத்தில் இவர் மதுரை சங்கத்திற்குப் போனபோது ஆண்டுள்ள வித்வசிரோமணிகளால் இவர் மதம் மறுக்கப்பட்டு இவர் ஓட்டம் பிடித்தனர்.

பின்னர் ஷை ஷ ஜுன் மாதத்தில் இவர் மதுரை சிவஞான தீபச்சபையார் பெயரால் அச்சிட்டு வெளிப்படுத்திய ஜாதிப்புரட்டர் என்ற ஓர் துண்டு பத்திரிகையில் ஆண்டுள்ள சாஸ்திரிகளெல்லாம் யானைக் கூட்டங்களென்றும், கவிராயர்களெல்லாம் குரங்குக் கூட்டங்களென்றும் பற்பல தூஷணங்கள் செய்து அவ்வித்வ சமூகத்தாரோடு பகைகொண்டனர்.

5-8-1903 வருஷத்தில் ஜாதிப்புரட்டர், ஈழநாட்டுக் கதிரைவேற்பிள்ளையே யன்றிச் சோழநாட்டு வித்வான்கள் ஒருபோதும் சாதிப் புரட்டராகாரெனத் தேவாரம் - முத்துசாமி முதலியார் பல பிரமாணங்களை எடுத்துக்காட்டி இவர் மறுப்பைக் கண்டித்து 5-8-1903 வருஷத்தில் "ஜாதிப்புரட்டர் யாவர்?" என ஓர் பத்திரிகை எழுதி வெளியிட்டார்.

இவ்விதமாக 1901-ம் ஷ முதல் 1904-ம் ஷ வரையில் வேளாளர் சூத்திரரோ யென்று சோழ நாட்டில் வாதஞ்செய்த இக்கதிரையாரே யாழ்ப்பாணத்தில் போயிருந்தபோது மேலைப்புலோலியில் வேளாளர் வைசியரோ யன்றிச் சூத்திரராகாரென 5-4-1905-ம் வருஷத்தில் வாதிட்டார். இதனால் இவர் சாதி, சமயங்களி னுண்மை யறியாதவரெனச் சித்தாந்தப் படுத்தப்பட்டது.

பின் இச்சாதி சண்டையில் தக்க வரும்படியில்லாமைகண்டு தெய்வத் திருவருட்பதிவால் அருந்தவ முதிர்ந்த பெருந்தகை வள்ளலாரென்னும் ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகள் மீதும், அவரால் அருளிச் செய்யப்பட்ட திருவருட்பா மீதும் குற்றங் கூறிக் கலகம் விளைக்கத் தலைப்பட்டார்.

## திருவருட்பாமீது சண்டை விளைத்தது.

### ஈழநாட்டார்க்கும் இராமலிங்க சுவாமிகளின் கூட்டத்தார்க்கும் பகைநேர்ந்த காரணம்.

ஈழநாட்டு ஆறுமுக நாவலர் ஆதியில் சென்னையில் வந்து பிரசங்கஞ் செய்தகாலத்தில் அவர் தம் நண்பரும் இனத்தவருமாகிய

ஈழநாட்டு சி. வை. தாமோதரம் பிள்ளை B. A.; B. L. என்பார் ஒருவர் அவரது பிரசங்கத்தைப்பற்றி வேங்கடம் முதல் ஈழதேச பரியந்தம் தமிழ் வித்வான்களுள் ஆறுமுகநாவலர் இணையில்லாதவரென் றும் சிவஞானச் செல்வரென்றும் சில பத்திரிகைகளில் சிறப்பித் தெழுதி வெளியிட்டனர். இது இந்தியாவின் உண்ணாட்டு வித்வான் கள் யாவரையும் அவமதித்ததாக அன்னார் கோபாவேசத்தை யெழுப் பிவிட்டது.

அதைக்கண்ட இராமலிங்க சுவாமிகளின் கூட்டத்தாருள் ஒரு வரும், சென்னை பச்சையப்பன் கலாசாலைத் தமிழ்ப்பண்டிதருமாகிய நரசிங்கபுரம் வீராசாமி முதலியார் என்பார் ஒருவர், இச்சென்னையின் இந்நாவலரினுஞ் சிறந்துள்ளவரான விசாகப் பெருமாள் ஐயர்; சரவணப்பெருமாள் ஐயர், மகாலிங்க ஐயர், காஞ்சிபுரம் சபாபதி முதலியார், அஷ்டாவதானம் சபாபதி முதலியார், சோடசாவதானம் சுப்பராய செட்டியார், இராமாநுஜ கவிராயர், தொல்காப்பியம் வரதப்ப முதலியார், கோமளபுரம் இராஜகோபாலப் பிள்ளை, உபய கலாநிதிப் பெரும்புலவர் தொழூர் - வேலாயுத முதலியார் முதலிய வித்வான்கள் பற்பலர் இருக்கவும், இத்தாமோதரம் பிள்ளை இவ்வாறு வெளியிட்டது தகாதெனக் கருதி இவர் மதியீனத்தைக் கண்டித்து இவருக்கு நற்புத்தி விளக்குமாறு ஓர் பத்திரிகையில் கண்டனம் எழுதி விடுத்தனர். அதுவருமாறு :—

அப்பத்திரிகையில் ஆறுமுக நாவலர் இணையில்லாத வித்வா னென்றெழுதியது உண்மையேயாம். யாமும் ஒப்பினேம், எவ்வா றெனின் :

கல்வியே கற்புடைய பெண்டிரப் பெண்டிர்க்குச்
செல்வப் புதல்வனே யீர்ங்கவியாச் - சொல்வள
மல்லல் வெறுக்கையா மாணவை மண்ணுறுத்துஞ்
செல்வமு முண்டு சிலர்க்கு.

என நீதிநெறி விளக்கக்காரருங் கூறி யிருக்கின்றார். ஈண்டு நாவலரைக் குறித்த இணை என்பது துணை, அத்துணையாவது பெண் டீர், இல்லாதவர் என்றது கல்வி என்னும் பெண்டீர் இல்லாதவர் எனப் பொருளாகின்றது. இவர் நாவலர் என்ப பட்டாபிதானம் பெற்றிருப்பதால் கல்வியுடையார் எனக் கூறின் மேற்படி செய்யுளில் "செல்வப்புதல்வனே யீர்ங்கவி" எனக்கூறி யிருத்தலின் இந்நாவல ரால் யாதொரு காவியங்களும் வெளிப்படாமையின் இவர்க்குக் கவி

யென்னும் புத்திர வில்லாதவ ரென்றும், புத்திரனில்லாமையானே மோக்ஷமில்லை யென்றும் நாவலரை ஏளனஞ்செய்து எழுதியிருந்தது.

இது காரணத்தானே, ஆறுமுக நாவலர், இராமலிங்கப் பிள்ளையே இதற்குக் காரணமாயிருக்கவேண்டு மென்றெண்ணி, இவர் நால்வர் சமயாசிரியர்களோடு சமத்துவமானவ ரென்றும் இவர் பாடல்களே அருட்பாவென்றும், அவர்பாடல்களினும் தமது பாடல்களே சிறந்துள்ள தென்றும், இவர் பாடல்களையே ஆன்மார்த்த பரார்த்த பூசாகாலத்தும் ஓதவேண்டுமெனத் தாமாகச் சொல்லியும் பிறரைக்கொண்டு சொல்லுவித்தாரென்றும் பலவாகக் கூறி இவரை யும், இவரது திருவருட்பாவையும் ஏதம்பேசிப் பேதமை கற்பித்து எவ்விதத்தும் ஒழிக்கவேண்டுமென அன்றே கங்கணங் கட்டிக்கொண் டார்.

---

## ஈழநாட்டு ஆறுமுக நாவல ரிழைத்த தீமைகள்.

---

ஆறுமுகநாவலர், இராமலிங்க சுவாமிகள் பாடல்களுக்கு அருட் பாவென்ற பெயர் பொருந்தாது. அவை போலி யருட்பாவாம். தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரிய புராணமாகிய இவ்வைந்துமே அருட்பா வென, அச்சடித்து அச் சுவடியின் முதலில் ஒட்டிவைத்தனர். ஈண்டு தா முன்னர் அச்சிட்ட கண்டிகதிர்காம வேலர் பாடல்களுக்கும் காசிதுண்டி விநாயகர் பாடல்களுக்கும் திருவருட்பாப் பட்டஞ் சூட்டியதை மறந்தார் போலும். இதுதான் உலகில் முதல் முதல் தீமைவிளைதற்கு இவரிட்ட வித்தாம்.

17-6-1869-ம் வருஷத்தில் இராமலிங்க சுவாமிகள் சிதம்பரத் தில் வசித்திருந்த காலத்தில் நாவலர் ஆருத்திரா தரிசனஞ் செய்யச் சென்னையிலிருந்து அவ்விடம்போய்ச் சேர்ந்தார்.

பின்னர் ஆலயத்துட்சென்று நடராஜப் பெருமானைத் தரிசிக்க வந்த காலத்தில் தீக்ஷிதர்கள் பெரியவித்வான் வருகிறானெனத் தெரிந் து இவருக்குத் தரிசனஞ் செய்வித்து விபூதிப்பிரசாத மளித்தார்கள். அப்போது நாவலர் தீக்ஷிதர்களை நோக்கி உங்களுக்குச் சிவதீக்ஷை யுண்டா? இல்லையேல், எவ்வாறு சிவபெருமானைத் தொட்டுப் பூசிக்கின்

தீர்கள்? எனச் சில கண்டனங்கள் செய்தனர். உடனே இவ்வீழ நாட்டுச் சான்றான் நம்மையே கண்டிக்கவந்தானென்று வைது அவர் கோயிலைவிட்டு நீங்கினவுடனே சாணப்பால்கொண்டு அவ்விடத்தைச் சுத்தி செய்தார்கள். அம்மட்டில் விடாது, ஆயிரக்கால் மண்டபத்தி லிருந்த இராமலிங்க சுவாமிகளிடத்தில் வந்து நாவலர் என்ற பதத் திற்குப் பொருளுரைக்கவேண்டுமென்றார்கள் அதற்குச் சுவா மிகள் பிரசங்கஞ் செய்வதிலும் பாடுவதிலுந் திறமுடைய நாவினை யுடையானெனப் பற்பல உயர் பொருள்களை விரித்துக் கூறினர். இவ்வீழநாட்டுச் சான்றானுக்கு அவ்வுயர் பொருளுரைத்தல் தகா தெனத் தங்கள் மனதில் நினைத்து இழிபொருள் தரத்தக்க பத்து அர்த்தஞ் சொல்லவேண்டுமென்று கட்டாயப் படுத்தினார்கள். சுவா மிகள் அவ்வாறே பொருளுரைத்தார். அது காரணமாக நாவலர் இந்தச் சுவாமிகளின்மீது அவதூறு குற்றஞ் சாட்டி மஞ்சகுப்பங் கோர்ட்டில் வழக்குத் தொடுத்தார். (18-12-1869) கோர்ட்டார் நாவலர் என்ற சொல் பொதுப் பெயராமாதலின் அதற்கு எவ்விதப் பொருள் கூறினும் அவதூறாகாவென ஒழித்தார்.

பின்னர் நாவலர் இராமலிங்கப் பிள்ளை வடலூரில் இரசவாதஞ் செய்கிறானெனப் போலீசாரைத் தூண்டி யனுப்பினார். போலீசார் அவ்விடஞ் சென்று சோதனை செய்து ஒன்றும் ருசுவாகாமையால் நாணுற்றார்.

1874-ம் ௵ பிப்ரவரி ௴ இராமலிங்கப் பிள்ளை மறைந்த காலத்தில் அவர் தாமிருந்த கூரை வீட்டின் கதவைத் தாளிட்டுக் கொண்டு தற்கொலை செய்துகொண் டிறந்துபோயின னென்றும், அக்கதவைத் திறப்பித்துப் பரிசோதிக்க வேண்டுமென்றும் நாவலர் அக்காலத்தில் தாசில்தாரா யிருந்த சமணமத ஸ்ரீபால ஐயரைத் தூண்டி யனுப்பினர். அத்தாசில்தார் போலீசாருக்குத் தெருவித்தார். டிஸ்திரிக்கட்டு போலீசு சூப்பரிண்டெண்டண்டும் ஓர் பாதிரியாருஞ் சேர்ந்து இத்தாசில்தாரை இட்டுக்கொண்டு வடலூர் வந்து சேர்ந்து அங்குள்ள அவர் சீடர்களைக் கதவந் திறப்பிக்கும்படி கேட்டார்கள். கதவந் திறக்கப்படாதென்பது சுவாமிகளின் உத்தரவு. அஃதன்றிச் சாவி பூட்டி அவ்வீட்டிற்குள் போடச் செய்தனர், அதனால் கதவந் திறக்க எங்களுக் கதிகாரமில்லை, நீங்கள் இராஜாங்கத்தா ரானதால் உங்கள் இஷ்டம்போற் செய்யத் தடையில்லையென்றார்கள். போலீசு துரையும் பாதிரியாரும் வீட்டின்மேலுள்ள விழலை நீக்கியுங் கதவின்

துவாரத்தின் வழியாகவும் ஆக்கிராணித்துப் பார்த்தார்கள். துர்வாசனை யொன்றும் ஏற்படாததினால் மகாத்துமாக்கள் எச்சாதியிலு மிருப்பர்: அதனால் கதவை நாம் திறப்பது தகுதியன்றெனத் திரும்பிப் போயினர். துரைகள் இருவரும் முன்னாகவுந் தாசில்தார் பின்னாகவுங் குதிரைகளின்மீது சவாரி செய்து கொண்டு போகையில் சில தூரஞ் சென்ற பின்னர்த் துரைகள் திரும்பிப் பார்த்தார்கள்; தாசில்தார் குதிரை மாத்திரம் வருகிறது. தாசில்தாரைக் காணாமையினால் ஏதோ ஆபத்து நேரிட்டதென்று வந்த வழியே திரும்பிச் சென்று பார்க்கையில் தாசில்தார் நாகதாளி முள்ளில் விழுந்து கிடக்கக் கண்டார்கள், பார்த்து உடனே அவரைப் பக்குவமாக எடுப்பித்துக்கொண்டு தம்மூர்ப் போய்ச் சேர்ந்தார்கள். அற்றைநாள் முதல் கனவான்களிடத்தில் எல்லோருக்கும் அச்சமுண்டாயிற்று.

ஆறுமுக நாவலர் சுவாமிகளின்மீது இவ்வாறாகப் பற்பல தீங்குக ளிழைக்கப்போகிலும் எல்லாம் பயனற்றதாய் முடிந்தது.

பின்னும் நாவலர் பக்கலிலிருந்து சுவாமிகளுக்கு விரோதமாகப் போலி அருட்பா மறுப்பு, நல்லறிவு சுடர்கொளுத்தல் முதலிய பல கண்டனங்க ளெழுந்தன.

சுவாமிகளின் சார்பிலிருந்து எழுதி வெளியிடப்பட்ட திருவருட்பா தூஷண பரிகாரம், பிரார்த்தனைப் பத்திரிகை, நடந்த வண்ண மறிவித்தல், விஞ்ஞாபனப் பத்திரிகை, பேரம்பலப் பிரசங்கம், தீபாந்தர சைவ விரோத சரித்திரம் விஞ்ஞாபன விளக்கம், குதர்க்காரண்ய நாச மகா பரசு முதலியன அவற்றை யெல்லாம் மாய்த்தொழித்தன. இது நிற்க, இக்கண்டனங்களைக் கண்ட நாவலர் நாம் இதுகாறும் இராமலிங்கப் பிள்ளையை வாதமிட்டு வெற்றி பெறலா மென்றிருந்தோம், அவர்கள் நம்மைவிட நன்குவல்லரா யிருப்பதால் நாம் இனி வாயைத் திறந்தால் அவமான முறுவோமெனத் தமது ஈழநாடே போய்ச் சேர்ந்தார். இது இவ்வாறிருக்க,

---

## ஈழநாட்டு நா. கதிரைவேற் பிள்ளை இழைத்த தீமைகள்.

---

இவர் தம் மாணாக்கரின் மாணாக்கரெனப் போந்த இந்நா - கதிரைவேற் பிள்ளை, தமது அபிமான பரமாசிரியர் இராவணன் பிறந்த

நமது இலங்காபுரியிற் பிறந்திருந்தும், இராமலிங்கப் பிள்ளையை வெல்லமாட்டாது தோல்வியுற்றனரோ, அது நமது மரபுக்கு அவமானமல்லவா? இது கலியுகமானதால் இக்காலத்தில் மெய்யைக் கொண்டு எவ்வாறு வெல்வது? "நாம் இப்போது பொய்யைக் கொண்டு வெல்வே" மெனச் சபதங்கூறித் திருவருட்பாச் சண்டையை ஆரம்பித்தார்.

இதற்காதரவாக ஆறுமுக நாவலர் தாமியற்றிய யாழ்ப்பாண சமயநிலை 22-வது பிரிவில் பொய் வழக்குப் பேசுதல், பொய்ப் பிரமாணம் பண்ணுதல், பொய்ப் பத்திரம் படைத்தல் யாழ்ப்பாணத்தில் நாளுக்கு நாள் தலைப்பட்டோங்குகின்ற தெனக் குறித்தது பொய்மையாகா வண்ணம் அருட்பாச் சிறப்பு, போலி யருட்பா மறுப்பு, இராமலிங்கப்பிள்ளை படிற்றொழுக்கம், ஷை அங்கதப் பாட்டு இவை நான்குஞ் சிவஞான தீபச் சபையின் அங்கத்தவருஞ் சைவப் பிரசாரணரு மாகிய தூத்துக்குடி இரா. ம. நயினார் செட்டியார் அவர்களால் பதிப்பிக்கப்பட்டுச் சென்னை சைவ சித்தாந்த சங்கத்தாரால் வெளியிடப்பட்டதென 1904-ம் வருஷத்தில் ஈ. கதிரைவேற்பிள்ளை கற்பனை செய்து ஓர் சுவடியை யெழுதி விடுத்தனர்.

இப்புத்தகத்தை இரா. ம. நயினார் செட்டியார் எழுதினதாகச் சிலர் நினைக்கின்றார். அப்படி அவரோ எழுதியிருப்பின் "இரா" வென்ற தலைப்பெயர் பூண்டிருப்பதால், இவர் பகல் வெளிச்சந் தெரியாதவர், அல்லது பகற் குருடரென விளங்குகின்றார். குருட்டுக் கண்ணனைச் செந்தாமரைக் கண்ணனெனக் கூறுவதுபோலு முடியும். இவரைச் சிவ ஞானப்பிரகாச சபையின் அங்கத்தவர் எனலும் பொருந்தாது. அதனு லிப்புரட்டு நூலை இவ்வா றெழுதினரென ஓர் குறைவும் நேரிடும். அதனாலும் அச்சுவடியின் தலைப்பில் யாழ்ப்பாணத்திலுள்ள புதுச் சந்நிதி கந்தநாதன் றுணையென ஆரம்பித்திருப்பதாலுங் கதிரையாரோ அச்சுவடியை எழுதிவிடுத்தாரென்பது தெற்றென விளங்குகின்றது.

---

## (1.) "முக்குண வயத்தின் முறைமறந் தறைதல்" என்னும் பொய்ப் பத்திர முண்டாக்கியது.

---

இனி அத்தலையேட்டின் பின்புறத்தில் வேதாரண்யம் ஸ்ரீலஸ்ரீ உதயமூர்த்தி தேசிக சற்குருநாத சுவாமிகள் ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ

உ. தியாகராசக் குருக்கள் அவர்கள் திவ்விய சந்நிதானத்தினின்றும் போந்த மகா நிரூபமெண விளம்பரமிட் டிருக்கின்றார்.

அதில் ஷை குருக்கள் நா. கதிரையாருக்கு "கருங்குழி இராம லிங்கப்பிள்ளை அவர்களைப்பற்றித் தம் தந்தையாம் ஆசாரியர் அவர் கள் பிரகடனஞ் செய்த முக்குண வயத்தின் முறைமறந் தறைதல்" என்னும் இலகுலேகந் தமக்கு அனுப்புவிப்பேம் என எழுதப்பட் டிருக்கின்றது. இது கதிரையார் எழுதிய பொய்ப் பத்திரங்களில் ஒன்றும்; முத்தமிழ்க் கவியரசு டாக்டர் தஞ்சை சண்முகம் பிள்ளை யவர்கள் மாணவர் தங்கவேலுப்பிள்ளை யவர்களால் 1906-ம் வருஷத்தில் ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகள் விஷயமாக இந்த ஈழ நாட்டு நா. கதிரைவேற் பிள்ளையைப் பற்றிக் கோர்ட்டில் நடந்த விவகாரமும் முக்குண வயத்தின் முறைமறந் தறைதல் என்னும் பத்திரிகையின் மேற் கண்டனமும் என வெளியிட் டிருக்கின்றது. ஆண்டறிந் துணர்க.

---

## (2.) "போலி யருட்பா மறுப்பு" என 1904-ம் வருஷத்தில் வெளியிட்டுப் பொய்ப் பத்திர முண்டாக்கியது.

---

இப்புத்தகம் 1869-ம் ஸ்ரீ ஆறுமுக நாவலரின் மாணுக்கர் தியாகேச முதலியார் என்பவர் பேரால் ஷை நாவலரால் வெளியிடப் பட்டது. இப்புத்தகத்தில் தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரிய புராணம் என்னும் இவ்வைந்துமே அருட் பாவெனப் பெயர் பெறுமென அச்சிட்டிருக்கின்றார்.

கதிரையார் 1904-ம் வருஷத்தில் வெளியிட்ட இந்நூலின் மூன் றும் பதிப்பில் பன்னிரண்டு திருமுறைகளும் அருட்பாவென மாற்றி யெழுதி யிருக்கின்றார். கதிரையார் பதிப்பித்த புத்தகத்தில் "கொட் டையூர் மகா வித்வான் சுவாமிநாத தேசிகர் அவர்களும், திரிசிரபுரம் மகா வித்வான் மீனாக்ஷி சுந்தரம்பிள்ளை யவர்களும் இராமலிங்கப் பிள்ளை என்பாரைக் கண்டு அவர் பாடல்களிலுள்ள சித்தாந்தத்திற் கும், இலக்கணத்திற்கும் மாறுகப் பாடல்களை எடுத்து வினவுழி விடை கூற வியலாது விழித்து ஓட்டம் பிடித்தது யாவரு மறிந்ததொன்றே"

என நூதனமாகச் சேர்த்தெழுதி யிருக்கின்றார். ஆறுமுக நாவலர் காலத்தில் நடந்ததாக இக்காலத்துச் சில பொய்யர்களால் சொல்லப்படும் இவ்விஷயம் நாவலருக்கே தெரியாதிருந்தபோது இவர்க்குளெங்ஙனந் தெரியவந்தது? இதனானே இது பொய்யென யாவரு முணர்வர். அன்றியும் ஷை மீனாக்ஷி சுந்தரம்பிள்ளை யவர்கள் சீர்காழியில் டிஸ்திரிக்கட்டு முனிஷீப்பாயிருந்த தமது மாணாக்க ராகிய வேதநாயகம்பிள்ளை யவர்க ளியற்றிய நீதிநூலுக்குச் சுவாமிகளுடைய சாத்துகவியைப் பெறச் சீர்காழியி லிருந்து சுவாமிக ளிருந்த விடமாகிய சிதம்பரத்திற்கு மூன்று நாள் தொடர்ந்து வந்து அடியில் வருஞ் சாத்துகவியை அதிக வணக்கத்துடன் பெற்றுப்போயினர்.

வளங்கொள்குளத் தூரமர்ந்த வேதநா
யகனருளால் வயங்கு முன்னாள்
உளங்கொள்மனு வுரைத்தன்னோர் நீதிநூ
லந்நூற்பின் னூறுநூ லாகத்
துளங்கிடுமவ் வூருறையத் தோன்றலோர்
நீதிநூல் சொன்னா னின்னாள்
விளங்குமிந்நூன் முன்னர்மற்றை நூலெலாங்
கிழிபடத்தின் வெண்ணூ லன்றே.

உண்மை இவ்வாறிருக்க ஷை சிவக்கொழுந்து தேசிகருக்கும், மீனாக்ஷி சுந்தரம்பிள்ளை யவர்களுக்கும் அவர்கள் கேட்ட வினாக்களுக்கு விடைகூற வறியாது ஓட்டம் பிடித்தாரெனக் கதிரையார் கூறுவது கண்மூடித்தனமே.

---

## (3.) "சிவாலய முனிவர் செய்த அருட்பாச் சிறப்பு" என்னும் பொய்ப் பத்திர முண்டாக்கியது.

---

சமயாசிரியர்கள் செய்தருளிய பன்னிரு திருமுறைகளே "அருட்பாவாமென" அநபாய சோழன் காலத்திருந்த சிவாலய முனிவரால் இயற்றப்பட்டதெனக் கதிரையார் சில பாடல்களைக் கற்பனை செய்து அருட்பாச் சிறப்பென வெளியிட்டிருக்கின்றார். இதனுண்மையை விசாரிப்போமாக.

அவஞான மலைவசேர் திங்களையாமன் மெய்ம்மைச்
சிவஞான மதுகொண்டு தெள்ளியுயக் காழித்
தவஞானன் குன்றைமுனி முதலீறி னின்ற
திவமான முறைகேளாச் செவியென்ன செவியே
திருவருட்பாக் கேளாத செவியென்ன செவியே.

வீதைகதை பஞ்சவாக டீரகதை சங்கக்
காதைமடு பேய்கூவன் மாறனெனக் கண்டா
ரோதுகதை போயொழிய வுன்பனிரு மந்த்ர
சாதமுறை சொல்லாத தாலென்ன தாலே
தனியருட்பா வுரையாத தாலென்ன நாலே.

இப்பாடல்கள், சம்பந்த சுவாமிகள் திருமுறை முதலாகச் சேக்கிழார் செய்தருளிய பெரிய புராண மீறுயுள்ள பன்னிரண்டு திருமுறைகளுந் திருவருட்பாவா மென, சிவாலய முனிவர் பாடிய தாகக் கற்பித் தெழுதப்பட் டிருக்கின்றது.

இராஜ ராஜ சோழனென்னப்பட்ட அபயகுல சேகர சோழ மகாராஜன் நம்பி யாண்டார் நம்பியைக்கொண்டு,

| | |
|---|---|
| சம்பந்த சுவாமிகள் திருமுறை | 3 |
| அப்பர் சுவாமிகள் திருமுறை | 3 |
| சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருமுறை | 1 |
| மாணிக்கவாசக சுவாமிகள் திருவாசகம் | 1 |
| திருவிசைப்பா திருப்பல்லாண்டு | 1 |
| திருமந்திரம் | 1 |
| சிவபெருமான் திருமுகப் பாசுரமாதிய பாடல்கள் | 1 |

ஆக திருமுறைகள் பதினொன்றென வகுத்தார். அதனு லிவ்வரசனுக்குத் திருமுறை கண்டசோழனெனப் பெயர் வந்தது.

திருமுறை கண்டபுராணம் 28-வது செய்யுள்.

மந்திரங்க ளெழுகோடி யாதலினுன் மன்னுமவ
ரிந்தைவகை திருமுறைக ளேழாக வெடுத்தமைத்துப்
பந்தமுறு மந்திரங்கள் பதினொன்று மாதலினு
லந்தமுறை நான்கினெடு முறைபதினொன் றாக்கினர்.

என வருவனவற்றாற் காண்க. இது நிற்க.

அநபாய சோழன் இம்மை மறுமைப் பயனைத் தரத்தக்கச் சிவ கதைகள் யாதுள, அவை எவரால் அனுஷ்டிக்கப்பட்டதெனச்

சேக்கிழார் சுவாமிகளை வினவின காலத்து அவர் முற்காலத்தில் சிவ பெருமான் அடியெடுத்துக் கொடுக்கச் சுந்தர மூர்த்தி சுவாமிகள் திருத்தொண்டத் தொகை பாடினாரென்றும், அவை நம்பி யாண்டார் நம்பிகளால் அந்தாதிகளாகச் செய்யப்பட்டதென்றும், அவை திருமுறை கண்டசோழன் சிவாலய முனிவர் முதலியோரால் பாராட்டப்பட்ட தென்றுங் கூறப்பட் டிருக்கின்றமையானே சிவாலய முனிவர் பதினொரு திருமுறைகள் வகுத்த இராஜ ராஜ சோழன் காலத்திருந்தவரோ யன்றிப் பன்னிரண்டாந் திருமுறை வகுத்த அநபாயச் சோழன் காலத்திருந்தா ரல்லரென்பது வெள்ளிடை மலைபோல் விளங்குகின்றது. இது உமாபதி சிவாசிரியர் அருளிச் செய்த திருத்தொண்டர் புராண வரலாறு 14-வது செய்யுளாற் காண்க.

ஆயுமறை மொழிநம்பி யாண்டார் நம்பி
யருள்செய்த கலித்துறையந் தாதி தன்னைச்
சேயதிரு முறைகண்ட ராஜ ராஜ
தேவர்சிவா லயதேவர் முதலா யுள்ள
ஏயகருங் கடல்புடைசூ ழுலக மெல்லா
மெடுத்தினிது பாராட்டிற் றென்ன வந்த
தூயகதை யடைவுபடச் சொல்வீ ரென்று
சோழனுரை செயக்கேட்டுக் குன்றை வேந்தர்.

ஷை திருத்தொண்டர் புராண வரலாறு
86-வது செய்யுளில்

மூவரோதுதிரு முறைகளேழுதிரு வாதவூரர்முறை யொன்றிசைப்
பாவமைந்தமுறை யொன்றுமூலர்முறை யொன்றுபாசுர மதாதியாக்
கோவைசெய்ததிரு முறையொன்று சேவையர்குலாதிநீதி முறையொன்றுடன்
பாவைபாகர் திருவருள்சிறந்த முறைபன்னிரண்டென வகுத்தபின்

எனப் பாடியிருத்தலின் திருமுறை கண்ட சோழனால் வகுக்கப்பட்ட பதினொரு திருமுறையுடன் அநபாய சோழன் சேக்கிழார் செய்தருளிய பெரிய புராணத்தைச் சேர்த்துப் பன்னிரு திருமுறையாக்கினான்.

அதனால் பன்னிரண்டாந் திருமுறை சிவாலய முனிவர்க்குப் பிற்காலத்தில் ஏற்பட்டது. ஆகவே, அவர் திருமுறைகள் பன்னிரண்டெனப் பாடினாரென்பதும், அத்திருமுறைகள் திருவருட்பா வெனப்

பாடினு ரென்பதும் முழுப் புரட்டாம். அவர் திருமுறைகள் திருவருட்பா வெனப் பாடியிருப்பாராயின் அக்காலந் தொடங்கித் திருமுறைகள் திருவருட்பாவென வழங்கி வந்திருக்கும். அங்ஙன மில்லாதிருக்க "அருட்பா சிறப்பு" என்ற பொய்ப் பத்திரஞ் சிருட்டித்தவர் கதிரைவேற் பிள்ளையேயாம். இவரது வஞ்சக வாசகத்தை நம்பி இவரை ஆசிரியராகக் கோடித்தார் சிலர் பன்னிரு திருமுறைகளுக்குத் தேவாரத் திருவருட்பா வென்றும், திருவாசகத் திருவருட்பாவென்றும், பன்னிரு திருமுறைத் திருவருட்பா பக்த ஜன சபையாரொன்றும் வழங்கி வருவதும் பரிகசிக்கத் தக்கதேயாம். முன்னர் ஆறுமுக நாவலர் அண்டி விநாயகர் பாடலுக்கும் ஏன் கதிர்காம வேலர் பாடலுக்கும் அருட்பா பட்டஞ் சூட்டி மகிழ்ந்தது போலுமாம்.

---

## (4.) "அநபாய சோழன் பாடல்" என்னும் பொய்ப் பத்திர முண்டாக்கியது.

---

பின்னும் அப்பன்னிரு திருமுறைகளுக்குத் திருவருட்பா பட்டம் ஷை சிவாயைய முனிவரால் சூட்டப்பட்ட தென்பதை உறுதிப்படுத்தும்படி பிற்காலத்தில் இராமலிங்கப்பிள்ளை என்பார் ஒருவர் தோன்றுவர் அவர் பல சித்திகள் செய்வனேனுஞ் செத்தவரை பெழுப்புவனேனும் அவர் தம் பாடல்களுக்கு அருட்பா பட்டஞ் சூட்டுவாராயின் அவர் தீய நரகில் வீழ்வரென அநபாய சோழ மஹா ராஜன் சிவபிரான் மீதுஞ் சமய குரவர்கள் நால்வர் மீதும் ஆணையிட்டுக் கூறியிருக்கின்றானென இக்கதிரையார் ஒரு பாடலைக் கற்பித் தெழுதித் தமது மருட்பா மறுப்பென்னும் ஆபாசச் சுவடியில் வெளியிட்டிருக்கிறார்.

வருமாறு :—

உலகெலா மாக்கியளித் தொடுக்கு மாற்ற
 லுரியவல் லவனேனு மும்பர் நாண
வலகில்சித்தி விளையாடி யோகங் காணு
 மவனேனு மிறந்தவரை யழைத்தா னேனும்
பலநலங்க ளுளனேனு மீரா றான
 வருட்பாப்பேர் தன்பாடல் பதிப்பா னாயி
னலமுளநற் குருவானை நால்வ ரானை
 நம்பன்ற னாணையவ னரகிற் கீழே.

சிவாலய முனிவரும் அநபாய சோழனும் மேற் குறித்த பாடல்களைப் பாடியிருப்பார்களாயின் இராமலிங்க சுவாமிகளின் மாணவர்கள் அவர்தம் பாடல்களை அருட்பாவெனச் சொல்லார். ஒருகால் அவர்கள் அணிந்தாரேனுஞ் சுவாமிகள்மீது ஆறுமுக நாவலரும் அவர்தம் மாணாக்கர்களும் எழுதிவிடுத்த கண்டனங்களில் இப் பாடல்களை எடுத்துக் காட்டியிருப்பர். ஆறுமுக நாவலருக்கும் மற்ற யாவருக்குந் தெரியாத பாடல்களை இக்கதிரையார் எங்கிருந்து கண்டு பிடித்தார்? எந்நூலி லிருக்கிறதெனக் கதிரையாரோ விளக்கிக் காட்டியிருக்கவேண்டும். அவர் தவறிவிட்டாரெனின் அவர் சீடர்களேனும் இக்காலத்தில் எடுத்துக் காட்டுவர்களா? இப்படிப்பட்ட பெரும் புளுகரை ஆசிரியரெனக் கொள்பவர் எவ்வாறுய்வர்?

---

## (5.) இராமலிங்கபிள்ளை பாடற்றிரட்டு என்னும் பொய்ப் பத்திரமுண்டாக்கியது.

---

இச்சுவடி கதிரைவேற்பிள்ளையால் ஆக்கப்பட்ட ஓர் விநோத சரித்திரம். இதை ஆங்கிலேயர் (Novelette) என்று சொல்லுவார்கள். இதில் இராமலிங்க சுவாமிகளை வதம் பேசிப் பேதமை கற்பித்து உலகத்தார் இவர் மீதும் இவரால் ஆக்கப்பட்ட திருவருட்பா மீதும் வைத்திருந்த மதிப்பை மாற்றி அவரைத் தூற்றுமாறு "செத்தாரை யெழுப்புவே" மென்றார் என்றும், அதனால் பிணங்கள் கொண்டு வந்து வடலூரில் புதைக்கப்பட்டதென்றும், அநேக அறுதலிகளை மஞ்சள் குங்குமம் அணியச் செய்தா ரென்றும், அவர்கள் 200 பேரை ஒன்றுகூட்டி யாவரையும் நிர்வாணத்தோடு தம்மைச் சுற்றிவந்து கொம்மியடிக்கச் செய்து வேடிக்கை பார்த்தாரென்றும், அநேகரைக் கற்பழித்தாரென்றும், அநேகரின் பணங்களைப் பறித்தாரென்றும், செத்தாரை எழுப்ப முடியாமல் தற்கொலை செய்துகொண்டா ரென்றும், அதனா லவர் செய்த நூலைத் தொட்டாலுங் கையழுகுஞ் சொன்னாலும் வாய்புழுக்குமெனப் பல நிந்தனைகளைக் கூசாமற் கூறித் தமக்குள்ளிருந்த அழுக்காறு அவா வெகுளி இன்னாச்சொல் லாதிய அதிபாதகச் செயல்களையெல்லாம் அதில் பொதிந்து வைத்ததுமன்றி, இவ்வாபாச சரித்திரஞ் சொக்கபுர ஆதீனம் இராமலிங்க தம்பிரான் சுவாமிகளின் மாணாக்கரான செ. சிவக்கொழுந்து முதலியாரால் வெளியிடப்பட்டதென்று

இப்போலி யருட்பா மறுப்பில் சேர்த்திருக்கின்றது. இதே சரித்திரம் "உண்மை கூறியவருள் ஒருவன் வடலூரர்" எனக் கையொப்பத்துடன் (15-11-1903) பூலோகநண்பன் பத்திரிகையில் வெளியிடப்பட்டது. இன்னும் இச்சரித்திரம் வேறொருவரால் வெளியிட்டதாக ஓர் துண்டுப் பத்திரிகையில் எழுதி வெளியிட்டு இவ்விதக் கபட நாடகக் கூத்தாடினர். இதைக் கண்ட உண்மைச் சிவனடியார்கள் வருந்தி முற்காலத்தில் சத்தி நாயனார்,

அத்த ராகிய வங்கண ரன்பரை
யித்த லத்தி லிகழ்ந்தியம் பும்முரை
வைத்த நாவை வலித்தரி சத்தியார்
சத்தி யாரெனு நாமந் தரித்துளார்.

தீங்கு சொற்ற திருவிலர் நாவினை
வாங்க வாங்குதண் டாயத் தினால்வலித்
தாங்க யிற்கத்தி யாலரிந் தன்புடன்
ஓங்கு சீர்த்திருத் தொண்டி னுயர்ந்தனர்.

எனப் பெரிய புராணத்திற் கூறப்படுதலின், இக்கதிரையார் சிவனடியாரை நிந்தனை செய்த நாவை அறுத்தே பரிகரிக்க வேண்டும். ஆனால் இராஜாங்க வேறுபாட்டினால் நாம் அவ்வாறு செய்யமுடியாது. அதனால் சிவபெருமானே இப்பாதகரைத் தண்டிக்க வேண்டுமெனத் திருவருளைச் சிந்தித்திருந்தனர்.

இக்கதிரையார் இராமலிங்க சுவாமிகளின் மீது படிற்றொழுக்கமென்றெழுதியது உண்மையாமோ? அல்லது வஞ்சகமாமோ? வென விசாரிப்பாம். இக்கதிரையார் தாமெழுதிய மருட்பா மறுப்பில் 124-ம் பக்கத்தில் "அருட்பா என்னும் பெயரை இராமலிங்க பிள்ளை தமது பாடல்களுக்கு வைத்தமையானே பெரிதும் அவலப்பட்டார். அது பற்றியே முன்னுள்ள சிவனடியார்களும் (ஆறுமுக நாவலர் சபாபதி நாவலரும்) இப்போதுள்ள சிவனடியார்களும் (கதிரைவேற்பிள்ளை பாலசுந்தர நாயகரும்) அவரையும் அவர் பாடல்களையும் அருவருத்துக் கண்டிப்பாராயினர். இராமலிங்கபிள்ளை பாடல் என்று வைத்திருப்பின் பெருமை யடைந்திருப்பார். அவர் பாடல்களுஞ் சிறப்புற்று விளங்கும்" என்றார். அதனானே, அவர் வைத்த பெயரளவானே குற்றம் ஏற்பட்டு, திருவருட் பிரகாச வள்ளலார் என்பதற்கு "தெருமருட் பிரகாசப் பொள்ளலாரென்றும்", திருவருட்பாவுக்கு "மருட்பா வென்றும், போலியருட்பா வென்றும்", அவரது

நல்லொழுக்கத்திற்குப் "படிற்றொழுக்கம் என்றும்" மாறு பெயர் கொடுத்து வேண்டிய வாறு தூஷிக்க நேர்ந்ததன்றி வேறு வகையான யாதொரு குற்றமு மின்றென வெளியாகின்றது. அவர் பகடிக் கூற்று இங்ஙன மிருப்ப,

முற்காலத்து நாயனார் குறள் சங்கத்தாரால் ஆராய்ந்து ஒப்புக் கொள்ளப்பட்டதுபோல் இக்காலத்தும் மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரால் வெளியிடப்பட்ட சைவ மஞ்சரி என்னும் நூலில் இராமலிங்க சுவாமிகள் பாடல்களை ஆய்ந்தெடுத்துத் தேவார திருவாசக மாதிய நூல்களோடு சேர்த்து அச்சிட்டிருப்பதாலும், திருவருட்பாவிற்கு யாதோர் குற்றமு மின்றென வெளியாகின்றது.

அஃதன்றியுஞ் சென்னை கவரன்மெண்டு பிரஸிடென்ஸி காலேஜ் பிரதம தமிழ்ப் பண்டிதர் மகா மகோபாத்தியாயராய பிரஹ்ம ஸ்ரீ உ. வே. சாமிநாதைய ரவர்கள் மேற்படி திருவருட்பாவிற்கு,

சீர்பூத்த பதிவேணிப் பரனுயர்வு மெய்யடியார் சிறப்பினோடு
தேர்பூத்த தமிழ்மறைகண் முதலாய பலவற்றின் சிறப்புந் தேர்ந்தே
கார்பூத்த மனங்கசிந்து தினந்தோறும் பலதுதிக ணவின்றோ னுய
ஆர்பூத்த கவிஞர்பிரா னிராமலிங்க வள்ளலின்சீ ரறியார் யாரோ?

எனச் சாத்துகவி கொடுத்திருக்கின்றார்.

சென்னையின்கண் மாயாவாத பாஞ்சராத்திர மாதிய புறச்சமயக் களைகளைந்து சைவ சமயப்பயிர் தழைத்தோங்கச் செய்த வைதிக சைவ சித்தாந்த சண்டமாருதம் ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர நாயகரவர்கள்

சீர்பூத்த மறைமுனிவ ரகம்பூத்த நலம்பூத்த சிறந்த நாளிப்
பார்பூர்த்த மயல்பூத்த வெனதுளத்திற் பூத்தநசைப் பாறப் பூத்த
வேர்பூத்த வருணயன விணைபூத்த விருந்தவனிங் கிறைமை பூத்த
பேர்பூத்த போதசிதம் பரராம லிங்கனடி பேணி வாழ்வாம்.

எனத் துதித்திருக்கின்றார்.

கூடலூர் ஸ்ரீமான் சிவ-துரைசாமி தேசிகர் என்பா ரொருவர்

வானென்கோ வான்திரட்டு மமுத மென்கோ
வழுத்திடுமுக் கனியென்கோ மதுர மான
தேனென்கோ தெவிட்டாத சீனி யென்கோ
செங்கரும்பின் சாறென்கோ திராக்ஷி யென்கோ
ஊனென்கோ வூனிருக்கு முயிர்தா னென்கோ

வுயிருடம்பா யோங்குகின்ற வுணர்வு முற்றுந்
தானென்கோ ராமலிங்கத் தலைவா நீசொற்
றனியருட்பா வெனும்பொருளின் றன்மை தானே!

எனவும்,

ஆரியர்க ளுரைத்தநெறி யத்தனையும் நீயுரைத்த வருட்பா வென்னுஞ்
சீரியவோர் நூலதனிற் றிடமாகக் காணுகின்ற திறத்தை நோக்கிப்
பேரியனற் பெரியரெலாம் பெரிதுவந்து வந்தித்தார் பிழை யுற்ற
பூரியர்க ணிந்தித்துப் போய்நரகம் புக்கியவம் போகின் றாரே.

எனவும் பாடியிருக்கின்றார். இவர்கள் கண்ணுடையா ராகலின் இராமலிங்க சுவாமிகளின் பெருமையையும் அவரால் செய்யப்பட்ட திருவருட்பாப் பெருமையினையும் உள்ளவா றுணர்ந்து பாடினார்கள்.

ஈழநாட்டார்கள் அகம்பாவமுடையா ராதலின் ஞானக் கண்ணது கண்டு நாடுமா றுணராது மாயப் படலம் மறைக்க, இவர்களது ஊனக் கண்களா லுணரமுடியாராய் வாளா தூஷித்து மீளா நரகிற் காளானார்கள்.

அதனால்,

நல்லோரை நிந்தித்து நாணமிலிப் பொய்யுளறுங்
கல்லானைக் காமுகக்குங் கைதவத்தீர் - வல்லமிகு
நல்லோர்பால் வந்துநனி நற்புத்தி கேட்டுய்மின்
பொல்லாநும் புந்திதெளி யும்.

---

## (6.) இராமலிங்கபிள்ளையின் பேரில் ஷையார் தமயனார் சபாபதிபிள்ளை அங்கதப்பாட் டெழுதினா ரென்னும் பொய்ப் பத்திர முண்டாக்கியது.

---

அவ்வங்கதப் பாடல்கள் வருமாறு:—

அருள்பெற் றேனெனப் பொய்க ளறையுமே
யகன்ற சித்துகள் பண்ணுவ னென்னுமே
மருளர் போலருட் பாவெனக் கூறுமே
வாய்ந்தெ னைந்தொழி லென்று மருட்டுமே.

குரவனோர்தெனக் கூறிப் புரட்டுமே
கோது ணீர்விளக் கேற்றின னென்னுமே
பெருமை பேசிப் பசுத்துவங் காட்டுமே
பேரி ராமலிங் கப்பிள்ளை பாடலே.

செத்த சீவரை வாழச்செய் வேனெனச்
செப்பிப் பொய்ப்பணஞ் சேர்த்துக் கெடுக்குமே
பெத்தத் தன்மைகள் பேசிக் கழியுமே
பேசி ஞனிறை யென்னப் புளுகுமே
கர்த்த ரொன்றே ராமலி லக்குமி
கலையி ஞளைக் கதறி யழைக்குமே
நித்த னென்று தனைப்பொய் புகலுமே
நீதி றம்பி நிகழ்த்திய பாடலே.

மறவ ரொன்றுதற் கொள்ளா ரிகழுமே
மாதுக் கைம்மைகள் சுற்றப் பிறழுமே
முறைக ளாவகுப் பித்து முடங்குமே
மூலச் சோறு சிவனளித் தானெனக்
கறைகள்பேசிப் படித்தவர் நின்றிடக்
கற்றி லேனருள் கண்டன னென்னுமே
மறையு மற்புதஞ் செய்யென வெள்குமே
மருதூர்த் தம்பி வழுத்திய பாடலே.

நம்பி ஞரை நடுத்தெருச் சேர்க்குமே
நானு ளேனெனச் சொல்லி விலகுமே
செம்பு தங்கஞ் செயுமெனச் செப்புமே
தெளியிலங்கது பிம்பெனத் தோன்றுமே
வம்பு பேசி வழக்கிடச் சொல்லுமே
வாய்மை யீதிது வன்கணிற் சொல்கிலே
னெம்பி யென்று முகத்துதி பேசிலேன்
யாவுஞ் சத்திய மெற்குரித் தில்லையே.

இராமலிங்க சுவாமிகளின் பாடல்கள் அச்சிற்கு வந்தபோது தான் அதற்கு அருட்பாவென அவரது மாணுக்கர்களால் பெயர் சூட்டப்பட்டது. அது இற்றைக்கு 40 வருஷ காலமாகிறது. அப்புத்தகம் வெளியாவதற்கு முன்னரே சபாபதி பிள்ளை காலமாய் விட்டாரென்றது யாவரு மறிந்த தொன்றே. அங்ஙனமாகவும் சபாபதி பிள்ளை தாம் அருமையாகப் போற்றி வளர்த்தெடுத்து வந்த தமது

தம்பியாகிய இராமலிங்க பிள்ளையின்மீது அங்கதப்பாட்டுப் பாடினு ரென்பது யாவரோ நம்புவார்? அம்மட்டில் விடாது அவ்வங்கதப் பாடலில் "வாய்மையீது" "வன்கணிற்சொல்கிலேன்" "எம்பியென்று முகத்துதி பேசிலேன்" "யாவுஞ் சத்தியம்" "எற்குரித் தில்லையே" எனக்கதிரையார் கருத்திற்கேற்ப எழுதி முத்திரையிட்டு இவருக் கனுப்பினுர்போலும்! ஐயோ! இவ்வாறு பொய்ப்பத்திரஞ் சிருட்டித்துச் சுவாமிகளை நிந்தித்துப் பிறரை வஞ்சித்த துரோகம் இவரைச் சும்மாவிடுமா? இது ஒன்றே! இவ்வங்கதப் பாடல்கள் முன்னர் குதர்க்காரண்ய நாச மகாபரசு கண்டனம் என்னும் நூலில் வெளியிடப்பட்டதென்கின்றூர். அண்டப் புரட்டென்பதிதுதானே? இக் குதர்க்காரண்ய நாச மகாபரசு என்பது ஒருவராலும் கண்டிக்கப் படவு முடியாது. ஒருவராலுங் கண்டிக்கப்பட்டதுங் கிடையாது. இவர் கூறும் பொய்க்கூற்றைப் பொய்யர்களே நம்புவரன்றி உண்மையாளர் ஒருபோது முண்மையெனக் கொள்ளார். இது இவ்வாறிருக்க,

திருவருட்பா கக்ஷியாருள் திருக்குடந்தை சிதம்பரவையர் என்பாரொருவர், இவ்வஞ்சகவாசகத்தைக் கண்டு மனம் பொறுதவராய் இந்நா. கதிரைவேற்பிள்ளையின்மேல் சில அங்கதப்பாடல்கள் எழுதி விடுத்தனர்.

அவை வருமாறு:—

## அங்கதப் பாடல்கள்.

---

வாழ்த்து மூவுல கவருட் பாவினில்
வாய்ந்த செம்பொருள் நாடா தழியுமே
தாழ்ந்த மந்த மதிசபை கூட்டுமே
சரக்குப் பூசா ரிகள்தலை யாட்டுமே
வீழ்த்த வாறு முகநாவ லன்முந்நாள்
வெட்கி யோடும் பகையினை மூட்டுமே
பாழ்த்த மூடர்கள் தங்குஞ் சபைதனிற்
பஞ்சை யானுன் செயும்பிர சங்கமே.

கோலமாய்த் தன்னைப் போல்முழு மக்களைக்
கொண்டு மேலோர் களைத்தள்ளி வைக்குமே

காலத் தொப்பவெண் ணெய்ப்பொம்மை தீயினிற்
காணக்கூத் தாடித் தன்மைத் தழியுமே
சாலஞ் செய்தே யருட்பாவை நிந்தித்துச்
சார்ந்து மீளா நரகத் தழியுமே
சீலமில் லாத ராவணன் சேரியான்
செய்தொ ழிற்தழி யும்பிர சங்கமே.

மூச லுண்டை புளிமிளா காய்விற்கும்
முண்டைப் பிள்ளைகள் மொய்த்து விழிக்குமே
கூசிக் கூசிக் குளறி வழியுமே
கோளர் பூசாரி சூழ விளங்குமே
பேசிப் பேசி யலுத்தங் கழியுமே
பெரியர் நிந்தை பெரிக்கி யழியுமே
ஏசி யேசி யிழிந்தங் கொழியுமே
யீழப் பாணன் செய்யும்பிர சங்கமே.

என இவ்வாருக 18 பாடல்களை எழுதி வெளியிட்டனர்.

முப்பத்து மூன்று வருடங்களின் முன்னர், ஆறுமுக நாவலர் சார்பாரும், இராமலிங்க பிள்ளை சார்பாரும் ஒருவர்க் கொருவர், மாறுகொண்டவர்களாய் ஒருவர்மீ தொருவர் கண்டனங்க ளெழுதி விட்டு ஓய்ந்தனர். அக்காலத்தில் இக்கதிரையார் பிறக்கவே யில்லை. இதில் இவருக்கு யாதோர் சம்மந்தமு மில்லா திருக்கவும், தூங்கிய பேயைத் தூபமிட் டெழுப்பவது போல வயிறு வளர்க்கும் நிமித்தம் ஓய்ந்த சண்டையை மீளவும் எடுத்துக்கொண்டு அக்காலத்தே உதய மூர்த்தி சாமிகள் "முக்குண வயத்தின் முறைமறந் தறைதல்" என்ற பத்திரிகையை எழுதினுென்றும், "அருட்பாச்சிறப்பு" சிவாலய முனிவரெழுதினுென்றும், "இராமலிங்க பிள்ளை படிற்றெழுக்கம்" சிவக்கொழுந்துமுதலியார் எழுதினுென்றும், இராமலிங்க பிள்ளை யின்மீது "அங்கதப் பாடல்கள்" ஷை யார் தமயன் சபாபதி பிள்ளை எழுதினுென்றும், புற்றில் ஈசல் புறப்பட்டதுபோல் பற்பல பொய்ப் பத்திரங்கள் ஒன்றன்மேலொன்றை எழுதி விடுத்து உலகத் தவரை வஞ்சித்தது கண்டு இராமலிங்க சுவாமிகளின் சார்பாரில் வடலூர் சிவநேசம்பிள்ளை யென்பாரொருவர் மனங்கொதித்தெழுந்து இக்கதிரையாரைக் கண்டிக்காது விடலாகாதென அருட்பிரகாச னடியினை வாழ்த்தி, கதிர்வேலுக் கெதிர்வேலென்ற பெயரானே

" அவுட்பீரங்கி " என்னும் ஓர் பத்திராஸ்திரத்தைக் கதிரையார்மீது ஏவினர்.

அது வருமாறு:—

## அவுட் பீரங்கி.

அருட்பிரகாச னடியிணை வாழ்க.

அங்கதப்பாட்டென் றலறித் திரியும்
அங்கதப் பறையர்க் கவுட்குண் டடியே.
ஆழ மறியா தகப்படும் பதகராம்
ஈழக் கவிஞர்க் கிசைவா யாப்பே.
கதிரைவே லமையாக் கந்த னருளாற்
குதிரைவா லறிவர் கொள்ளுஞ் சவுக்கடி.
இராவணன் சேரியா மீழச் சைவர்க்
கிராசிவ ஞான முக்காலத் தினுமே.

### கலிப்பாவலர்கட் காங்கலிவெண்பா.

1. தேசிகனி ராமலிங்கச் செல்வ னருளாரும்
மாசிலாச் சோதியிணை வாயில்வந்த — தேசிப்

2. படிற்றெழுக்க மிட்டுப் பதித்தலையும் றங்கள்
நடித்தலையுஞ் சுத்தசைவர் நாடார் — வெடித்தலையீர்

3. ஊர்பேரில் லாத வொருவன் றனையிழுத்திங்
கார்போடச் சொல்லி யடித்தார்கள் — பேர்மாற்றி

4. அல்லாத செய்திகளை யாரோ வெழுதினதாய்
வல்லாண்மை கொண்டு வழக்குரைத்த — பொல்லாத

5. அங்கதம் பேசும் அறுதலையாம் பொய்யரோ
அங்கதப்பாட் டெங்கே யனுப்பினீர் — அங்கிதமாய்

6. ஒற்றியூர்ச் சாலையினி லுற்றவோர் பெண்டன்னைப்
பற்றினதாற் குத்துதைகள் பட்டதையும் — சிற்றிற்

7. குயப்பேட்டை யோரயலான் கோமாட்டி தன்னாற்
பயம்பெறவே குத்துதைகள் பட்ட — பயலாகும்

8. பொட்டலா லேழுரு பாய்தண்டம் போலீஸில்
இட்டதையிக் காண்மறந்த வீனனையே — நட்டனுஞ்

9. சண்டிக் கழுதைகளே சாற்றினதைச் சாதித்தே
வண்டர்களாய் வந்தேன் வழக்குரைத்தீர்? — சண்டாளர்

10. ஆகினீர் கற்பனைய பூதமென வேயெடுத்துச்
சோகெனவே யாங்கொடிய சூனியர்காள் — யோகினியாய்த்

11. தங்கள்பலம் பாராமற் றத்திக் குதிக்கிறீர்
உங்கள்பல மின்னதென்ன வோர்ந்தறிந்தோம் — சங்கையுடன்

12. கூட்டிக் கிளறிகிரிக் குட்டிகள்போற் சத்தமிட்டு
நாட்டி லலைவெறிகொ ணாய்களே — மேட்டிமையாய்ப்

13. பேசி யலையும் பெருந்தடியீர் பித்தமுண்டோ?
ஓசையடங்கும் பிணம்போ லோய்குவீர் — பூசையுடன்

14. எங்க ளிராமலிங்க தேசிகனை யேத்தாமல்
வெங்களத்தி னூற்றேன் வெதுப்புண்டீர்? — அங்காடிப்

15. பானையி லேவிழுந்து காற்பரப்பும் பல்லியைப்போல்
ஆனைதனைப் பூனை யழுத்தல்போல் — மானினங்கள்

16. வேங்கைதனைக் கூடி வெருவச்செய் விப்பதுபோல்
ஓங்கலுடன் வந்தே னுசாவினீர்? — ஆங்குகுந்தி

17. ஆப்பிழுத்துப் பேய்க்குரங்க கப்பட்டாற் போலிங்கு
காப்பிற்குட் பட்டேனே கட்டுண்டீர்? — தோப்புக்குள்

18. ஓடிப் புரளு மொருகழுதை யைப்போல
வேடிக்கை பொய்க்கதைகள் விள்ளாதீர் — பேடிக்கை

19. ஆயுதம்போ லானீர்கள் யாரிங்கு புத்திசொல்வார்?
நாயுடைய வாலானீர் நாணிலீர் — பேய்போலிங்

20. காகிவளர் வீண்தடிய ஞமிவனைச் சங்கத்திற்
சோகியென்னச் சேர்த்தார் — துணிந்து.

15—2—04.

மாயாவாத தும்ஸகோளரி விகடனங்கம்
வாரிக்கிழிக்கு மெண்காற் சரபசங்கம்.
அவுட் பீரங்கியை யெழுப்பு மெதிர்வேல்.

இங்ஙனம், ☞ பார்வதிபுரம்-வடலூர்-சிவநேசம்பிள்ளை.

---

இதைக் கண்ட கதிரைவேற்பிள்ளை தாமிழைத்த தீங்கின்பயனீ தென்றுணராராய்ச் செருக்குற்றுப் "பறைப்பிரகாசன் பதமல ரோங்க". வெனப் பறையன்மகனைத் தியானித்துத் திரிகோணமலை இலங்கணிப்பிள்ளையென்ற பெயரானே "பாசுபதாஸ்திரப்பிரயோக பிரசண்டமாருதக் கோடையிடி" என்ற ஓர் பத்திராஸ்திரத்தைச் சிவசேசம் பிள்ளையின்மீது அபிமந்திரித்து விடுத்தனர்.

---

பறைமயம்.

† பறைப்பிரகாசன் பதமலரோங்க.

## பாசுபதாஸ்திரப் பிரயோக பிரசண்டமாருதக் கோடையிடி.

---

### முதற்குறை மங்கலவாழ்த்து.

ஒருகவி ராஜென் றுளறிப் பறையன்
  விருந்திற் புசிக்கு மீனனுக் கோருதை!
தானே வலையிற் றரிகொண் டிறக்கும்
  பாணப் பதரின் வாய்க்கொரு மேக்கு!
சண்முகத் தவனைத தானினை யாத
  புன்முகத் திருகண் பொட்டனைப் புடைவேல்!
தஞ்சா வூரிற் றவளைக டின்னும்
  பஞ்சையர்க் குளதோ பரசிவ ஞானம்!

### போலிக் கவிகட்கோர் கேலிக்கலிவெண்பா.

எனையார் கெலிப்பார்கள்? என்றிரையு மூடா!
நினையோர் பொருட்டாய் நினையேம்.—பனையேறும்

பாம்பொத்த பாபிப் பயலே! குரக்கிறைவா!
நாம்பொத்த நின்னுலென் னுகுமடா?—வேம்பொத்த

பாதகனும் ராமலிங்கன் பட்டியா னன்றோதான்?
வாதசொ லுஞ் சண்டியே வாய்மூடாய்!—தீதுடனே

---

† பறையன் என்பவன் ஜாதியுளெல்லாம் கீழ்ப்பட்டஜாதியானு தலால் அப்பறையன் பதமலரை வாழ்த்துகிற இலங்கணிப்பிள்ளை சர்வசண்டாளனாக விருக்கவேண்டும்.

கத்தித் திரியுங் கடுக்காய்ப்பூ வைத்தியனாந்
தத்துவாய்ச் சண்முகனீ தானறியாய்;— சுத்தமிலாக்

காமக்கள் ளச்சிதடா! கற்பனைமூ வர்த்தமிழு
மாமவ் வருட்பாலென் றுதரையில் — ஓமக்குண்

டத்தின்வெண் ணெய்ப்பதுமை யாருண்ட டா? நீயே
மெத்தத் தலைக்கீழாய் வீழாதே!— மொத்தத்தில்

நீயொருவன் றானோ நிபுணனென வெண்ணுகிறாய்?
போயொருவன் றன்னிற் புலம்பாதே!— சீ யடலே!

என்னத்தைப் பேசுவைநீ? என்னப்பண் பாடுவைநீ?
என்ன வியலறிந்து கொண்டையடா?— பின்னை

ஊர்பே ரறிந்தாயேல் ஒன்றுவிடா மற்பிடுங்கிப்
போர்போரா கக்கட்டிப் போடுவையோ?— ஆர்பாட்டக்

காரத் தறிதலையே! காசினியி லேயிழிந்த
ஓரம்பா டிக்கயவா, ஓடாதே!— கோரமுடன்

பீழையார் ராமலிங்கப் பிள்ளையா னொற்றியுறைத்
தாழுமொரு தாசியொடு சான்மருவிப் — பாழுடனோய்க்

கண்டு பெருந்துன்பக் காயலிடைப் பட்டதலால்
வண்டர்போன் மாதர்தமைச் சேர்ந்ததையும்— கண்டிடாநீ

துரைசாமி யென்னுஞ் சுரபாட கன்றின்
னரபிட்டி லைத்திருடி னாயே!— ஒரு நூறு

தண்டம் விதித்ததனைத் தானிறுக்க மாளாமல்
அண்டினைபல் லோரையுநீ யாதரிக்கப் —பண்டிதனைச்

செய்யா விடிலப்போ தேமறிய லாமதன்பின்
பொய்யாதி ராய புரமதனில் — மெய்யாய்ப்

பிரவிடையா காதசிறு பெண்ணைப் பலவந்தந்
தரவதற்குன் றன்னைசிறைச் சாலைக் — கருகாக்கிக்

கொள்ளலையோ? பின்னுங் கொடுதோஷி! கற்பொழுக்க
முள்ளசமு சாரிகளை மொய்த்ததனால் — சள்ளையுடன்

காவற் கிடங்குற்றாய்! கண்டபடி வேசியரை
ஆவலுட னேசுவைக்கும் அம்பட்டா!— ஏ! வறிஞா!

முன்னோர் சிரேஷ்டனின் முற்றத் தலைகுட்டைத்
தன்னைக் கவர்ந்ததற்காய்த் தாளுழைத்தாய்! — நன்னயமா

யெங்குமுளக் கைம்மையரை யேற்றணைந்து பிள்ளைகொடுத்
தங்கவர்தஞ் சீரழித்த தாஸ்ராம — லிங்களவன்

குத்துதைகள் பட்டதுவுங் கோடானு கோடியுண்டே
மத்தளவன் தேசிகனோ மாநிலத்தில்? — சத்யமிலான்

வாயில்வந்த பாடல் அருட்பாவென் றாகாதே
பேயுரையான் றன்பாவும் பேசரிய — தாயியம்புந்

திண்டாட்டக் காரனெனுந் தேசிகனி ராமலிங்கன்
தொண்டனுனக் கெங்கணமையுந் தூய்மையடா? — கண்டபடி

எங்கெங்கு மேயலைந்து எம்மதவெச் சாதியிடந்
சங்கியமி லாதுண்ணுஞ் சாதகனே! — அங்கபசி

யாற்றாகப் போதெவரு மார்ந்திலனொன் றேகிறிஸ்தா
ராற்றிற் புலால்தின்னும் அந்தகனே! — சாற்றுதற்குக்

குள்ள அகமுடையான் ஈக்காட்டுக் கூட்டத்தாள
எள்ளவனும் ரத்தினவேல் எவனேதோ? — தள்ளாதே!

போலியவ தானிப் பொதுமகளின் வீடதுவே
வாலிதெனக் கூற்றேவல் வாய்ந்திருக்கும் — சோலியுடைப்

பூவையன்றோ னேவினனோ? பொக்கமுள நாவையுதாந்
தாவையுடை வேதாசலச் சண்டனோ? — யாவரவர்?

அங்கவரு நீயு மடியுதைகள் பட்டவற்றை
இங்கெடுத்துச் சொல்லவென்றால் ஏலாவே! — பொங்குகிறாய்,

தாரகைகள் கூடிமுழுச் சந்திரனை வென்றிடுமோ?
வாரணமப் பன்றிகளால் மங்கிடுமோ? — பாரமுள

நன்மலைக ளொத்தனைய நாடிமக மேருவெனும்
பொன்மலையைத் தாழ்த்தும் புகழுடைத்தோ? — கன்மனனே!

கொட்டிமலர் கட்சேர்ந்து கோகனகத் தாமரையை
வெட்டிடுஞ் சிறப்பேற்று மேலுறுமோ? — துட்டசிறு

மானினத்தோய் நீயே வலிமிகுவாண் சிங்கம்யாம்;
பூனையடா நீ, யாமப் பொங்கடியே — சோனைபெருங்

காற்றடலே யாம், நீயக் காற்றிற் சிதைந்துசுழல்
பாற்றறியாத் தூசிலவம் பஞ்சனையாய்! — மாற்றும்வெறு

மட்பாண்டம் நீயானாய், மாறியத னைத்தகர்க்கப்
பெட்பார்ந்த டிகொண்ட பேர்யாமே — நட்பாகப்

போலிக் கவிவாணர் போதக் தமர்க்கொரு
போலிக் கவிநனெனப் போந்தவனைப் — போலவனே!

நீயேடா பேடிச்சை நீடும் வயப்படை மற்
றுயாமல் யாரை யறைகின்றாய்? — தோயாமல்

சங்கம்வாங் கிக்கழுதை தன்னைச்சேர்ப் பார்தாமோ
சங்கந் துலங்கவருஞ் சாதுக்கள்? — இங்கதுபோல்

ஆகாத தன்மையினால் ஆங்கலாய்ப் போநாயே?
வேகாத டாஉன்னால் மேற்கொள்ள! — நீகாத

தூரத் திருப்பையொரு தூமரமா யன்றிவ்ரில்
சீரற்றுப் போவைநினை — சீ.

**எண்காற் சரபசங்க திமிரபங்கத்-திண்காற்பரவுந் துங்கமஹாருத்திஸ்ர**
**பறைச்சேரி டையறுமெட்லோட் பம்பாம்பீரங்கி.**

இங்ஙனம்,
**திரிகோணமலை — ப. இலங்கணிப்பிள்ளை.**

---

போலிமுத்து வீரனுக்குப் புறப்படுமே பின்னால்.

Ceylon. 3—3—04.

---

இத்திரிகோணமலை இலங்கணிப்பிள்ளை என்ற பறையன் விடுத்த பாசுபதாஸ்திரப் பிரயோகப் பிரசண்டமாருதக் கோடையிடியாஸ்திரத்தைக் கண்ட வடலூர் சோமசுந்தரம்பிள்ளை என்பாரொருவர் அப்பறையன்மீது சஞ்சீவிராயன் விடுத்த எரிநகர் தகனம் என்ற ஓர் பத்திராஸ்தரத்தை அருட்பிரகாசனடியினை வாழ்க, வென வாழ்த்திப் பிரயோகித்தனர்.

---

அருட்பிரகாச னடியிணை வாழ்க.

திரிகோணமலை இலங்கணிப்பிள்ளைக்குச்

## சஞ்சீவிராயன்விடுத்த வெரிநகர் தகனம்.

"பாசுபதாஸ்திரப் பிரயோகப் பிரசண்ட மாருதக் கோடையிடி" யென்றெழுதின ஈழக் கிறிஸ்துவக் கொள்கைப்போலிச்சைவ பறையன் நா. கதிரைவேற்பிள்ளைக்குச் சிட்டர்களைக் காத்துத் துட்டர்களை யழிக்குந் திரிபுரதகன அழற்கண்ணேக்கெரிக்கும்

உத்தரகிரியைப் பத்திரிகை.

---

கலிப்பாவலர்க்காங் கலிவெண்பாவைக் கண்டவுடன், கோண வழி புகாமற் சிவநேசம்பிள்ளை யெழுதி விடுத்த உண்மையான சங்கதிக்குப் பதில்வரையடா வென்று தீட்டியிருந்தும், ஈழநாட்டுத் தண்ணீர்ப்பாம்பு தம்பை முதலியவைகளைத் தின்னும் ஈழப் பாணச்சாதிப் பயலே! சென்னைப் பறைச்சேரியி லுள்ளவர்கள் ஜாதிக்குப் புறம்பே ஒதிக்கிவைத்துச் சுகதுக்கங்களி லழைக்காத ஓர் வேசைமகனு யுள்ளவன் பேச்சைக் கேட்டாயே, அவன் உனக்குத் தகப்பனு? பாட்டனு? ஈழச் சேரி பாணு! உன் துட்டத் தனத்தை யடக்க டாக்கர் சத்திரத்தில் அருள்தங்கும் வடற்பெருவெளி அன்பர்கள் இவைகளை யெழுதிவிடுத்துக் கொண்டிருக்கிறார்கள். தெய்வ சாட்சியாய் ஒன்று மறியா நிர்த்தோஷிக ளான தொண்டைநாட்டு முதலியார்களை "ஆங்காலம் வாயிற்புறத்தே கிடக்கும், அகன்றைமிருந்சிச் சாங்காலம் நாய் மணைமீ தேறும்" என்னும் மூதுரைக் கிணங்க வண்டா எலே தூஷணை செய்து கெட்டாய்? அடா எலே கதிர்வேலா? ம.ா-ா-ஸ்ரீ பூவை கலியாணசுந்தரம் முதலியாரையும், ஈக்காட்டு-இரத்தின முதலியாரையும், நாகை-வேதாசலம்பிள்ளையையுஞ் சொல்லிக்கொடுத்தவர்களாகவும் சண்முகப்பிள்ளை யவர்களைப் பத்திரிகையை யெழுதினவராகவும் பாவித்து மேற்சொன்ன பறைச்சேரி வேசைமகன் பேச்சைக் கேட்டுத் தூஷித்துக் கெட்டாயே! உன் பற்களைச் செருப்பாலடித்து உதிர்த்துக், காலாலுங் கையாலும் உதையுங் குத்துகளுங் கொடுத்துச் சவமாக்கிப் பழஞ்செருப்பின் மாலையால் அலங்கரித்து உன் குடுமியில் எருக்கம்பூ மாலைசூட்டித் தோட்டியால் மூத்து வீரனது சிறுநீரால் ஸ்நானஞ்செய்வித்து அவன் மலக்குழம்பினைப் பூசி மணமேற்றி உன்னைக் கையுங்காலையுங் கட்டியிறக்கி, எம தருட்

பிரகாச வள்ளலாரை நிந்தித்த பொக்கைவாயில் மேற்சொன்ன தோட்டியால் வாய்க்கரிசி யிட்டுக் கதிர்வேலா! உன்னைப் பாடையிற் றூக்கும்போது, கழுகு, பேய், நாய், நரிகளெல்லாம் ஊள்! ஆள்! வாள்! என வாத்திய கோஷஞ் செய்ய, மயானத்திற்குத் தூக்கிச் சென்று சுடுகாட்டி லிட்டுச் சிவனடியாராகுஞ் சுத்தசைவர்கள் உள்ளங்களை நோகச் செய்ததனா லெழுப்பும் அக்கினியாற் கொளுத்த நீ வெந்து சாம்பராகுங் காலத்தில் இந்தப் பறை வேசைமகன் உனக்குத் துணையாய் வருவானா? இனி உனக்கு மானிடரா லாகிலும், தேவர்களா லாகிலும் உய்வில்லையடா! பாணச்சேரி கதிரைவேற் பறையா! இன்னும் ஆறுமாதக் கெடுவுக்குள் நீ இந்த உலக வாழ்விழந்து நரகிற்புகக் காலம் நேர்ந்தது. ஆதலால் பெரியோர் துணைக் கொள்ளப் பிறழ்ந்து போகாதே. நீயோ! ஈழக் கிறிஸ்தவக் கொள்கைப்போலிப் பறைப்பயல் இவ்வூர் சுத்தசைவர்களின் பகைத்திற மேற் கொள்ளாதே. "ஊருடன் பகைக்கில் வேருடன் கெடும்." என்னு மூதாட்டியா ருரைக் கிணங்கி நடப்பாயாக! இன்றேல்! கெட்டாய், அழிந்தாய், கழிந்தாய், முக்காலுஞ் சத்தியம்! இஃ திங்கண மிருக்க,

அருட்பெருஞ்சோதி தெய்வமே அடியார நால்வர்களையும்
செந்தமிழ்ப் பாமாலையாற் றுதிக்கும் ஸ்ரீ இராமலிங்கசுவாமிகளையும்,
அவர்வழி நால்வர் துதிகளையும், அருட்பாவினையும்,
பாராயணஞ்செய்யுஞ் சுத்தசைவர்களையுந் தூடணையால்
நிரப்பி நிந்தனைசெய்யும், இந்நா. கதிரைவேல னுடல்
இடுகாட்டிற் கரியாய் வேகத் திரிபுர தகன காலத்திற்
றிறந்த நெற்றிக் கண்ணால் ஊழித் தீயை யூட்டியெரிப்பாய்.

---

## நா. கதிரைவேல் உத்தரகிரியைப்பாடல்.

இஃது சுப்பிரமணிய உபவாசி வித்துவா னியற்றியது.

---

எழுசீர்க் கழிநெடில் கொள்ளி யாசிரியவிருத்தம்.

ஓங்கலிலாக் கதிரைவேற் சவந்த னக்கிங்
குயர்*முத்து வீரன்மலச் சிறுநீர்வார்த்து
ஆங்கினிதாய்ப் பொட்டாட்டி யெருக்க மாலை
யழகாகச் சிரஞ்சூட்டி மூதேவிப்பெண்

---

* முத்துவீர னென்பான் மயானத்துள்ளவ னென்றறிக.

பாங்கினித்தாய் மாரடிக்க வித்வ சைவர்
பலருமே யார்ப்பரிக்கப் பாடை யேற்றிக்
காங்குமேல் மூடிச்சுடு காட்டி விட்டுக்
கரியாக வேகவைக்கக் காலமாச்சே.

---

## கதிரைவேற் காஷ்ட தசமகூட நேரிசை வெண்பா.

போற்று மகான்கடமைப் போக்கிலே நாடணிந்த
மாற்றக் கதிரைவேல் மாண்டானே — சாற்றுஞ்
சரிமுத்து வீரன் றனற்கொள்ளி வைக்கக்
கரியாக வெந்தானே காண்.

சொன்னதையே சொல்லுங் கதிரைவேற் றுட்டனுடல்
வன்னமுத்து வீரனால் வாரியிட்டுத் — துன்னும்
எரியனலை மூட்டி யிருப்புதண் டமோதக்
கரியாக வெந்தானே காண்.

மோனமிலாச் சும்பன் முசுடன் கதிரைவேல்
ஆன சவமா யழிந்தானே — வானத்
தெரியார்ப் பரித்திங் கிடுகாட்டில் மூண்டு
கரியாக வெந்தானே காண்.

பேய்க்குணங் கொண்டலையும் பேதைக் கதிரைவேல்
வாய்க்கரிசி யிட்டு மயானத்தில் — நாய்கள்
நரியிழுத்துக் கூளிக் கழுகுகளு நாடக்
கரியாக வெந்தானே காண்.

நல்லோர் மனநோக நாளிற் கதிரைவேல்
பல்லோர்கா ணப்பிணத்தின் பண்பானான் — எல்லார்
எரிமயா னத்தி லிவனைக்கொ ளுத்தக்
கரியாக வெந்தானே காண்.

நோய்கொண்டான் பாபத்தின் நோக்குற்றுன் சீர்கெட்டுப்
பாய்கொள் கதிரைவேற் பாதகன்றன் — வாயில்
அரிசியிட் டங்கன்னோ ரலற இடுகாட்டிற்
கரியாக வெந்தானே காண்

கோணல்வழி செல்வான் குரங்கன் கதிரைவேல்
நாணிலாத் துட்டனலங் கெட்டோன் — வீணில்
மரியாதை யில்லாத மட்டைசுடு காட்டிற்
கரியாக வெந்தானே காண்.

தோட்டி யெடுத்துக் கதிரைவேற் றுட்டனுடல்
நீட்டிவைத் துக்காலே நேரிறுக்கிக் — காட்டில்
அரியிட்டு வேகவைக்க ஆகாத சாம்பற்
கரியாக வெந்தானே காண்.

தொல்லுலகின் ஞானிகளைத் தூறுங் கதிரைவேல்
அல்லற் பட்டிங்கே யறிவழிந்து — பொல்லா
எரிநரகிற் சார இடுகாட்டி லின்னே
கரியாக வெந்தானே காண்.

தோதகங்கள் செய்யுமா துட்டன் கதிரைவேல்
பாதகனாய் மாண்டான் பரிதபித்தே — ஏதப்
பொரியாகப் பொய்மெய் புகைந்தே யெரியக்
கரியாக வெந்தானே காண்.

---

## கதிரைவேலர் படிற்றொழுக்கம்.

பின்வரும் ஈழத்துப் பன்னாலை மேட்டுத்தெருவி லிருக்கும் ஜேம்ஸ் பிள்ளையின் கடிதமூலந் தெரிந்த விஷயங்கள் சென்னைநகர வாசிகள் முழுதும் ஏமாந்து கெட்டுவிடாமல் இந்நா — கதிரைவேலன் படிற்றொழுக்கங்களிற் சிலதெடுத்து முக்கியமாகக் காட்டுதல் அவசியம் எனது கடமையாதலால் அதிற் சுருக்கமாகச் சில வருமாறு:

“புலையரிலுந் தாழ்ந்த பாணச்சாதி யீழக்கிறிஸ்த்தவ னொருவனிவன் மல்லாகத்திலும், மாவெட்டிபுரத்திலும், அளவெட்டி முதலிய நாடுகளிலும் இவனது வியபசாரம் பொய்க்குறளைச் சொற்கள், திருட்டு முதலிய குற்றங்களுக்காகப் பலதரந் தண்டனை யடைந்ததன்றி டஜ னடிகள் பட்டும், அபராதங்கள் கொடுத்துங் கண்டோர் நகைத்துக் காறி உமிழ உடம்பெடுத்து வளர்ந்து திரிந்த விவன் வயிறுவளர்க்க வழியற்றவனாகி, சென்னை நகரத்தடைந்து, சந்துகள், வீதிகள்தோறுந் திரிந்து பிச்சையகப்படா விட்டால்என்செய்வான்? பாவம்! சோம்பேறிகளுடன் கலந்து அவர்களால் எச்சிற்சோறுண்டு சிலகாலங் கழித்த ஈழநாட்டுக் கிறிஸ்தவக் கொள்கைப் போலிச்சைவனாகும்.” இந்நா — கதிரைவேற் பிள்ளை, ரிப்பன்பிரஸ் சை. இரத்தினசெட்டியாரிடம் அனாதாவாக வர இவனைக்கண்டு மனமிளகி நாளொன்றுக் கிரண்டணா கொடுத்துவரக் காலங்கழித்தனன்.

அடுத்தவருடம் “மீனின் குஞ்சுக்கு நீச்சுங் கொடும்பாம்பின் குட்டிக்கு நஞ்சுங் கொடுத்தவரார்” என்பதற்கிணங்க இவனது குணங்

கெட்டதொழிலைப் பலவாற்றானுங் கண்ட செட்டியார் தன்னிடஞ் சேர்க்காமற் பயமுறுத்தி விரட்டித் துரத்தினர்.

அங்கிருந் தென்செய்வோமென் றேங்கி ஸ்ரீ சச்சிதாநந்த சுவாமிகள் மடத்திற்சேர்ந்தனன். அங்குள்ளார் பரிதபித்தவராகி இவனுக்கு நன்மதி புகட்டி நாளொன்றுக்குக் காற்படி யரிசியும் மற்ற சம்பாரவகைகளையும் கொடுக்க வாங்கிப் பொங்கி நாய்போற்றின்று வயிறு வளர்த்தனன். சுமார் இவ்விதமாக மூன்றுவருடங் காலங்கழித்துப் படாதபாடுபட்டுப் பலரிடத்தும் யாசித்துக் கலியாணஞ் செய்துகொண்டு வருகிறேனெனச் சென்ற விவன் நாலைந்துமாதங் கழித்துப் பின்னர் ( கிடாரிக்கன்றுடன் பசுவையுங் கூட்டிவந்தனன். )

இதனைக்கண்டு வியப்புற்ற கல்விகேள்விகளிற் சிறந்த சென்னை நகரவாசிகள் ஈழத்தார்களிட மிதனுண்மையைத் தெரியக் கார்டெழுதி வினவினர்கள். ( அவருள் ஈழத்துப் பண்ணையில் மேட்டுத்தெருவி லிருக்கும் ஜேம்ஸ்பிள்ளையென்பவ ரெழுதிவிடுத்த நிருபம் பின்வருமாறு:

“ஐயா, இதற்கடுத்த சுன்னாகத்தில் ஜான்பிள்ளையென்பவர் மரி
“ சூசை யென்னும் பெண்ணை விவாகஞ்செய்து ஓர் பெண்மகவை யீன்று
“ ஆறுமாதங் கழிந்தபின்னர் இறந்தனர். அம்மரிசூசை யென்னுங் கைம்
“ பெண் அநாதாவாகி வருடகாலமிருந்து பின்னர்ப் படிப்படியாக மூவர்
“ சம்ரட்சணையில் இருந்தனள். அவர்களுங் கைவிட்டுக் காலியாயிருந்த இப்
“ பெண்ணை அந்நேரங்கண்ட இந்நா — கதிரைவேற்பிள்ளை யென்பவன் சம
“ யம் வாய்த்ததெனெ அடித்துக்கொண்டு சென்னைப்பட்டின மோடிவந்
“ தனன். இப்பெண்ணிற்கு நேசராக முன்னிருந்த புருடர்கள் செம்மை
“ யாகவுதை குத்துகள்கொடுக்க முயன்றுந் தேடினர்கள். ஏதோ நல்ல
“ காலந் தப்பித்துக்கொண்டனன்.”

இனி வெளிவரும் புத்தகத்தில் இவனைச்சார்ந்த சரித்திர விநோதங்கள் விரிவாயெடுத்தெழுதப்படும். அதிற் பதினறிலொருபங்கு சென்ற பிப்ரவரிமாதம் வெளிவந்த “கலிப்பாவலர்கட்காங் கலிவெண்பாவில்” வெளியாயுமிருக்கிறது. இஃதிங்ஙனமிருக்க, இந்நகரவாசிகளாகுஞ் சைவர்க ளிவனை ஆலயங்களிற் வரவழைத்தும் இவன் குளறிவழியும் பிரசங்கங்களைக் கேட்டும் ஏமாந்தனர்கள். பாவம்! என்செய்வார்கள்? இந்நா — கதிரைவேற்பிள்ளையின் படிற்றொழுக்கமுற்ற ஆஷாடபூதித்தனத்தை இப்பத்திரிகை வாயிலாக வல்லவர் கண்டுதெளிவார்கள்? இஃதிருக்க,

வைதிக சுத்தசைவ சமையாசாரிய ராகிய ஆளுடைய பிள்ளையார் அருள்பெற்றோங்குஞ் சிவஞான சன்மார்க்க தீக்ஷாபி தானுனு சந்தான

நெறிகொண்டு திருவருட்பிரகாச வள்ளலாரெனப் பேர்பெற்று முத்தமிழ் வல்ல ஞானாசிரியர், சுத்த சன்மார்க்க போதகாசிரியர், சமரசவேத சன்மார்க்க சங்கத்தாபகாசிரியர் என்னுங் காரணப்பெயருடையவராய், வடற்பெருவெளியில் சுத்தசிவ நித்தியாநந்த சமரசானுபவாதீத நிலைகூடி யெழுந்தருளியிருந்த சிதம்பரம்—ஸ்ரீமத் இராமலிங்கசுவாமிகளையும், அவர் திருவாய்மலர்ந்தருளிய திருவருட்பாவினையும் அவ்வளவு அருமையும் பத்திமார்க்கமுமுற்று விளங்க உலகெலாம் விளங்குஞ் சூரியனை இப்பாணச்சேரிப்பறையனது தூஷணையென்னுஞ் சிறிய குடையால் இவனும் இவனைச் சார்ந்த மாபாதகர்களும் மறைக்கப் பார்க்கிறார்கள். இது கலிகால வைபவமேபோலும்.

( 7—3—1904. )

இங்ஙனம்,

பார்வதிபுரம் – வடலூர் – சோமசுந்தரம்பிள்ளை.

---

இலங்கணிப்பிள்ளை என்ற பறையன் தனது பாசுபதாஸ்திரப் பிரயோகப் பிரசண்டமாருதமென்னும் பத்திராஸ்திரத்தில் "போலிமுத்து வீரனுக்குப் புறப்படுமே பின்னால்" என அபிமந்திரித்து விட்டமையால் முத்தமிழ்ப்புலவரின் மாணாக்கருளொருவரான ச. த. கங்காதரப்பாவலர் என்பாரொருவர் இப்பறையன்மீது "எரிகோணமலை இராமபாண"மெனனுர் பத்திராஸ்தரத்தை அபிமந்திரித்துவிடுத்தார்.

---

உ

அருட்பிரகாசனடியிணைவாழ்க.

# திரிகோணமலை இலங்கணிப்பிள்ளைக்கெரிகோணமலை இராமபாணம்.

---

ஏ! ஏ! திரிகோணமலை இலங்கணிப்பிள்ளையே!

"போலிமுத்து வீரனுக்குப் புறப்படுமே பின்னாலே" என்றெழுதினாயே? பின்னாற் புறப்படுகிறது, பன்றிகட்குதவும். இதோ! முன்னாற் புறப்பட்டிருக்கிறது, ஏற்றுக்கொள். புளி, மிளகாய், எலுமிச்சம், மூச

னுண்டைகள் விற்றுக் காலங்கழிக்கும் முண்டைப்பிள்ளைகள் முன் உலண்டத்தனப் பிரசங்கஞ் செய்யும் இலங்கணிப்பிள்ளையே, உனக்குப் பேர்மாற்றி வைத்தவர்கள் புத்திசாலிகள்தான். அதன் பிரயோசனஞ் சீக்கிரத்தி லடைவாய். எமதாசிரியர் பெயரை ஏனிழுத்தாய்? அவர் உனக்கென்ன தீங்கிழைத்தார்? நீயேவந்து மாட்டிக்கொண்டாய். இனி மீளப்

முத்தமிழ்ப் புலவன் முதிர்முத்து வீரன்
எத்துகள் பேசு மிடும்பர் வாய்களை
நித்தங் கிழிக்கு மெதிர்வேல் நிபுணன்முன்
தத்தியோ டாதே தங்கிநீ நில்லடா.

என்னடா ஏலே! பின்னுற்புறப்பட அத்தனைத் தாமதமேன்? முன்னுற் புறப்பட லாகாதா? சீக்கிரம் ஓடிவாடா, ஓம்பட்டு சுவாஹா? நல்லதிருக்கட்டும்! முத்தமிழில் எத்தனைத் தமிழைக்கற்றாய்? அடலே, ஓடாதே, நில்! முத்தமிழுக்கு மெத்தனை இலக்கணங்கள்? அதில் எத்தனை இலக்கணங்கள் உனக்குத் தெரியும்? முன்னுல் மதுரையிலும், பின்னுற் சென்னையிலும் ஆறந்தவேத சமரச சன்மார்க்க சங்கத்தலைவர்களைக் கண்டும், பலதரம் பதுங்கிப் பயந்து ஓடினையே! அப்படி யோடி யொளியாதே. சல்! நில்! இதற்கு விடையளித்த பின்னர் இசை நாடகத் தமிழ்ச் சூத்திரங்களிற் சிலகடாவுவாம். அதற்கிசைவாயாக. மேலும் நீயெழுது மீழுத்தமிழே நின் கல்வியின் தேர்ச்சியி னியல்பைத் தெரிக்கிறது. “பொய்க்குப்பொய் கோளுக்குக்கோ ளறிவிலாதார்க் கிரட்டிப் பறிவுடையோர் செயுமாண்மைகளே” என்னு மூதுரைக்கிணங்கி, நீ யெழுது மசிங்கிதத் தமிழையொட்டி எழுதினேன். எனெனில்? வெற்றியடையும் பொருட்டே! சீ! ஏலே! ஓடாதே நில். நீ செந்தமிழ் நடையில் வந்தால் நானும் அப்படியே வருவேன், போக்கிரித் தமிழ்நடையில் வந்தால் நானுமப்படியே. உஷார். நின்னைத் தூண்டின அடைபட்டவன் முருங்கைக்கிளை, இலக்கணமின்றி மலக்குத் தமிழ்ப் பாடுபவன். அவனைத் துணைபற்றுதே. டம்? டம்?

“துங்கக் கரிமுகத்துத் தூமணியே நீயெனக்குச் சங்கத் தமிழ் மூன்றுந்தா” என்னு மூதாட்டியா ருரைக்கிணங்கி, முத்தமிழுக்குரிய விலக்கணங்க ளித்தனையென நீ அறியாவிட்டாலும், அஃது விரவி நடக்கும் நான்காஞ் சங்கப்புலவர் பெருமான்களி னடிவீழ்ந்து பணிந்தாகிலு மறிந்துரை, பிள்ளையார் குட்டிக்கொண்டேன். ஆதலாற் பள்ளிச் சிறுவர்

கட்காங் கடாவினை ஈழநாட்டுப் பாணச் சிறுவ! நினக்குக் கடாயினேன். ஓம் பட்டு சுவாஹா, சீக்கிரம் ஓடிவாடா? ஏலே தாமதிக்காதே.

நாளும் சாதுக்களாயும ஆனறமைநத விததுவானகளுமான சுத்த சைவ சன்மார்க்கர்களைப் பதுங்கிப் பதுங்கிப் ஏய்த்துக்கொண்டிருந் தனை; அவர்களும் உன்னைச் சூகரமென வெண்ணிப் பதுங்கப் பதுங்க, வேட்டையாடத் தெரியாத சோம்பேறி நாய்களைப்போலக் குலைத்து நக்க ஓடினாய்; அங்ஙனஞ் செக்கென்றுஞ் சிவலிங்கமென்றுந் தெரியாத காரணமேயாம். இனி யப்படி யிருக்கமுடியாது. உன் கல்வித்திறத்தை யறியவேணும். வெளியில் வந்துவிடு பதுங்காதே, அடே ஏலே, எச்ச

“ தக்கநற்குலமும் ஞானிகளுறவும சாரு நல விவேகமுந தவமும, ஒக் கவே யமைந்த முத்தமிழோரை ஓங்கியே பார்ப்பதல்லாமல், மிக்கவே குலைத்துத் துரத்தியேயோடும் மேன்மையை யறியுமோ? அதுபோல்,நக்கு நாய்களுக்குச் சிவலிங்கஞ் செக்கி னலங்களைக் காண்பதுண்டாமோ? ”. என்னு மூதுரைக் கிணங்கினையே. சரியான பெயருடன், பதுங்காது வா

(15—3—1904)

இங்ஙனம்,

முத்தமிழ்ப்புலவன் பூ. முத்துவீரப்பிள்ளையின்

மாணாக்கருளொருவன்,

**ச. த. கங்காதரப்பாவலன்.**

---

இவை இவ்வாறிருக்கக் கதிரையார் சென்னையி லுள்ள அயனவரம், குயப்பேட்டை, சிந்தாத்திரிப்பேட்டை முதலிய பற்பல விடங்களில் சிறு வர்களையும் இழி ஜனங்களையுங் கூட்டஞ்சேர்த்து வைத்துக்கொண்டு இராமலிங்கபிள்ளை, பிரம விஷ்ணு உருத்திரர்களை மலப்புழுக்களென நிந்தித்தாரென்றும், தகராகாயமாகிய சிதம்பரத்தைத் தூஷித்து வடலூர் சுடுகாட்டையே உத்தரஞான சிதம்பரமென்றார் என்றும், சிவபெருமானுக் குரிய திருவருட்பிரகாச வள்ளலாரென்னும் பெயரைத் தான் வைத்துக் கொண்டாரென்றும், தாம் பாடிய பாடல்களுக்குத் தேவார திருமுறை களுக்குரிய திருவருட்பாவென்ற பெயரை வைத்துக்கொண்டாரென்றும், செத்தாரை எழுப்புவேமென்றாரென்றும், வேத சிவாகமங்களைப் பயனில

வென்று பழித்தாரென்றும், அவர் பாடிய பாடல்கள் அருட்பாவாகா மருட்பாவே என்றும், அதைத் தொட்டாலுங் கையழுகும் சொன்னாலும் நா புழுக்கு மென்றும், கிறிஸ்துவ உபதேசியாரைப்போல் காலசைத்தும், கையசைத்தும், தலையசைத்தும் பிரசங்கஞ் செய்யலாயினர். இதைக்கண்ட பேதையர்கள் மயங்கினபோதிலும் விவேகிகளாயுள்ளவர்களில் பயித்தியக்காரன் உளறிக்கொண்டு போகிறானெனச் சென்றனர் சிலர், சிவயோகியாயுள்ள இராமலிங்க சுவாமிகளைத் தூஷித்தால் தீரா நரகிற் காளாவானெனச் சபித்துச் சென்றார் பலர்.

தீயாரைக் காண்பதுவுந் தீதே திருவற்ற
தீயார்சொற் கேட்பது வுந்தீதே — தீயார்
குணங்க ளுரைப்பதுந் தீதே யவரோ
டிணங்கி யிருப்பதுந் தீது.

என்ற மூன்றோர் வாக்கியத்திற் கிணங்க அவனுரையாடலைக் காதிற் கொள்ளலாகாதெனை ஒதுங்கினர் பலர்.

எத்தகையார் எவ்விதப் புத்திசொல்லினுங் கேளாது "கொடிறும் பேதையுங் கொண்டது விடாதென"த் தானெடுத்த சபதத்தை எவ்விதத்து முடிக்கவேணுமென்று இவ்விதத் தூஷணப் பிரசங்கஞ் செய்துவந்தார்.

இவ்வளவி லொழியாது நாம் இதுவரையிலும் செய்த தூஷணைகளுக்கு யார் என்ன செய்துவிட்டார்கள். அதனால் நாம் எடுத்த காரியத்தை எவ்விதத்தும் முடிப்பலெனை 1904-ம் ஷ ஜனவரி மாதத்தில்,

## (7) இராமலிங்க பிள்ளை பாடல்.

---

ஆபாச தர்ப்பணம் அல்லது மருட்பா மறுப்பு

என்னும் ஓர் அவலச்சுவடியை எழுதித் தமது மாணக்கர் வன்னிய குல பாலசுந்தரநாய்க்கர் பெயரால் அச்சிட்டு 20-3-1904 ல் மயிலாப்பூரில் பிரசங்கஞ் செய்யலாயினர். இவ் வழுஉச்சுவடியில் பாரிலுள்ள பாபங்களை யெல்லாம் திரட்டி யெடுத்து இராமலிங்க சுவாமிகளின் மீதும், திருவருட்பாமீதும் சுமத்திக் கோவை செய்தது போலும் பொதித்திருக்கின்றது

இது இராமலிங்க சுவாமிகளின் சார்பார் கோபாவேசத்தை அக்கினியில் நெய் சொரிந்ததுபோலும் எழுப்பிவிட்டது.

உடனே மறு ஞாயிற்றுக்கிழமை (27–3–1904) சென்னை குச்சிலிக் கடைக்கடுத்த அன்னதான சமாஜிய சத்திரத்தில் பிரஹ்மஸ்ரீ ஆத்மாராம சுவாமிகள், அரன்வாயல் - வெங்கடசுப்பு பிள்ளை முத்தமிழ்க் கவியரசு சண்முகம்பிள்ளை முதலிய வித்வ சமூகத்தார், கூடிய "திருவருட்பா தூடண நிக்கிரக மகா சபையில்" அவ்வாபாச தருப்பண நூல் கண்டிக்தொதுக்கப்பட்டது. இதன் விபரம் (27—3—1904) திருவருட்பா தூடண நிக்கிரக மகாசபை பத்திரிகையிற் காண்க.

அன்றையதினமே நா. கதிரைவேற்பிள்ளை கடசிரார்த்தமென வடலூர் ஆறுமுகம்பிள்ளை வெளியிட்டதாக ஓர் பத்திரிகை வெளிவந்தது.

அது வருமாறு :—

---

உ

சிவமயம்.

திருவருட் பிரகாச வள்ளலார் சீரடி வாழ்க.

## நா. கதிரைவேலன் கடசிரார்த்தமும்

---

மருட்பாபுத்தகம் அரங்கேற்றின முடிசிகாமணிகளுக்குக் கற்கையும்

திருஞானசம்பந்த சுவாமிகளைப் பசுகரண்முடையா ரென்னும் நிந்தனையாலும், திருவருட் பிரகாச வள்ளலாரை அபூதவுவமை கற்பனையமைந்த நிந்தனைகளாலும், இன்னுமுள்ள சிவனடியார் நிந்தனைகளினாலும், சுத்த சிவ சன்மார்க்கச் செல்வர்களின் மனங்கள் நோகவெழும் அனற்றிரள்கள் ஊழித் தீயைப்போல் மூண்டு, இப்பாணச் சேரிப் பறையன் கதிர்வேலனுக்குள்ள நல்லூழ் சத்துக்களைத் தகித்து விட்டதனால் இவன் இறந்துபோன பிணமாகவே யாயினான். இராவணாதியர்களைப் போல் இவனுக்கு அகால மரணம் நேரிடும் வரையிலும், நடைபிணம் போலத் திரிகிறுனதலால் சுத்தசிவ சன்மார்க்க சைவர்கள் இவனை நாடார்கள்.

ஆனதுகொண்டு துட்டப் பாணச்சேரிப் பறையன் நா. கதிரைவேலனுக்குச் சவச்சடங்குகள், உத்தரகிரியைகள் முதலானவைகளும் நடத்தி

விட்டால், உலகங் கலகமில்லா திருக்குமென்பது துணிபு. நிகழுஞ் சோபகிருதுஞு பங்குனிமீ 8-ம் வ ஆதிவாரம் சுமார் 3 மணிக்கு டாக்டர் சத்திரத்தில் இவனைப்போல வுருவுசெய்து தகனஞ் செய்து கடசிராத்த மென்னும் உத்தரகிரியைகள் முத்து வீரனென்னும் மயானத் தோட்டி யால் நடந்தேறின. சுத்த சைவர்க ளாங்கு வந்தானந்தித்தனர்கள்.

யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலன் மாணுக்கன் கீங்? கீங்? எனத் தொண்டையடைப் பிரசங்கி தணிகாசலமுதலியின் றூண்டுதலால் இத்தனை காரியங்களும் நடந்தேறியதாம். இஃது இராமலிங்க சுவாமிகள் தூஷணையால் இத் தணிகாசலத்தின் கண்ணெளிக்கு ஊனமும் பிள்ளையின் செய்கை பாதக தோஷங்களுமே சாக்ஷியாம். இஃதுமோர் கலிகால வைபவமே போலும். இதற்குப் பின்னிடையோம். எச்சரிக்கை.

ஈழக் கிறிஸ்துவக் கொள்கைப் போலிச்சைவன் அழுக்கா றமைந்த ஆறுமுக நாவலன் வழியேவந்த அஞ்ஞானத்தால் தொண்டையடைப் பிரசங்கி இந்த ஆபாசச் சபைக் கக்கிராசனுதிபதியாய், கழுதை காவெனக் கண்டு நின்றுடிய சபையில்" இவனோர் கோட்டானுக வீற்றிருக்க வேண்டிய தவசியமே. பசுக்கூட்டங்களாகுங் கழுதை, நாய், பன்றி, குரங்கு இவைகளையொத்த நித்தியானந்த முதலி, குமாரசாமி முதலி, சுப்பிரமணிய முதலி, ஆறுமுக முதலியென்னும் போலிச்சைவப் பசாசுகளுக் கிவ்விடத்தில் என்னவேலையோ? பாவம்! அருட்பெருஞ்ஜோதி தனிப் பெருங்கருணை ஸ்ரீ நடராஜப்பெருமான் அழற்கண்ணுக் கெரியால் இவர்கள் மனைமக்களெல்லாம் நாசமாங்காலமே போலும். இதனுண்மை ஆறுமாதத்தில் வெளியாகும். அரசு அன்று கொல்லும், தெய்வம் நின்று கொல்லும் மென்பதே துணிபாம். எச்சரிக்கையாயிருங்கள். அருட்பிரகாச வள்ளலாரது கைலிகித நூற்களில் உத்தரஞான சிதம்பரத்தைப்பற்றின காரணகாரிய விசேடங்கள் எவ்வளவோ தீட்டி யருளியிருக்கின்றனர். அவைகளைக் கூடின சீக்கிரத்தில் வெளிவரும் நூற்களிற் கண்டு தெளிவீர்களாக.

ஸ்ரீ சிதம்பர க்ஷேத்திரத்தைப் பூர்வபக்ஷஞ் செய்து நிந்தித்தவராக அவர் திருவாய் மலர்ந்தருளிய நூற்களில் ஒருவாக்கியமேனுங் கிடையாது. அவ்வாறு நிந்தித்தவராக உங்களுக்குச் சந்தேகமிருக்குமானல், திருவளர் திருச்சிற்றம்பலமோங்குஞ் சிதம்பரமெனும் பெருங்கோயில்" "வானநாடரும் நாடரும் மன்றிலே வயங்கும் ஞானநாடகக் காக்ஷியே நாம் பெறவேண்டும்." என்னும் துதிகளாலும் நடராஜபதிமாலையைப்

போலத் தோத்திரப்பாக்கள் எண்ணிறந்தவைக ளிருக்கின்றன. அவை களைக்கொண்டு கண்டு தெளிவீர்களாக.

இவைகளின் உண்மைகளை யறியாத பசுக்களே, உங்கட்கத்தோத் திரப்பாக்களைப் படித்தறியும் நல்லூழமைந்த சுயபுத்தி இருந்தால், இப் பாணச்சேரிப் பறையன் நா. கதிரைவேல் மொட்டைத் தடிப்பயல் துர்ப் போதனைக் கிணங்கமாட்டீர்கள். ஓ! ஹோ! பாவம்! என் செய்வீர்கள்? கல்வி யறிவில்லாத பசுக் கூட்டங்களாகிய நுங்களைத் தெரிந்தெடுத்து, ஓர் சபையாக்கி, அதிற் றலைவனைப்போல விருந்து அதனப்பிரசங்கஞ்செய்து குளறிவழிகிறான். இவனது பிரயத்தினம் மேற்சொன்ன நரிகளின் பிர யத்தினமேபோலும்.

கூடின சீக்கிரத்தில் வடற்பெருவெளி அன்பர்களாகிய எங்களால் இவன் குளறுபாடுற்ற ஆபாசத் தர்ப்பணங்களுக்குக் கண்டனைகள் வெளி யாகும். கண்டு தெளிவீர்களாக.

இங்ஙனம்,

(27—3—1904)

வடலூர் - ஆறுமுகம்பிள்ளை.

---

இஃதிங்ஙன மிருக்க (9—4—1904) கதிரையார் காஞ்சீபுரம் ஆடி சன்பேட்டை ஜவுளிக்கடை சத்திரத்தில் இராமலிங்க பிள்ளை பாடல் ஆபாச தர்ப்பண மகோபந்நியாசம் செய்வதாகவும், அதுகாலை "இராம லிங்க பிள்ளை பாடலைப்பற்றித் தர்க்க ரீதியாய் உபந்நியாசகரிடம் தங்க ளாக்ஷேபங்களை யுரைக்கிற் றக்க சமாதானங் கூறப்படும்." என்று விளம்பர மிட்டு உடனே ஷை இராமலிங்க பிள்ளை மாணாக்கர் முத்துச் சாமி முதலியார் வந்தால் கலகம் நடக்கும், அதனால் அவர்மட்டும் அவ் விடத்தில் வரக் கூடாதெனப் போலீசு பந்தோபஸ்து செய்து கொண்டு யாருமில்லாத வூரில் அஸ்வமேதயாகஞ் செய்வதுபோலவும், தட்டிப் பேச ஆளில்லாத விடத்தில் தம்பி பேசுவதில் சண்டப் பிரசண்டன் என்பதற் கிணங்கவும், கதிரையார் இராமலிங்க பிள்ளையின்மீ தெழுதிய மருட்பா மறுப்பென்னும் ஆபாசநூலை யெடுத்துப் பிரசங்கஞ் செய்யலாயினார். அச்சபையிலுள்ள சில பிரபுக்கள் ஷை சுவாமிகளின் மாணாக்கர் தேவாரம் முத்துச்சாமி முதலியாரை வைத்துக்கொண்டு பிரசங்கித்தா லன்றோ உண்மை வெளிப்படும். நீரே நமக்குத் தோன்றியவாறு தூஷணப் பிர சங்கஞ் செய்வது தகாதெனை மறுத்தார்கள். அங்ஙனமாயின், அவரை அழைத்து வாருங்களெனக் கூறினார். அவருள் ஒருவர் அவரை அழைக் கச் சென்றார். உடனே கதிரையார் வேறொருவரை விடுத்து முதலி

யாரை உள்ளேவிடாதீர் எனப் போலீசு காவலாளிக்கு உத்தரவு செய் தனர். அது சங்கதி தெரிந்து அழைக்கப் போனவர் மீண்டும் வந்துட் கார்ந்து இன்னும் கதிரையார் என்ன செய்யப் போகிறார், அறியவேண்டு மெனப் பொறுமையோ டிருந்தனர்.

கதிரையார் இராமலிங்க சுவாமிகளின் மீதும் திருவருட்பா மீதும் பலவாறாகத் தூஷணப் பிரசங்கஞ் செய்து முடிந்தவுடன் முடிவில் சுமார் 30 வருடத்துக்கு முன்னர் ஆறுமுக நாவலர் இப்போலி யருட்பாவைக் கண்ட னஞ் செய்தார். 30 வருடத்துக் கொருதரம் நடந்த ஓர் விஷயத்தைப் புதுப்பிக்க வேண்டுமாகையால் அதன்பின்னர் நாமிப்போது கண்டனஞ் செய்யவந்தேம் என்று கூறினார். அச்சபையிலிருந்த ஒருவர் அடிக்கடி சர்வே (Survey) செய்வதுபோலுமோ? வென்றார். மற்றொருவர் க்ஷவரம் அடிக்கடி செய்து கொள்ளாவிட்டால் மயிர்முளைப்பதுபோலு மென்றார். (இதனால் கதிரையாரை அம்பட்டனெனக் கூறியவாறாம்.) பின்னரொரு வர் ஆடை அடிக்கடி வெளுக்காவிட்டால் அழுக்கடைவது போலுமென்றார். (இதனால் கதிரையாரை வண்ணானெனக் கூறியவாறாம்.) இவற்றைக் கேட்ட சபையோர் கைகொட்டிக் குலுங்க நகைத்தார்கள்.

இது விஷயமாகச் சென்னையில் நடந்த வேறொரு பிரசங்கத்தில் தண்டலம் பாலசுந்தர முதலியார் 30 வருடத்துக்கு முன்னர் ஆறுமுக நாவலர் தோன்றிக் கண்டனஞ்செய்தார். இப்போது கதிரைவேற்பிள்ளை தோன்றிக் கண்டனஞ் செய்துவருகிறார். இன்னும் 30 வருடத்துக்குப் பின்னர் மயிற் பிள்ளை என ஒருவர்வந்து கண்டிப்பார் போலுமெனக் கூறி நகையாடினர். அதனை யிவர்செய்யும் பிரசங்கங்களெல்லாம் மிகவும் வியக்கத் தக்கனவே யாம்.

---

## கதிரையார் இராமலிங்கபிள்ளை சார்பாரைவெல்லச் சூட்சி செய்தது.

---

கதிரைவேற் பிள்ளை உடனே சென்னைவந்து சேர்ந்து இங்ஙனம் அவமானப் பட்டமையானே நாம் இனி என் செய்வதென ஆலோசிக்கத் தொடங்கினர். இராமலிங்க பிள்ளையையும், அவரது திருவருட்பாவை யும் போற்றுவோர்தம் மனதைக் கலக்கி நம்முடைய வழியில் நிறுத்தி ஜெயக்கொடி நாட்டலாமென் றெண்ணி முன்னர் ஆறுமுகநாவலரின் மாணக்கர் தியாகேச முதலியார் பேரால் வெளியிடப்பட்ட "போலி யருட்பா மறுப்பு" பிற்காலத்தில் நம்மா லுண்டாக்கப்பட்ட "முக்குண

வயத்தின் முறைமறைந்தறைதல்" "சிவாலய முனிவர் செய்த அருட்பாச் சிறப்பு " " இராமலிங்க பிள்ளை படிற்றொழுக்கம் " " சபாபதிபிள்ளை செய்த அங்கதப் பாடல்கள் " என இவ்விதமாக அபூர்வமான கற்பனை செய்து பத்திரிகைகளை வெளியிட்டனம். பின்னர் " இராமலிங்கபிள்ளை பாடல் ஆபாச தர்ப்பணம் அல்லது மருட்பா மறுப்பென" ஓர் அரியநூலை வெளியிட்டனம். இந்நூல்களை இராமலிங்கபிள்ளை சார்பார் வாசித்தாலும் கேட்டாலும் அவர்கள் எத்தகையாரேனும் அவர் மனம் மயங்கி இராமலிங்க பிள்ளையின் மீதும், அவரது அருட்பாமீதும், அருவையைகொண்டு நமது சார்பில் திரும்பி யிருக்கவேண்டும். அவ்வாறின்றி இராமலிங்க பிள்ளையின் சார்பார் "அவுட்பீரங்கி" என ஓர் பத்திரிகை யெழுதிவிடுத்து நம்முடைய மனதைக் கலங்கச் செய்தனர். ஆயினும் நாம் அதன்மேல் அவர்கள் அஞ்சி ஓடும்படி " பிரசண்டமாருதக் கோடை இடி"யெனஓர் பத்திரிகை விடுத்தோம். அதற்கும் அவர்களஞ்சாராய் "சஞ்சீவிராயன் விடுத்த எரி நகர் தகனம்" என்றெழுதி அதில் நம்மை வையாதும் வைது நாம் ஆறுமாதத்தில் இயமலோகம் சேர்வோமென்றும், இடுகாட்டில் வைத்தெரித்துச் சாம்பராக்கி உத்தர கிரியையும் முடித்துவிட்டார்கள். இதன்மேலிட்ட அவமானம் என்னவிருக்கிறது! அம்மட்டில் விடாது ஓர் பஞ்சமனைக்கொண்டும் இராமபாணமென ஓர் பத்திரிகை எழுதி வையாதெல்லாம் வைது அவமானப் படுத்தினார்கள். இச்சென்னையி லுள்ளார்தாம் இவ்விதம் நடத்தினார்களெனக், காஞ்சிபுரத்தில் ஆடிசன்பேட்டை ஐவுளிக்கடை சத்திரத்தில் தக்கபலவான்களைக் கொண்டு நாம் அருமையாகச் செய்த "மருட்பா மறுப்பை" பிரசங்கஞ் செய்தபோது அங்குள்ளார் நம்மை அவமானப் படுத்தி அனுப்பிவிட்டார்கள். இனி நாம் பாதிரிகளைப் போற் பிரசங்கஞ் செய்தும் என்னபலன்? அவர்களை ஒரு போதும் திருப்பமுடியாது. வேறு சூட்சி செய்யவேண்டும். அதாவது போலீசி லுள்ளபேர்களில் அநேகர் நம்மூராராகவும் நமக்கு வேண்டியவர்களாகவு மிருப்பதால் நம் பேரில் தூஷணையாகப் பத்திரிகைகளை எழுதி விடுத்தோரையும் அதை வெளிப் படுத்திய அச்சாபீசாரையும் போலீஸிலழுத்துத் தண்டித்து விடுவோமானால், இனி ஒருவரும் நம்மை எதிர்க்கமாட்டார்கள். அப்போது நாம் என்ன பிரசங்கஞ் செய்தபோதும் ஒருவருங் கிட்ட நாடார்கள்.' அக்காலத்தில் நம்முடைய கக்ஷியை நிறுவகித்து ஜெயக்கொடி நாட்டலாமென்று ஆலோசித்து முடிவு செய்துகொண்டார்.

கழுநாட்டு நா. கதிரைவேற்பிள்ளை

# இராமலிங்கபிள்ளை சார்பாரின்பேரி லெடுத்த போலீசு கேசு.

அருட் பீரங்கி, எரி நகர் தகனம், எரிகோணமலை இராமபாணம், கதிரைவேலன் கடசிரார்த்தம் ஆகிய மேற்கண்ட பத்திரிகைகள் அச்சா பீசு பேர் குறியாமல் சென்னை காமகோட்டி பிரசில் அச்சிடப் பட்டதாக அந்த அச்சுயந்திரசாலைத் தலைவராகிய கிருஷ்ணசாமி முதலியார் பேரி லும், தஞ்சை சண்முகம் பிள்ளை, முத்துவீரன் ஆகிய பின்னிருவரும் தங் கள் பெயர்களைக் குறியாது ஷை பத்திரிகைகளை அச்சிட்டு வெளிப்படுத் தியதாக அவ்விருவர் பேரிலும், போலீசார் தரபில் நா. கதிரைவேற் பிள்ளையால் சென்னை பிரசிடெண்ஸி மாஜிஸ்திரெட்டு கோர்ட்டில் 1904-ம் வருத்திய 14,575 வது நம்பர் காலண்டரில் கிரிமனல் கேசு தாக் கல் செய்யப்பட்டது.

அது (10-5-1904 ல்) விசாரணைக்கு வந்தது. கிருஷ்ணசாமி முதலி யார் 1. சண்முகம் பிள்ளை 2. முத்துவீரன் 3. ஆகிய நீங்கள் மூவரும் குற்றவாளிகளென ஒப்புக்கொள்ளுகிறீர்களா? இல்லையா? வென மாஜிஸ் திரெட்டார் கேட்டார். அதற்கு மேன் மூவரும் நாங்கள் குற்றவாளிக ளாகோமென விடையளித்தனர்.

வாதி தரபில் முதலாவது சாக்ஷி நா. கதிரைவேற் பிள்ளை, 2 முதல் 9 வரையில் ஷை அச்சியந்திரசாலையி லுள்ள கம்பாசிட்டர் முதலானவர்கள், 10 வது சாக்ஷி போலீசு இன்ஸ்பெக்டர் இவர்களை விசாரணைக்குக் கொண்டுவந்து நிறுத்தினார்கள்.

குற்றவாளிகளெனக் கொண்டு வரப்பட்ட மூவரும் இவர்களைக்கண்டு என்னமோசஞ் செய்யப்போகிறார்களோ? வென நடுக்கமுற்றிருந்தார்கள். அப்போது இரண்டாவது குற்றவாளியாகிய தஞ்சை சண்முகம் பிள்ளை இராமலிங்க சுவாமிகளைத் தியானித்து,

வடலூரென் தேசிகனே வள்ளலே
மாவெளிவா ழுத்தனே யென்
உடல்பொருளா தியவெல்லாம் நீயென்றே
நம்பிவந் திருக்கின் றேனுட்
குடலெலாம் நடுங்கினேன் கொடியரொடு
யாழ்ப்பாணன் குறிவ ழக்கைக்

கெடலென்னுந் தன்மையுறக் கேட்கின்றேன்
திருவுளம்வைப்பாய் கெஞ்சி னேனே.
ஒருநெறியார் திருவருட்பா வடியேங்க
வீடேற வுவந்த ளித்தாய்
பெருநெறியா ரிராமலிங்க வருட்டேசி
காவதனைப் பீடச் சார்பார்
செருநெறியா ரீழர்கள் பொருமையினாற்
சீறிவழக் கெடுத்தார் தீய்த்துக்
கருநெறியாற் கெடுத்தவரை யெனைத்தேற்ற
னின்கடனுங் கருணை வாழ்வே.

என இவ்வாறாகப் பத்துப் பாடல்களை அந்தக் கோர்ட்டு விசாரணையின் போது பாடினார்.

முதலாவது சாக்ஷியாகிய கதிரைவேற்பிள்ளை தான் கொடுத்த வாக்கு மூலத்தில் தனக்கு இக்கேசைப் பற்றி நேரில் ஒன்றுந் தெரியாதென்றார். அன்றியும் தான் 6, 7 வருஷத்துக்குமுன் ஓர் பெண்பிள்ளையைத் தொந்தரை செய்ததற்காக அபராதம் கொடுத்திருப்பதாக ஒப்புக்கொண்டார். மற்றசாட்சிகளும் தாங்கள் யோக்கியர்க ளல்லவெனக் கிராசில் ஒப்புக் கொள்ளும்படி நேரிட்டது. அதன்பேரில் மாஜிஸ்திரெட்டார், விசாரணையில் முதல் சாட்சியாகிய நா. கதிரைவேற் பிள்ளையால் இந்தக் கேசில் தாம் நேராகக் கண்டதொன்றுமில்லை என ஏற்படுதலாலும், பத்தாவது சாக்ஷியாகிய போலீசு இன்ஸ்பெக்டரால் ஷெ பத்திரிகைகளின் நகல்முதலாவது குற்றவாளியின் அச்சாபீசில் அகப்படவில்லை யென ஏற்படுதலாலும், ஏனைய இரண்டு முதல் ஒன்பதாவது சாக்ஷிவரையில் சிலர் தெண்டனை யடைந்தவர்களாகவும், சிலர் இன்ஸால்மெண்டுக்குப் போனவர்களாகவும் சிலர் இராமலிங்க சுவாமிகளின் விரோத கக்ஷியில் சேர்ந்தவர்களாகவும் இருக்கின்றமையானும், வாக்குமூலங்கள் முன்னுக்குப்பின் விரோதமாயிருத்தலானும் ஷெ பத்திரிகைகள் முதலாவது குற்றவாளியின் அச்சாபீசில் அச்சிடப் பட்டதென்பதும், அவை 2, 3 வது குற்றவாளிகளால் வெளியிடப்பட்ட தென்பதும் நம்பததக்க தல்ல. அதனால் கேசைத் தள்ளிவிட்டோம். குற்றவாளிகளை விடுதலைசெய்தோம் எனத் தீர்மானஞ் செய்தார்.

இஃதிங்ஙன மிருக்க, (18-6-1904) காஞ்சிபுரம் ஆடிசன்பேட்டை ஜவுளிக்கடை சத்திரத்தில் திருவருட்பா விஷயமாக இந்து தியாலாஜிக்கல் ஹைஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் ஸ்ரீமான் கோ. வடிவேல் செட்டியாரவர்

களாலும் ஸ்ரீமான் ல. நாராயணசாமி நாய்க்க ரவர்களாலும் பிரசங்கஞ் செய்யப்பட்டு வந்தது. அதுகாலையில் நா. கதிரைவேற்பிள்ளை தமக்குச் சிலரைத் துணையாகக் கொண்டு அச்சபையின் முன்பாக நின்று சில துரா க்ஷேபனைகள் செய்து பிரசங்கத்தை நடக்கவொட்டாமல் கலகஞ்செய்ய ஆரம்பித்தார். ஆங்கு சபைத்தலைவராக வீற்றிருந்த ஸ்ரீமான் முத்துக் குமாரசாமி முதலியாரவர்கள் B. A. கதிரையாரை நோக்கி உமக்குண் டான ஆக்ஷேபணைகளை யெல்லாம் பிரசங்க முடிவில் கேட்கலாம். அதற் குத் தக்க சமாதானங்கள் சொல்வார்கள். இடையில் ஆக்ஷேபணை செய் வது தகுதியன்றென ஒருகால் இருகால் முக்காலுஞ் சொல்லியுங் கேளா தவராய் ஆவேசம் வந்தவரைப்போலக் கூச்சலிடத் தலைப்பட்டார். சபை யாருக்கு வெறுப்புண்டானது மன்றிக் கதிரையாருக்குத் துணையாக வந்த வர்க்கும் வெறுப்புண்டாயது. அங்குள்ளாரிற் சிலரெழுந்து இவரைப் பிடரியைப் பிடித்து வெளியேதள்ளினார்கள். வெளிப்புறத்தி லிருந்தார் இவரைச் சிகையை யறுத்து நையப் புடைத்தோட்டினார்கள். அப்போது கதிரையார் ஓர்வழி, கூடவந்தா ரோர்வழியாகப் பிழைத்தோம் பிழைத்தோ மென் றோட்டம் பிடித்தார்கள். கதிரையார் குடிமி இழந்ததைக் கண் டோர் நகைப்பரென இடிமயிரைத் தம்முடிமயிராகக் கொண்டு திரிந்தார்.

---

## இராமலிங்கசுவாமிகளின் சார்பார்

### எழுநாட்டு நா. கதிரைவேற் பிள்ளையின்மீதெடுத்த

## போலீசு கேசு.

---

இவை இங்ஙனமாக, மேற்படி கதிரையார் எழுதி வெளியிட்ட "இராம லிங்க பிள்ளை ஆபாச தர்ப்பணம் அல்லது மருட்பா மறுப்பு", எனப் பொய் யும் புளுகும் வழுக்களும் நிறைந்துள்ள அந்த அவலச்சுவடியைச் சுவாமி களின் தமயன்பிள்ளையாகிய புராணிகர் பிரசங்க ரத்னாகரம் வடிவேற் பிள்ளை கண்டு மனமாழ்கிக் கண்ணில் நீர்சொரிய இச்சுவடியை எழுதிய மகா பாதகன் அற்பாயுளில் அழிந்து போவான் எனக் கூறிச் சிறிதுநேரம் சிவபெருமான் றிருவருளைச் சிந்தித்திருந்தார்.

(28—6—1904) பின்னர் அவர் அச்சுவடியிற் பொதிந்துள்ள அவ் தூறு குற்றங்கள் பலவற்றுள்ளும், மிகக்கொடுமையாயுள்ள 27 குற்றங் களையெடுத்துக் காட்டிச் சென்னை பிரஸிடென்ஸி மாஜிஸ்திரெட்டு கோர்ட்டு 1904-ம் ஹு த்திய 24, 533 வது காலண்டரில் மேற்படி நா. கதி

ரைவேற்பிள்ளை 1, பு. பாலசுந்தர நாயக்கர் 2 ஆகிய இருவர் பேரிலும் அவதூறு குற்றத்திற்காக வழக்கெடுத்து, போலீசு சம்மனை முன்னர் பாலசுந்தரநாயக்கரிடஞ் செலுத்தினர். இதையறிந்தவுடனே கதிரையார் அஞ்சி நடுங்கி இனி யிவ்வூரி லிருக்கப்படாதெனத் தனது மனைவிமகளை யும், வீட்டுச் சாமான்களையும் இச்சென்னைக்குப் புறம்பாயுள்ள சைதாப் பேட்டையில் வெளிப்படுத்திவிட்டுத் தாம் குடியிருந்த வீட்டைக் காலி செய்து கொடுத்துவிட்டு இனி யென்ன நடக்கிறதோவென அறிய வேண்டுமென்று சிந்தாத்திரிப் பேட்டையில் போலீசு இன்ஸ்பெக்டர் ஈழநாட்டுக் கதிரோசம்பிள்ளை யவர்கள் வீட்டில் பதுங்கி யிருந்தார். வடி வேற்பிள்ளையைச் சேர்ந்தவர்கள் இதன் உளவறிந்து துணிவுகொண்டு டியார் வீட்டில் நுழைந்து சேவகர்களைக் கொண்டு சம்மனை அவரிடஞ் செலுத்தினர். அவரும் இனி தான் என் செய்வதென ஏக்கங்கொண் டிருந்தார்

இது இவ்வாறாகவிருக்க, விசாரணையின்போது மாஜிஸ்திரேட்டார் இந்நூலை யெழுதினவர் யாரெனக் கேட்டார். கதிரைவேற்பிள்ளை டி நூலை தாமே தமது கரத்தால் எழுதி அச்சிட்டிருக்கவும் பூலோக நண்பன் (15-11-1903) பத்திரிகையில் இந்நூல் "ஸ்ரீமந் மாயாவாத தும்ஸ கோளரி நா. கதிரைவேற்பிள்ளை யவர்களாற் செய்யப்பட்டுச் சென்னை வேதாகமோக்த சைவ சித்தாந்த சபையாரால் பதிப்பிக்கப்படுகின்றது. விலை அணா 3. என விளம்பரமிட்டிருக்கவும், "I am not the auther of the Exhibit B" அதை இயற்றிய நூலாசிரியர் நான் அன்று என நீதித் தலமேறிப் பொய்ச் சத்தியஞ்செய்தார். 27-9-1904. ல் இவர் கொடுத்த வாக்கு மூலத்தாலறிக.

பு. பாலசுந்தரநாய்க்கர் தமது ஆசிரியரைக் காப்பாற்று நிமித்தம் "I am the auther of Exhibit B" அந்நூலிற் காசிரியர் யாமே யென அத்தாக்ஷி பத்திரம் எழுதிக்கொடுத்தார். சிவவேடம் சிவசின்னங்களைத் தரித்து வந்த ஆசிரியரே பொய்சொன்னால் சீடன் பொய்சொலக்கணக் கென்னை! குற்றவாளிகளை இவற்றிற்கென்ன சமாதானஞ் சொல்லுகி றீர்களெனக் கோர்ட்டார் கேட்க, அதற்குத் தாங்கள் அச்சிட்ட மருட்பா மறுப்பில் எழுதியவைகளெல்லாம் இராமலிங்கபிள்ளை பாடல்களினின் றும், ஏனையோர் வெளியிட்ட சில பத்திரிகைகளினின்றும் அவரவர்கள் சொன்ன வாய்மொழிகளினின்றும் எடுத்தெழுதப்பட்டதெனக் கூறினர். அதற்குத் தமது பாடலில்

வஞ்ச நெஞ்சினேன் வல்விலங் கனையேன்
மங்கை மார்முலை மலைதனி லுருள்வேன்

பஞ்ச பாதக மோருரு வெடுத்தேன்
பாவி யேனெந்தப் பரிசுகொண் டடைவேன்
கஞ்ச மால்புகழ் கருணையங் கடலே
கண்கள் மூன்றுடைக் கரும்பொனிர் முத்தே
யஞ்ச லஞ்சலென் றன்பனைக் காக்கு
மண்ணலே தணி காசலத் தரசே.

என்று தான்மகா வஞ்சகனென்றும், கழுதை, நாய், குரங்கு முதலி கொடிய மிருகசாதி யென்றும், மகளிர் கலவியை விழைந்தவனென்றும், பஞ்ச மகாபாதக னென்றும் பாவியென்றும், இராமலிங்கபிள்ளை தாமே கூறியிருக்கின்றார். அதனால் அவற்றையே பிரமாணமாகக்கொண்டு எழுதினேனென்றார்.

ஆனால் அவரருட்பாவிலில்லாத 7 குற்றங்களை எடுத்துக்காட்டி இவற் றை ருசுப்படுத்த வேண்டுமெனக் கோர்ட்டார் உத்தரவு செய்தார்கள்.

பின்னுங் கோர்ட்டார் இந்த வழக்கை உடனே விசாரியாதபடி 5 ஸ்ரீ காலம் தவக்கஞ் செய்து வந்தமையால் ஷை கதிரையார் இராமலிங்கசுவாமி களுக்கு விரோதமாக நாவலர்கக்ஷியாரால் வெளியிடப்பட்ட பேரம் பலப் பிரசங்கப் பத்திரிகை, தினவர்த்தமானி, தத்துவபோதினி இவற்றில் முன்னர் ஈழத்தாரால் எழுதிவிடுத்த விளம்பரங்களைத் தாக்கல் செய் தனர். கதிரையார் போலீசார் எடுத்துக்கொண்ட 7 குற்றத்திற்காகவே (1872) பிரசோற்பத்தி ஞு தை ஸ்ரீ வேதாரண்யம் உதயமூர்த்தி தேசிக சுவாமிகளால் வெளியிடப்பட்டிருந்ததாக ஓர் பத்திரிகையினையும், இராம லிங்கபிள்ளை படிற்றொழுக்கமென்ற ஓர் பத்திரிகையினையும், இராம லிங்கபிள்ளையின் தமயனார் சபாபதிபிள்ளை யவர்களால் பாடப்பட்ட தென ஓர் பத்திரிகையினையும் தாமே கற்பனைசெய்து எழுதிப் பழைய காலத்தில் அச்சிடப்பட்டதெனப் பழமையாக்கிக் கோர்ட்டில் தாக்கல்செய் தனர். இவற்றினுண்மை “கதிரையாரைப்பற்றிக் கோர்ட்டில் நடந்த விவ காரமும் முக்குண வயத்தின் முறைமறைந்தறைதல் என்னும் பத்திரிகை யின்மேற் கண்டனமும்” என 1906-ம் ஞு வெளிவந்த பத்திரிகையிற் பரக்கக் காணலாம்.

---

## கதிரையார் பொருள்தேட வெளியே புறப்பட்டது.

---

இதுநிற்க, கதிரையார் நாம் பொருள்தேடிக் கொள்வதற்கு இது தக்க சமயமென நினைத்து ஜனங்களை ஆங்காங்கு கும்பல்சேர்த்து உல

கெங்கும் அருட்பாவையே ஓதி வருகின்றார்கள். தேவாராதிய பன்னிரு திருமுறைகள் ஓதுவாரின்றி மறைந்துபோயின. அதனால் திருவருட்பாவை ஓதலாகாதெனக் கண்டித்துப் பன்னிரு திருமுறைகளை யோதச்செய்து சைவத்தை நிலைபெறச் செய்வதற்கு இதுவரையிலும் நான் பாடுபட்டதேயன்றி என் சுயலாபத்திற்காக நான் பாடுபடவில்லை. இப்போது அருட்பா கக்ஷியார் நம்மைப் போலீசிலிழுத்துவிட்டார்கள். நாம் எதிர் வியாச்சியஞ்செய்து ஜெயிக்காவிட்டால் என்னைத் தெண்டிப்பதுமன்றிக் கக்ஷியோங்கிச் சைவசமயம் அழிந்து தேவார திருவாசகங்களுக்குக் குறைவுண்டாமென நடித்துக் காட்டி, நீங்களெல்லாம் இது சமயத்தில் சும்மாவிருக்கலாகாது, ஒவ்வொரு சபையாரும் கையொப்பப் பத்திரிகைகள் ஏற்படுத்திக்கொண்டு ஏராளமான பொருளுதவி செய்யவேண்டும். இல்லாமற்போனால் பழிசொல் என்னோடு போகாதபடி எங்களைச் சேர்ந்த உங்களுக்குமுண்டாகும். அதனால் க்ஷணப்போதேனும் தாமதியாமல் பொருள் சேகரிக்க வேண்டுமென்று தூண்டிவிட்டார். அந்தச் சபையார்கள் ஒவ்வொருவரும் கையொப்பப் பத்திரிகைகள் ஏற்படுத்திக்கொண்டு கையொப்பம் வைத்துப் பொருளுதவி செய்ததுமன்றிப் புளி, மிளகாய் மூசுண்டைக்கடைகள் முதலிய விடங்களிலெல்லாம் காலணா, அரையணா முதலாகத் தண்டல்செய்து பொருள் சேகரித்து வந்தார்கள். இவர் தாமும் புறப்பட்டுச் சிதம்பரம், சீகாழி, திருவாரூர் முதலிய இடங்களிற் சைவசமயத்துக்கு இராமலிங்கபிள்ளை சபையாரால் ஆபத்து வந்துவிட்டது, காப்பாற்றவேண்டுமென ஒவ்வொரு பிரபுக்களையும் வேண்டிக்கொண்டு அவ்வவர்களால் பொருளுதவி பெற்றுவந்தார்.

கடைசியாகத் தேவகோட்டையிற் சென்று சுழிநாட்டுச் சாமிநாத பண்டிதருக்கு மேற்கண்டவண்ணம் நடித்துக் காட்டினார். அவர் சைவத்தில் மிகுந்த பற்றுள்ளவராதலால், இவர் கூறுவதுண்மையாமென நம்பி இவருக்கு 500 ரூ வரையில் உதவிசெய்தார். அதனோடு நாட்டுக்கோட்டை செட்டிகளுக்குத் தெரிவித்து 1000 ரூ வரையில் பொருள்சேகரித்துதவினார்.

பின்னும் அச்செட்டிமார்கள் கதிரையார் போட்ட மாயப்பொடியில் மயங்கி இவர் சொல்வதெல்லா முண்மையாமென நம்பி இது விஷயத்தில் கோர்ட்டில் எவ்வளவு செலவானாலும் நாம் பொருளுதவி செய்கிறோம், நீர் கேசைவிடாது நடத்துமெனப் பின்னுதவி செய்தார்கள். இவற்றைக் குரோதி ஞு கார்த்திகை மீ 23-ம் உ (7-12-1904) ல் கதிரையாரால் "பன்னிரு திருமுறை யன்புப்பரிசில்" என்ற பத்திரிகையால் விளங்கக் காணலாம்.

## கதிரையார் சாக்ஷிசொல்ல ஆள்கள் பிடித்தது.

கதிரையார் இதைக் கேட்டவுடனே கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்ததெனக் களிப்படைந்து போலீசில் சாக்ஷி சொல்லிவைக்க யாரைப் பிடிக்கலாமென யோசித்தார். ஆதிகாலத்தில் ஆறுமுகநாவலருக்கும், இராமலிங்கபிள்ளைக்கும் விவாதம் நடந்தகாலையில் நாவலர்கக்ஷியிற் சேர்ந்தவர்கள் யாவரென விசாரித்தார். அவர்களில் தமக்கானபடி சாக்ஷிசொல்லும்பக்ஷத்தில் தக்கபடி பொருளுதவி செய்கிறோமெனச் சிதம்பரம், திருப்பாதிரிப்புலியூர், காஞ்சிபுரம், விழுப்புரம், அயனவரம், திருப்பரங்குன்றம், கீழ்ப்பாக்கம், மயிலாப்பூர் முதலிய இடங்களிலிருந்து வயதில் மூத்தவர்களாயும், ஏழைத்தன்மை யுள்ளவர்களாயும் இருப்போரை ஆராய்ந்தெடுத்தனர். அதிலும் பெரும்பாலரா யுள்ளவர்கள் ஆஷாடபூபதிகளாயுள்ள பண்டாரங்களாவர். இவர்களில் இவர் எண்ணத்தின்படி சாக்ஷி சொல்ல இணங்கினவர்கள் 21 பேர்களாவர். சென்னை சிந்தாத்திரிப்பேட்டையில் ஓர் பெரியவீட்டை வாடகைக்கு வாங்கி மோரிசுக்கு ஆள்கள் பிடித்து அடைத்து வைப்பதுபோல அடைத்துக் காவலிட்டு வைத்துக் கொண்டார். இராமலிங்கபிள்ளை மஞ்சகுப்பங் கோர்ட்டில் பொய்சொன்னார் என்பதற்கு 4 சாக்ஷிகளும், இரசவாதஞ் செய்து ஜனங்களை ஏமாற்றினார் என்பதற்கு 4 சாக்ஷிகளும், சூனியஞ்செய்து ஒருவனைக்கொன்றுவிடுகிறேன் என ஓர் பாளையக்காரனிடத்தில் 1000 ரூ. வாங்கிக்கொண்டு கொல்லாமல் மோசஞ்செய்தார் என்பதாக 4 சாக்ஷிகளும், "முக்குணவயத்தின் முறைமறைந்தறைதல்" என்னும் பத்திரிகை 1872-ம் வருஷம் எங்களிடத்தில் வந்திருக்கிறது, நாங்கள் அக்காலத்தே பார்த்திருக்கிறோமென்பதற்கு 4 சாக்ஷிகளுமாகக் கோர்ட்டார் எடுத்துக்காட்டிய குற்றங்களுக்கெல்லாம் சாக்ஷிக்காரர்களை ஏற்படுத்தி, ஈழநாட்டு செந்தில்நாத ஐயரை உபாத்தியாயராக ஏற்படுத்தி இவர்களுக்குப் பாடஞ்செய்வித்து நாடகத்தில் ஒத்திக்கை பார்ப்பதுபோல இரவெல்லாம் பரிக்ஷைசெய்து மறுநாள் காலையில் கோர்ட்டில்வந்து சாக்ஷிசொல்லும்படி செய்வித்தனர். கோர்ட்டுக்குப் போகுமுன்னர் உண்டைக்கட்டிக்குத் திண்டாட்டப்படும் பண்டாரங்களுக்கும், கருமாதி கல்லெடுப்புக் காரியங்களில் சிறிது ஊதியம்பெற்று வயிறுவளர்க்கும் பண்டாரங்களுக்கும், வண்ணானிடத்தில் உடுப்புகளை வாங்கி உடுத்துவித்தும், விபூதிதாரணம் சந்தனப்பொட்டு போடுவித்தும், தங்கத்தாலாகிய கௌரி சங்காங்களும், தங்க இடைமணிகளும் சேர்ந்துள்ள உருத்திராக்கமாலைகளை இரவலாகவாங்கி அணியச்செய்தும், இர

வுல் சால்வைகளை யோகப்பட்டயமாகத் தரிக்கச்செய்தும், இப்போது தான் கைலாயத்திலிருந்து வந்திறங்கின சிவனடியார்களெனக் கண்டார் மனதைக் கவரும்படியாகச் சிவவேடந் தரிப்பித்துக்கோர்ட்டில்கொண்டு போய் நிறுத்தி இவர் தேசிகர், இவர் பண்டாரத்தார், இவர் அபிஷேகஸ்தர், இவர் மடாதிபதி எனக் கூறிக் கண்டவரெல்லாம் பிரமைகொள்ளும்படி செய்தனர். இவர்கள் எவ்விதப் பொய்சொல்லினும் எல்லாரும் மெய்யென நம்புவாரேயன்றி ஒருவரும் பொய்யென நம்பார். மேலும்

காதிலே குண்டலங்கள் கையிலே ஜெபமாலை கழுத்தின் மார்பின்
மீதிலே தாழ்வடங்கள் மனதிலே கரவடமாம் வேடம் பூண்டு
வாதிலே யயன்றேடுந் தண்டலைநீ ணெறியாரே மனிதர் காணும்
போதிலே மவுனமிராப் போதிலே உருத்திராக்ஷப் பூனை தானே.

என்றவாறாக ஒற்றைக்காசுக்குத் தட்டுப்பிக்ஷையெடுக்கும் ஓர் பண்டாரத்துக்கு நீற்றினை நிறையப்பூசிக் காவியுடையும் உருத்திராக்க மாலிகாபரணமுந் தரிக்கச் செய்து இவர் கரபாத்திரசுவாமிகள் எனச் சாக்ஷிகூற வைத்தனர்.

இவ்வாறு நடத்தியபோது ஒரு சாக்ஷி நீதிஸ்தலத்தில் கொண்டுவந்து நிறுத்திச் சாக்ஷி கேட்க ஆரம்பித்த வுடனே இரவிற் பாடஞ்சொல்லி வைத்தபடி சொல்லத்துடங்கினர். ஆகிலும் முதலடி மறந்துவிட்டார். நினைத்து நினைத்துப் பார்த்தும் கியாபகத்திற்கு வரவில்லை. கடசியாக எனக்கு ஒன்றுந்தெரியவில்லை எனக் கூறினமையானே இவரைப் போகும்படி இறக்கிவிட்டார்கள். கோர்ட்டிலுள்ளவர்களெல்லாம் கைகொட்டி நகைத்தார்கள்.

ஈழநாட்டு செந்தில்நாதையரும் இவர்களில் ஒரு சாக்ஷியாதலின், அவரை நீதிஸ்தலத்தில் நிறுத்தி விசாரிக்கும்போது வாதியின் வைக்கீல் எழுந்து இவர் கதிரையாரைப்பற்றி நமசிவாயம்பிள்ளைக்கு எழுதிய கடிதத்தைக்கொடுத்து, இக்கடிதம் நீர் எழுதியது தானா? பாருமெனக் கேட்க, தேகமெல்லாம் விபூதியைப் பூசியும் சுமக்கமாட்டாத உருத்திராக்க மாலைகளைத் தேகத்திற்பூண்டும், திருவாசகத்தைக் கையில் வைத்துக்கொண்டும் அந்தக் கடிதாசியை நான் எழுதவில்லையெனப் பொய்ப்பிரமாணஞ் செய்தார்.

---

## கதிரையார் போலீசில் செய்த ஜாலவித்தை.

பின்னும் இக்கதிரையார் போலிசில் வந்திருக்கும்போது சீடர்கள் தம்மைச் சூழ விருக்கும்படி செய்துகொண்டு தாம் எந்தமுகம் திரும்

பினும் அந்தத் திசையிலுள்ள சீடர்கள் கைக்கட்டி வாய்புதைத்து மிகப் பயந்தவராய்த் தலைகுனிந்து நின்று ஆஷாடபூதியைப்போல அபிநயங் காட்டி மாஜிஸ்திரெட்டார் தம்மை மிகப்பெரியவரென மயங்கச்செய்தனர். பின்னும் சாக்ஷிகள் கற்பித்ததற்கு மேற்கொண்டு கேள்விகேட்டால் ஏதேனும் உளரப்போகிறார்களென்று அவர்களுக்குக் கதிரையார் சிலதொடுகுறி வித்தைகளைக் கற்பித்தார்.

அதாவது :—

வலதுகண்ணைத் தொட்டால் பார்த்தேன்; இடது கண்ணைத் தொட்டால் பார்க்கவில்லை; வலதுகாதைத்தொட்டால் கேட்டேன்; இடது காதைத்தொட்டால் கேட்டதில்லை; வாயைத்திறந்தால் சொன்னேன்; வாயை மூடினால் சொல்லவில்லை; தலையைத்தொட்டால் தெரியாது என இதுபோன்ற குறிகளைக் கற்பித்துக் கொடுத்துக் கோர்ட்டில் சாக்ஷிகளைத் தமக்கு வேண்டியவாறு கூறச்செய்து இவர் சைகைசெய்து வந்தனர். இதை மாஜிஸ்திரெட்டாரும் ஒரு கால் கண்டு கதிரையாரைத் திரும்பி நிற்கும்படி திட்டஞ் செய்தார்.

பின்னும் போலீசில் விசாரணை யாகும்போது சிந்தாதிரிப்பேட்டையில் ஓர் வீட்டை வாடகைக்கு எடுத்துக்கொண்டு அதில் பூசாரிகளைக் கொண்டு வேதிகைகள்போட்டுக் கலசம் நிறுத்தித் தீவளர்த்து ஆகுதிகள் செய்து தாம் போலீசில் ஜெயம்பெற வேண்டுமெனத் தமது இஷ்டதேவதையை வணங்கி வருந்திவந்தார். பின்னும் போலீசில் விசாரணை நடந்துவருகையில் "நாம் இப்போது சைவத்துக்காக உழைத்து வருகிறபடியால் எல்லோரும் நமது பக்ஷத்திலிருந்து பாடுபடவேண்டும். அப்படிக்கில்லாமல் இராமலிங்கபிள்ளை சார்பார் பக்ஷமாகவிருந்து பொருளுதவி செய்கிறவர்களும் உழைக்கிறவர்களும் அடியோடே குடும்ப நாசமாகிப் போவார்களெனக் கதிரையார் தமது பெயர்குறியாது காலணா கார்ட்டில் எழுதி இராமலிங்க சுவாமிகள் சார்பார் ஒவ்வொருவருக்கும் அனுப்பினார். அது சுவாமிகளின் சார்பிலிருந்து உண்மைக்கே உழைத்தவர்களாதலின் அவர்களை ஒரு தீங்குஞ் செய்யவில்லை. கடசியாக அந்தச் சுவாமிகளுக்குத் தீங்கிழைத்த இவர் சாபமே இவருக்குப் பலித்து இவரும், இவர் பெண்டு பிள்ளைகளும், இவர் சார்பாருள் அநேகரும் மாண்டொழிந்தார்.

---

## போலீசார் கேசைத் தள்ளிவிட்டது.

(21-11-1904) போலீசு மாஜிஸ்திரேட்டார் கதிரையார் கொண்டுவந்த சாக்ஷிகளையும் அவர் தாக்கல்செய்த தஸ்தாவேஜுகளையும் பிரமாண

மாகக் கொள்ளாமல் வாதி வடிவேற்பிள்ளைக்கும் குற்றவாளி. நா. கதிரை வேற்பிள்ளைக்கும் விரோதமின்மையாலும், செத்தாரைத் தூஷித்தல் அவதூறு குற்றமாகாமையாலும், நா. கதிரைவேற்பிள்ளை பு. பாலசுந்தர நாய்க்கர் ஆகிய இவ்விருவரையும் விடுதலைசெய்தோம் என்றார்.

இதைக் கண்ட "கதிரையார் கானவன் வலையிற் பட்டுக் கைதப்பி யோடுமான்போல்" பிழைத்தோம் பிழைத்தோமென வோட்டம் பிடித்தார்.

சிதம்பரத்திலிருந்து வந்த சாக்ஷிகள் பிற்காலத்தில் ஈழநாட்டுக் கதிரைவேலன் எங்களுக்கு 100, 50 ரூ கொடுக்கிறதாக வாக்களித்து அழைத்துக்கொண்டு வந்து இந்த இராமலிங்க சுவாமிகளின்மீது இல்லாதனவற்றையெல்லாம் சாக்ஷிசொல்லச் செய்வித்துப் பின்னர் தான் சொன்னதிற் பாதியேனுங் கொடுக்காதபடி மோசஞ்செய்தான், பாபி! சண்டாளன்! அழிந்துபோவான்! என வசைகூறித் திரிந்ததும் வெளியாயிற்று.

(24–12–1904) கதிரையார் உடனே சிதம்பரஞ் சென்று அன்று காலை 8 மணிக்குப் பன்னிரு திருமுறைகளையும் யானையின்மீதேற்றி ஊர்வலஞ் செய்வித்துப் பிற்பகல் 2 மணிக்குமேல் ஆயிரக்கால் மண்டபத்தில் பன்னிருதிருமுறை திருவருட்பா மகிமையாதிய விஷய உபந்நியாசமென ஆரம்பித்து இராமலிங்க சுவாமிகளையும் அவரது திருவருட்பாவையும் தூஷித்து வந்தார். அவர் அருகிலிருந்த ஓர் பரதேசி இவர் கூறுந் தீமொழிகளைக் கேட்கச் சகியாது இவர் காலை யிழுத்துக் கீழேதள்ளி உதைக்க வாரம்பித்தார். அங்குள்ளார் உடனே கதிரையாரைப் பரதேசியினின்றும் விடுவித்து அவரை அப்புறப்படுத்தினர். அங்கு கதிரையார் செய்த தூஷணப் பிரசங்கங்கள் எல்லாம் "ஈழநாட்டார் பகட்டுரை மறுப்பு" என (1–5–1905) சமரசவேத சன்மார்க்கத்தாரால் வெளியிடப்பட்டது. அதில் இக்கதிரையாரின் பகட்டுரையெல்லாம் பரக்கக் காணலாம்.

(22–1–1905) கதிரையார் காஞ்சீபுரத்திற் சென்று பன்னிரு திருமுறை திருவருட்பா மகோச்சவமென இப்பன்னிரு திருமுறைகளையும் யானையின்மீதேற்றி ஊர்வலம்வந்தார். அது காலையில் அவரது அரையிற் கட்டியிருந்த காசி துப்பட்டா தீப்பிடித் தெரிந்ததுமன்றி அவர் கழுத்திலிட்ட மாலையும் இற்றுவிழுந்தது. இவரைச் சிறப்பிக்கவந்தா ருடையும் தீப்பற்றி எரிந்தது. ஊர்வலம் வருகையில் இவர்மீது மண்மாரியுங் கன் மாரியும் பொழிந்தார்கள். இவரைக் கொண்டாட வந்த ர்களெல்லாரும் ஏக்கமுற் றொழிந்தார்கள்.

(1–2–1905) கதிரையார் சிந்தாத்திரிப் பேட்டையில் பன்னிரு திரு

முறை திருவருட்பாவை யானையின்மீதேற்றி மகோற்சவங் கொண்டாடப் போகிறதாக விளம்பரப் பத்திரிகை விடுத்ததுமன்றிக் காஞ்சீபுரத்தி லிருந்து யானையையும் அழைப்பித்தனர். அவ்வியானையும் சிந்தாத்திரிப் பேட்டையிலுள்ள கவிச் சிங்கங்களைக் கண்டு பூனையாய்ப் பதுங்கி ஊரில் நுழையாமலே திரும்பிவிட்டது.

இதற்குக் காரணம் அவ்வூரார் கதிரையார் யானையைக் கொண்டு ஊர்வலம் வரும்பக்ஷத்தில் அநேக கலகங்களுண்டாகு மென்று உண்மை யை எடுத்துக் கூறப் போலீசார் யானையை வராமற் றடுத்துவிட்டனர்.

கதிரையார் உடனே திருச்சிராபள்ளி உறையூரில் பன்னிரு திரு முறைகளை யானையின்மீதேற்றி இராமலிங்க சுவாமிகளை அவர் தூற்ற வாரம்பித்தார். அங்குள்ளார் விடுத்த கன்மாரிக்குங் கடுஞ்சொன்மாரிக்கு மாற்றாது திரும்பினர்.

இவை இங்ஙனமிருப்ப, கதிரையார் சென்னையில் "திருவருட்பா ஜெயத்துவஜஸ்தாபனம்" என்றும், "மருட்பாமறுப்பின் ஜெயபேரிகை யென்றும்", "மருட்பா மறுப்பு விஜயமகா சரபம்" என்றும் பல பத்திரி கைகளை வெளியிட்டுத் தெருவுகள்தோறும் வழங்கி அகங்கரித்து ஆரவா ரஞ் செய்து வந்தார்.

அது சமயத்தில் முன்வருடத்தில் கதிரைவேலன் கடசிரார்த்தமென் றெழுதி விட்டவரோ? அல்லது வேறெவரோ? இவ்வருடம் ஷெயாருக்கு வருடாப்தம் நடத்தப்படுமென ஓர் கார்டு அச்சிட்டு வெளிப்படுத்தினர்.

## வருடாப்தப் பத்திரிகை.

புதுச் சந்நிதியான்றுணை.

## வருடாப்த விண்ணப்பம்.

---

கிறிஸ்துவக் கைம்பெண்ணை மணந்து பெரியார் தூடணப்பயனுய்ச் செருப்படிபட்டுப் பல்லுதிர்ந்து, சென்ற வருடம் பங்குனிமீ 8-ம் உ ஆதி வாரம் பகல் 8 மணிக்குத் திரிதிகைத் திதியி லிறந்து, அகால மரணத்தா னலகையாய் ஆங்காங்குள்ள அறிஞர் சிலர்க்கிடுக்க ணுற்றியும், காஞ்சீபுர முதலிய விடங்களில் செருப்பாலும் மலத்தாலு மடியுண்டு மலையும் (என் வைப்பாட்டிமகன்) மேலைப்புலோலி நா. கதிரைவேற்பிள்ளைக்கு நிக ழும் 1905-ம் ஞு எப்ரல் மீ 7-ம் உ வெள்ளிக்கிழமை காலை 10½ மணி

முதல் 12 மணிக்குள்ளாகப் புரசை வெள்ளாழத்தெரு 35-வது நெ. கிருஹத்தில் அவ்வலகை யறிஞர்பா லடையாது அவனியினின் றகல விதி பூர்வமான ஓமமுனூற்றி வருடாப்தம் நடத்தப்படுமாதலின் அவ்வமயத்து ஆண்டுற்று அவற்றை நிகழ்த்துவித்து என்னை யகமகிழ்வுறச்செய்ய விரும்பு

இங்ஙனம்

(6-4-1905) [redacted] க. நாகப்பபிள்ளை.

புதுச்சந்நிதி கந்தசுவாமிகோயில் தருமகர்த்தர்.

தங்கள் வருகைக்கு எதிர்நோக்கும் பார்வதிபுரம் — ஆறுமுகம்பிள்ளை.

---

இது இவ்வாறாக,

## ஹைகோர்ட்டு அப்பீல்.

(9-4-1905) இவற்றையெல்லாங் கண்ட புராணீகர் பிரசங்கரத்னாகரம் வடிவேலுபிள்ளை மனம்பொறாதவராய்ப் போலீசார் செய்த தீர்ப்பின் பேரில் ஹைகோர்ட்டாருக்கு ரிவிஷன் அப்பீல்செய்யலாயினர். இது இப்படியிருக்க,

(15-4-1905)

சென்னைக் கடுத்த புரசபாக்கம் பெருமாள்பேட்டை வல்லம் பங்காருசெட்டிவீதியி லிருக்கும் வேலுகிராமணியா ரவர்களுக்கும், கதிரையாருக்கும் இராமலிங்க சுவாமிகள் விஷயமாக நடந்த விவாதத்தில், கதிரையார் திருவருட்பாவில் இலக்கிய விலக்கண வழுக்கள் பலவுள. யாம் எடுத்துக்காட்ட வல்லேம் எனச் சபதங் கூறவும், அதைக் கேட்ட கிராமணியார் நீர் ஓர் சபை கூட்டி அதினடுவில் அவ்வித வழுக்களை எடுத்துக்காட்டி நிறுவ வல்லீராயின், நாம் உமக்கு 2000 ரூ. பரிசளிக்கச் சித்தமாயிருக்கிறோம். அதற்குத் தவறுவீராகில் பத்திரிகையில் எழுதிவிட்டு உம்மை அவமானஞ் செய்விப்போம் எனக் கூற, கதிரையார் பின்னிட்டால் அவமானம் நேருமென்றெண்ணி அச்சமயத்தில் பலபேர் முன்னிலையில் உடன்படிக்கை யெழுதி அதில் கையொப்பமும் வைத்தனர். ஆனால் கதிரையார் அவ்வாறு செய்து முடிக்கவில்லை. கிராமணியார் கேட்கும்போதெல்லாம் இதோ செய்வன்! அதோ செய்வன்! என பராக்குக் காட்டிவந்தார்! பலபேரை வைத்துக்கொண்டு வற்புறுத்திக் கேட்ட காலத்தில் போலீசு கேசில் மனக்குழப்பமாயிருக்கிறது. முடிந்தவுடன் செய்வோமெனக் கூறினர். போலீசு கேசு முடிந்தபிறகு கிராமணியார் இனியான் தாமதிக்கமாட்டேன். சபைகூட்டுகிறேன். அதில் நீர் வந்து உமது கக்ஷியை

திறுவ வேண்டுமென்று கட்டாயப்படுத்தி (4–4–1905) விளம்பரப் பத்திரிகை அச்சடிக்கத் தொடங்கினர். அச்சமயத்தில் கதிரையார் மறைந்தனர். இவர் இந்த வாதத்திற்குப் பயந்தொளித்தனரோ? அல்லது வடிவேலுபிள்ளை ஹைகோர்ட்டில் தாக்கல் செய்த அப்பீல் கேசுக்குப் பயந்தொளித்தனரோ தெரியவில்லை. அதனால் கதிரையாரின் நண்பர்களையும், மாணாக்கர்களையும் இதைத் தெரிவிக்க வேண்டுமெனச் சென்னை சிவனடியார் திருக்கூட்டத் தலைவர் பத்திரிகை யெழுதி விளம்பரஞ் செய்தனர்.

இஃதிங்ஙனமிருப்ப, கதிரையார் திருநெல்வேலி ஜில்லாவிற் சென்று தாம் சைவத்திற்காகப் பாடுபடப்போய்த் தம்மை இராமலிங்க பிள்ளையின் சார்பார் போலீசிலிழுத்து 6 மீ காலம் வழக்கு நடத்தி வந்ததினால் லாயர்களுக்கும் சாக்ஷிகளுக்கும் அநேகபொருட் செலவிட்டுக் கையிளைத்தோம். அந்தமட்டிலொழியாது இப்போது அன்னார் ஹைகோர்ட்டில் அப்பீல் செய்திருக்கிறார்கள். அது எவ்வாறாக முடியுமோ? தெரியவில்லை. சைவாபிமானிகளா யுள்ளவர்கள் கைகொடுத் துதவவேண்டு மென்று ஆங்காங்கு சபைகூட்டி பிரசங்கஞ் செய்யலாயினர். அக்காலத்தில்,

---

கதிரையார் — ஈழநாட்டுப் பிரசங்கத்தில்

## அவமானமடைந்தது.

(10–6–1905)

---

ஈழநாட்டு மேலைப்புலோலியில் இக்கதிரைவேற்பிள்ளை வைதிகப் பிராமண ரெல்லாரும் மாயாவாதிகள் என்றும், அவர்கள் விஷ்ணுவையே தெய்வமென்று கொள்ளுகிறவர்களென்றும், அவர்களுக்கு யாகஞ் செய்தலின் மேலான தருமம் ஒன்றும் இல்லையென்றும், அந்த யாகத்தால் அவர்களுக்குச் சுவர்க்கலோகப் பேறே யன்றி மோக்ஷங் கிடையாதென்றும், நான்கு வேதங்களும் தேவார திருவாசகங்கள்போல விசேஷமுடையன அல்லவென்றும், தாங்களும் பிராமணரும் சகோதரமுறையுடையவர்களென்றும், அப்படிக் கொண்டாடலாம் தீண்டலாமென்றும் பிரசங்கஞ் செய்தார்.

இதன் உண்மை யுணருமாறு, தும்பளைச்சித்தி விநாயகர் கோயிற் திரு மண்டபத்தில் ஓர் மகாசபை கூட்டப்பட்டது. கதிரைவேற் பிள்ளைக்கு அழைப்புப்பத்திரம் அனுப்பி அவரும் வந்து சேர்ந்தார். சபை ஆரம்பிக்கிறதற்குமுன் கதிரையார் எழுந்து கோயிலையும் மானேஜரை

யும் பற்றிப் பிரசங்கித்துப் பின்னர் சதாசிவ சாஸ்திரிகளை எழுந்து தன் பக்கத்தில் வரும்படி கேட்டனர். சபையார் நியமித்தவிடத்திலிருப்பதே யன்றி உன் அருகில் வாரோம், நீர் வேண்டுமானால் எமதருகில்வரலா மென்றார். இவருக்கு அழைப்புப்பத்திரம் அனுப்பி யிருக்கவும், தனக்கு அனுப்பவில்லை யென்பதாகச் சுவாமி சந்நிதானமென நினையாது மறைத்து விட்டார். கதிரையார் இப்போது என்னுடன் வாதிப்பவர் யாவரென்றார். ஸ்ரீ ச. சுப்பிரமணிய சாஸ்திரிகள் "நாமே வாதி" என எழுந்து கூறினர். கதிரையார் சதாசிவ சாஸ்திரிகளே வாதிக்க வரவேண்டுமென்றும் அவர் தனக்குத் தருக்கபரிசை தரவேண்டுமென்றுங் கேட்டார். உடனே சுப்பிர மணிய சாஸ்திரிகள் சபாநாயகரையும் மத்தியஸ்தரையும் சபையார் ஏற் படுத்த வேண்டியது, அவர்கள் பரிக்ஷித்தால் நான் பரிக்ஷைகொடுக்க ஆயத்தம், இவருக்கு நான் பரிக்ஷைகொடுக்க வேண்டியதில்லை யென்றார். உடனே ஸ்ரீ மு. சுப்பிரமணியப்பிள்ளை பிறக்டர் அவர்கள் எழுந்து சுப்பிரமணியசாஸ்திரிகள் வாதியாகப் பேசுதற்குக் கதிரைவேற்பிள்ளை யுடன்பட வேண்டியதென்றும், இவர்களிருவரும் ஒருவரை யொருவர் தர்க்கம் பரிக்ஷிக்க வேண்டியதில்லை யென்றும், மத்தியஸ்தரை நியமித்து அவர் முன்னிலையில் இருவரும் பேசும்போது தருக்க லக்கணத்துக் கிசையாது பேசுவோர் யாவரென்பது வெளிப்படுமென்றும், இனிச் சபைத் தலைவரையும் மத்தியஸ்தரையும் நியமித்துச் சபை தொடங்க வேண்டுமென்றுங் கூறினர். இதனைச் சபையா ரனைவரும் ஒத்துக்கொண் டனர். அப்போது கதிரையார் பிறக்டர் சொல்லுக்கும் சபையார் சொல் லுக்கும் அமையாது நின்று, வாதி தனக்குப் பரிக்ஷைதரவேண்டும், மத் தியஸ்தரும் தனக்குப் பரிக்ஷைதரவேண்டுமென்றுங் கூறி, மத்தியஸ்த ராய் வருவோரே இச்சொற்குப் பொருள் கூறுங்களென் றோர் சொல்லைக் கூறி வினவினர்.

உடனே அச்சபையிலுள்ள வித்வான்களி லொருவராகிய சுதேச பத் திராதிபர் ஸ்ரீ க. வேற்பிள்ளை ஆசிரியர் அவர்கள் எழுந்து தாமுமோர் சொல்லைக் கூறி இச்சொற்குப் பொருள் சொன்னாற்றான் நீர் வித்வானு வீர் என்று வினவினர். அதற்குக் கதிரையார் விடைகூற வறியாது மயங்கி நின்றனர். இச்சமையத்தில் ஜனங்கள் அமைதியின்றிக்குழம்பிச் சபை கலைந்தது.

(28-10-1905) கதிரையார் தூத்துக்குடியில் ஓர் சைவப் பிரசங்கம் நடத்துவதாக விளம்பரமிட்டார். அக்காலத்தில் இவர் பிரசங்கத்தைக் கேட்க அநேகர் ஆவலுடன் வந்து சேர்ந்தார்கள். இவர் எடுத்துக்கொண்ட

பிரசங்கத்தில் முதலாவது ஆங்கிலேயம் இலக்கணவமைதி கிடையாத பாஷையெனக் குறைவுபடுத்திக் கூறினர். 2-வது இராமாயணத்தில் ஓர் பாடலைச்சொல்லி வைணவத்தைச் சிலநேரந் தூஷித்தார். 3-வது மாயா வாதமென எடுத்துக்கொண்டு சங்கராச்சாரிய சுவாமிகளைச் சிலநேரம் தூஷித்தார். கடைசியாக இராமலிங்கபிள்ளை பாடல்கள் திருவருட்பா வாகா வெனத் தூஷணைசெய்து அலண்டார். அதுகாலத்தில் சபையில் வந்திருந்தவர்களுள் B. A. பட்டம் பெற்ற ஞானசிகாமணி முதலியாரென்பா ரொருவரெழுந்து தாங்கள்செய்த பிரசங்கம் மிகவும் வியக்கத்தக்கதாக விருக்கின்றது. ஆயினும் தங்கள் சிரம பரிகார நிமித்தம் எம்மைச் சிறுது நேரம் பிரசங்கஞ் செய்யும்படி உத்தரவானல் பிரசங்கஞ் செய்கிறேன் என்ருர். சபையார் தடையில்லை எனக் கூறவும் முதலியார் ஆங்கிலேயத்தில் இலக்கண வமைதியில்லை யென்பது பிரமாணமாகாது; ஆங்கிலேயத்தில் சிறுதும் பயிற்சியில்லாத இவர் இலக்கண வரம்பின்மை எவ்வாறு கண்டனர்? இவருக்குத் தெரியாவிட்டால் ஆங்கிலேயங் கற்றுணர்ந்து பி.எ, எம்.எ, பட்டாபிதானம் பெற்ருரிடத்து ஆராய்ந் துணர்வாராக என மறுத்தார். 2-வது இராமாயணத்தில் இவர் கூறிய பாடற் கிவருண்மைப் பொருளுணராத குறையேயன்றி அப்பாடலிலோர் குறையுமின்றென அதன் உண்மைப்பொருளை எடுத்து விளக்கி அதற்கு மேற்கோளாக நூற்களினின்றும் அநேக பிரமாணங்களெடுத்து விளக்கினர். 3-வது சங்கராசாரிய சுவாமிகள் ஓர் பெரிய சமயாசாரியராக விருக்கவும், அவரை மரியாதைக் குறைவாகப் பேசுதல் தகுதியன்று. அவரது சித்தாந்தம் இவரது கொள்கைக்கு மாருக விருப்பின் அவ்வளவு வரையில் கண்டிக்கலாமன்றி அவரை நிந்தித்தல் தகுதியன்றுமென்ருர். 4-வது இவர் இராமலிங்க சுவாமிகளைத் தூஷித்தல் தகாது. அவர் சைவத்தி னுண்மையையும் அடியார் திறங்களையும் தமது நூல்முழுதும் விளக்கிக் காட்டியிருக்கின்ருர். அவற்றி னுண்மை அறிதற்கு ஆற்றலில்லாதது இவர் குறையேயன்றி அந்நூலில் யாதோர் குறையுமின்றெனக் கூறினர். அன்றியும் இக்கதிரையார் சைவப்பிரசங்கஞ் செய்கிறதாக விளம்பரஞ் செய்ததால் நாம் கேட்கவந்தோம், இவர் சைவ சித்தாந்தத்தின் இரகசியப் பொருளை எடுத்து விளக்காது ஆங்கிலேயபாஷை தூஷணை, வைணவ தூஷணை, மாயாவாத தூஷணை, திருவருட்பா தூஷணை இவைதாம் இவருக்குத் தெரியும்போலிருக்கிறது. இவற்றைக் கேட்பதால் ஆத்மலாபம் பயத்தலின்மையால் இவற்றைக் கேட்பதில் பிரயோசனமின்று. இவர் இது விஷயமாகச் சென்னையில் கலகஞ்செய்து கக்ஷிபேதங்களுண்டாக்கிக் கோர்ட்டில் நடவடிக்கை நடந்து வருவதாகக் கேள்விப் பட்டோம்,

அவ்விடம்விட்டு இப்போது இவ்விடத்தில் கலகஞ்செய்ய வந்திருக்கிறா ரெனக்கூறி முடித்தனர். சபைகலைந்தது. உடனே அவ்விடத்திலுள்ள போலீசார் இக்கதிரையார் செய்யும் பிரசங்கங்களால் கலகம் விளைவதாகத் தெரியவருகின்றது. இனி இவர் செய்யும் பிரசங்கங்களிலெல்லாம் போலீசார் கவனிக்கத் தக்கதென மேலதிகாரிகளுக்குத் தெரிவித்துவிட்டனர். அது 1905-ம் ஹு நவம்பர் மீ த்திய போலீஸ் கெஜட்டில் வெளிவந்திருக்கிறது. கதிரையார் இந்த நாட்டில் பிரசங்கஞ்செய்து பொருள் தேடிவரும் நாளில் நவம்பர் மீ 24-ம் உ ஈயரிங்கு குறித்தார்களெனக் கேள்விப்பட்டு உடனே சென்னைவந்து சேர்ந்தார்.

---

## ஹைகோர்ட்டு அப்பீல் தீர்மானம்.

(21-11-1905) குற்றவாளி தெண்டிக்கப்பட்டால் அவன் அப்பீல் செய்துகொள்ள ஹைகோர்ட்டுசட்டம் இடங்கொடுக்கிறதேயன்றிக்குற்றம் சாட்டுபவருக்குக் கீழ்க்கோர்ட்டில் பிரதிகூலமானால் குற்றவாளியைத் தெண்டிக்க மேலும் மேலும் பிரயத்தினஞ்செய்தால் அவ்வித அப்பீலுக்குச் சாதாரணமாக இடங்கொடுப்பதில்லை. வடிவேலுப்பிள்ளை (7–4–1905) செய்திருந்த அப்பீலின்பேரில் ஹைகோர்ட்டார் இந்தக்கேசைக்கொண்டு வந்தவர் நிந்திக்கப்பட்டவரின் தமயன்மகனாயிருத்தலின் இதை மீண்டும் விசாரிப்பதால் பொதுநன்மை யில்லாததால் கேசைத் தள்ளிவிட்டோமென் றார்கள்.

அதனால் இராமலிங்க சுவாமிகளின் சீடர்கள் பலபேர்கூடி இறந்துபோன கதிரைவேற்பிள்ளை ஒழிந்தாலும், பாலசுந்தர நாய்க்கர்மீது கேசு எடுத்தால் இவர் தண்டிக்கப்படுவாரென விளங்குகின்றது. இது நிற்க,

(1–12–1905) மேற்குறித்த தீர்ப்பைக்கேட்ட கதிரையார் திருவருட்பா இரண்டாவது ஜயத்துவஜ ஸ்தாபனமெனப் பற்பல பத்திரிகைகள் விடுத்து ஆரவாரித்துத் திரிந்ததுமன்றிப் பற்பலவிடங்களில் சபை கூட்டி இராமலிங்கசுவாமிகளையும், திருவருட்பாவையும் தூஷித்துவந்தார்.

இதைக் கண்ட திருவருட்பா கக்ஷியார் பலபேரெழுந்து ஆங்காங்கு சபை கூட்டி, இக்கதிரையாரின் மாயாவாதங்களை யெல்லாங் கண்டித் தொழித்து வந்தார்கள்.

இவ்விதமாகச் செய்வதால் இவர்கள் விவாதம் முற்றுப்பெறுதென இக்கதிரையார் எழுதிவிடுத்த மருட்பா மறுப்பின்மீது முத்தமிழ் ரத்நாகரம் ம. ஈ-ா-ஸ்ரீ ம. தி. பானுகவியவர்களால் “ இராமலிங்கபிள்ளை பா

டல் ஆபாசதர்ப்பண கண்டன நியாய வச்சிரகுடாரம்" என ஓர் பெரு நூல் எழுதி வெளியிடப்பட்டது. பின்னும் அருட்பாகக்ஷியார் நிவாந்தர சைவவிநோதம், ஈழப்பாணச் சேரியார் அங்கதப்பாட்டு, இராமலிங்க சுவாமிகள்மீது பதிகப்பாமாலை, திருவருட்பிரகாசவள்ளலார் திருவருட்பா விளக்கம், தில்லை வாழ்ந்தணர் சந்நிதிக்கு யாழ்ப்பாணத்தான்றன் வஞ்சகப் பிரகடன விஞ்ஞாபன சதகம், இராமலிங்க சுவாமிகள் திருவருட்பா மகிமை விளக்கத் தோத்திர சோடசப்பாமாலை, ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகளைத் தூஷிப்போரது பன்னிரு பொய்ங்கற்றல், ஈழநாட்டார் பகட்டுரை மறுப்பு, திருவருட்பா விவாதிகளுக்கோர் விண்ணப்பம், அழுக்காறுடையார் அவலந்தெரித்தல், சிவநிந்தையோர்க்குத் தெளிவுபுகட்டல், மருட்பா தூஷணநிக்கிரகம், மூக்குணவயத்தின் முறைமறந்தறைதல் மேற்கண்டனம், ஸ்ரீமத் இராமலிங்கசுவாமிகள் விஷயமாகக் கதிரைவேற்பிள்ளையைப்பற்றிய கோர்ட்டில் நடந்த விவகாரம் என இவ்விதமான பற்பல கண்டன புத்தகங்கள் இராமபாணம் போலெழுந்தன. இவற்றை உலகத்தார் கண்டபின்னர் கதிரைவேற் பிள்ளை செய்ததெல்லாம் புரட்டெனவும், இவர் செய்கையெல்லாம் பகட்டொழுக்கெனவும் இவரை ஒருவரும் மதியாதொழிந்தனர்.

---

## கதிரையார் சென்னையைவிட்டு நீங்கினது.

இனி இச்சென்னையில் நமக்குச் செல்வாக்கு நடவாதெனத் தனது குடும்பத்தோடு கருவூர்போய்ச் சேர்ந்தனர்.

சுதேசியென்ற பத்திரிகை (18–4–1906) "யாழ்ப்பாணம் கதிரைவேற்பிள்ளையவர்கள் பிரசங்கத்திற்குக் கருவூரில் நேரிட்ட விபத்து" என்ற தலைப்பின்கீழ் "இந்த வித்துவான் நிகழும் எப்பிரல் மீ 8-ம் உ இரதமகோற்சவ மகிமை என்னும் விஷயத்தைப்பற்றிப் பிரசங்கிப்பதாக அர்ச்சகர் பசுபதி பண்டித சிவாசாரியார், வள்ளியப்பசெட்டியார் என்ற கையெழுத்திட்ட ஒரு துண்டுப் பத்திரிகை பிரசுரித்து வெளியில் அனுப்பி வைத்தார். இது சங்கதியைக் கேள்விப்பட்ட கரூர் போலீசு இன்ஸ்பெக்டர் மிஸ்டர் சூரியநாராயண ஐயர் மேடி வித்துவானையும் நோட்டீசு வெளியிட்டவர்களையும் வரவழைத்து "இந்த நோட்டீசு நீங்கள் வெளியிட்டதுதானா" என்று கேட்க, செட்டியார் பாவம் நான் கையெழுத்துச் செய்யவில்லையென்றார். பின் அச்சாபீசு ஒரிஜனல் காப்பியை வரவழைத்து "இந்தக் கையெழுத்து உம்முடையதுதானா பாரும் என்றுசொல்ல, "ஆம் என்று ஒப்புக் கொண்டாராம். அந்த அர்ச்சகரைக் கேட்கத் தாம் கையெ

ழுத்தே இடமில்லை யென்றும், அப்படி யிட்டிருந்தால் தம்மை என்ன செய்தாலும் ஒத்துக் கொள்வதாகவும் சொன்னாராம். பின் வித்வானவர் களைநோக்கி "நீர் என்னத்திற்காக இந்தவிதம் ஊரூராகப் பிரசங்கஞ் செய்து வீண்கலகம் செய்கிறீர்" என்று கேட்கத் தாம் எங்கும் மத தூஷணைஞ்செய்து கலகஞ் செய்வதில்லை என்று சொன்னாராம். அதற்கு டெடி அதிகாரியவர்கள் "உம்மைத் தெரியும். நீர் திருநெல்வேலி ஜில்லாவிலும், சென்னை முதலிய பிறதேசங்களிலும் பிரசங்கஞ் செய்ய ஆரம்பித்து அநேகம் கலகம் நடந்ததாக ரிக்கார்டு ஏற்பட்டிருக்கிறது. இனி அக்கிரமமாய் மததூஷணை செய்து கலகஞ்செய்தால் பிராசிக்கியூஷன் செய்வோம் என்று சொன்னார்களாம். பின்னும் நீர் சென்னை இராஜாங்கத்தாரால் மாயாவாத தும்ஸ கோளரியென்று உறுதிப்படுத்தப் பட்டவர் என்று கையெழுத்துச் செய்திருக்கின்றீரே. இராஜாங்கத்தார் கொடுத்த அந்தச் சந்நது எங்கே என்று கேட்க, வித்துவானவர்கள் தாறுமாறுயுளறிக் கறவையாடுபோல் விழித்தாராம். ஐயோபாவம்! இவரிடத்திலும் டெடி இருவர்களிடத்திலும் முச்சலிக்கா வாங்கிக்கொண்டு கலகம் செய்யாமல் மதவிரோதமில்லாமல் பிரசங்கஞ் செய்துகொள்ளும்படி உத்தரவு செய்தார்கள். பின் வித்வானவர்கள் மனவருத்தத்துடன் என்னசெய்கிறதென்று ஏதோ கொஞ்சம் பிரசங்கஞ்சொல்லித் தொலைத்துத் திரும்பிவிட்டாராம்.

இஃதன்றியும் அவ்வூரிலுள்ளாரைக் குடியிருப்புக்கு வீடுகேட்டால் ஐயா நீங்கள் கலகக்காரராமே உங்களுக்கு இந்தவூரில் வீடுகொடேமெனப் பலரும் மூலையிலிருந்து கடிதம் எழுதினார்கள். சிலர் எங்கள் அத்தானுக்குச் சம்மதமில்லை, அம்மாஞ்சிக்குச் சம்மதமில்லை, நீங்கள் வேறிடம் பார்த்துக்கொள்ளுங்கள் என்று சொல்லிவிடக் கதிரையார் குடியிருப்புக்கு இடம் அகப்படாமல் மிகவருந்தினார்.

பின்னர் இக்கதிரையார் ஏதோவோரிடமமைத்துக் குடியிருந்து கொண்டு கிறிஸ்டியன் பைபில் சொஸயிட்டியாருக்கு டிராக்டுகள் எழுதிக்கொடுத்தும், அவர்கள் (பைபில்) வேதபுத்தகங்களுக்கு மொழிபெயர்ப்புச் செய்துகொடுத்தும் ஜீவித்துவந்தார். அக்காலத்தில் இவருக்கு ஓர் பிள்ளை பிறந்து இறந்துபோய்விட்டது. பின்னுஞ் சிலகாலத்திற்குள்ளாக இவர் மனைவியுமிறந்தாள். இவருக்குச் சமையலுக் குதவியாயிருந்த பெண்ணும் இவருக்குப் பணிபுரிய உதவாது ஊணைவிட்டொழிந்தனள்.

பின் கதிரையாரும் தமது திருநாவுக்கரசு என்னும் குமாரனை இட்டுக்கொண்டு தமது சுயதேசமாகிய ஈழநாட்டைப்போய்ச் சேர்ந்தார். அங்கு வசித்திருக்குங் காலத்தில்.

## சோடசாவதானம்.

(29-1-1907) கதிரையார் தமது உபாசநா மூர்த்தியாகிய மேலைப் புலோலி புதுச்சந்நிதி கந்தசாமிகோயில் முதன்முறையாகத் தைப்பூச தினத்தில் சோடசாவதானஞ் செய்து முடித்ததாகக் கூறி யிருக்கின்றார். எந்த வித்வசமூகத்திற் செய்தனரென்றும், பரிக்ஷகர்கள் இன்னாரென்றும், பரிக்ஷிக்கப்பட்டவை இன்னவையென்றும் விளக்கினாரில்லை. அதைக் குறித்து விளம்பரப் பத்திரிகையும் வெளிவரக் காண்கிலேம். இது கந்த வேளும் கதிரையாரு மறிந்தவிஷயமா யிருக்கின்றது.

---

## அஷ்டாதச அவதானம்.

(3-2-1907) மேலைப்புலோலி பசுபதீஸ்வர சுவாமிகள் வசந்த மண்டபத்தில் சபைகூடி அஷ்டாதச அவதானஞ் செய்யப்போகிறேமெனை விளம்பரப் பத்திரிகையிட்டுத் தமக்கு வேண்டிய சில வித்வான்களை வைத்துக் கொண்டு அவதானஞ் செய்யத்தொடங்கினர். பரிக்ஷிக்கப்பட்டனவற்றுள் வெற்றிவேற்பிள்ளை கேட்டுக்கொண்டவாறே கவிசொல்வகையுள் ஒன்றாக ஆதியந்த எழுத்துக்களும் இடையிற் சொல்லும்பொருட் சாரங்களும் அணிகளும் இனமும் அமைய யாப்புறுத்த கவித்திறமும், பஞ்சாக்ஷரம் அவர்கள் கேட்டுக்கொண்டபடி மிகமிகப் பெரியகணித மறுமொழி கொடுக்கப் பட்டவாறும், எவரையும் பிரமிக்கச் செய்ததென வெளியிட்டிருக்கிறார். (18-2-1097) சுதேசமித்திரன் பத்திரிகையிற் காண்க.

அச்சபையில் வந்திருந்த வல் - வை. கந்தசாமி உபாத்தியாயர் என்பவர் இவர் தவறிய விடத்தில் ஆக்ஷேபனை செய்தார். அவரை உடனே பலாத்காரத்தினால் அச்சபையினின்றும் அகற்றியொழித்துத் தமக்கு வேண்டிய சில வித்வான்களை வைத்துக்கொண்டு கதிரைவேற்பிள்ளை அஷ்டாதச அவதானஞ்செய்து முடித்தாரெனக் கரகோஷஞ்செய்து ஜயங் கொண்டாடினார்கள். இதனால் இவ்வவதானம் தந்திரத்தினலான தன்றி உண்மையிற் செய்து முடித்ததாக ஏற்படவில்லை. இவருடைய ஏச்சுப்பேச்சுக்கஞ்சிச் சில வித்வான்கள் இவரை முகதாவில் வியந்தும் புறம்பில் பழித்து மிருக்கிறதாகத் தெரியவருகின்றது.

---

## புரோகிதர் சாபம்.

இது நிற்க, இக்கதிரையார் தமக்கு பழக்கமுள்ள புரோகிதரை நிந்தித்து வேறோர் பிராமணரைப் புரோகிதராகக்கொண்டு சிரார்த்தஞ் செய்

தார். நீக்கப்பட்ட புரோகிதர் "இவன் ஒரு வருடத்திற்குள்ளாக ஊமை மாய் விடுவானெனச்" சாபமிட்டுப் போயினர்.

---

## திருவையாற்றுக் குருக்கள் சாபம்.

இது நிற்க, இக்கதிரையார் யாழ்ப்பாணத்தை விட்டுச் சென்னைக்குத் திரும்புங்காலையில் திருவையாற்றில் வந்துசேர்ந்து நாம் இவ்விடத்தில் சில சைவப்பிரசங்கஞ் செய்ய முயல்கின்றேமெனக் கூறவும், அவ்வூரி லுள்ளார் சபைசேர்த்துப் பிரஹ்ம ஸ்ரீ கணபதிகுருக்களைச் சபைத்தலைவ ராக வீற்றிருக்கச்செய்து பிரசங்கஞ் செய்யலாமென உத்தரவு கொடுத்தார் கள். இதைக்கேட்ட கதிரையார் வழக்கப்படி ஆரம்பத்திலேயே ஸ்ரீமத் சங்கராசாரிய சுவாமிகளையும் அவர் மதத்தையும், பின்னர் விஷ்ணுவை யும் அவர் மதத்தினையும், மூன்றாவது இராமலிங்கசுவாமிகளையும் அவரது திருவருட்பாவையும் வரம்பு கடந்து தூஷித்துவந்தனர். அப்பொழுது சபைத்தலைவராகிய குருக்கள்சுவாமிகள் இவரது தூஷணவாசகங்களைக் கேட்கச் சகியாதவராய்ச்சிவ சிவ வென இருகரங்களாலும்செவிகளை மூடி முகத்தைத் திரும்பவைத்துக்கொண்டு பிரஷ்டபாகத்தைக் காட்டிக் கொண்டு மிருந்தனர். அப்போது சபையார் குருக்கள் சுவாமிகளே? தாங்க ளிவ்வாறிருக்கக் காரணமென்னையோ? வெனக்கேட்க, சபையார் களே? நான் நும்மிலொருவராக விருப்பின் பிரசங்க வாரம்பத்திலேயே இத்தூஷண வார்த்தைகளைக் கேளாது இச்சபையை விட்டு நீங்கியிருப் பன். சபைத்தலைவராக ஏற்பட்டிருத்தலின் இவ்விடத்தை விட்டு நீங்க முடியவில்லை யென்றார்.

இதைக்கேட்ட கதிரையார் கலைக்கழுவி மொத்தைச்சோறுண் ணும் பிராமணனுக்கு என்ன தெரியும்? நான் திரும்புகாலையில் பங் குனி மீ இவ்விடம் வந்து சேருவேன். அப்போது நும்மை விசாரித்துக் கொள்ளுகிறேன் என கர்ன கடூரமான வார்த்தைகளைச் சொல்லி அதிக மாகத் தூஷிக்க ஆரம்பித்தார்.

குருக்கள் உடனே எழுந்து தமதிருப்பிடத்தை விட்டகன்று இரு கைகளினும் நீரேந்தி அவ்வாலயத்தில் தண்டபாணிகளின் சந்நிதானத்தில் நின்று, ஹே! தண்டபாணி! இக்கதிரையார் செய்த தூடணங்களெல்லாம் நும்மைக் குறித்ததாமன்றி வேறொருவரையுங் குறித்ததன்றாம். அதனால் அவரை நீரே விசாரிக்க வேண்டுமென அந்நீரை ஏந்திவந்து சபையின் முன்னர் சொரிந்து நீர் பங்குனி மீ திரும்பி வரமாட்டீர் எனச் சபித்தனர்.

இவ்வுண்மை சென்னையிலுள்ள பிரஹ்மஸ்ரீ மருவூர் - கணபதி சாஸ்திரியார் அம்மானை விசாரித்தால் தெரியும். இவர் அப்பிரசங்க காலத்திலிருந்தாருள் ஒருவர். உடனே கதிரையார் இவர் சாபத்தை ஏற்றுக் கொண்டு (16-2-1907) சென்னை வந்து சேர்ந்தனர்.

கதிரையார் (24-2-1907) சென்னை ஒற்றைவாடை ஆட்டக்கொட்டகைப் பந்தலில் சதாவதானஞ் செய்வதாக விளம்பரப் பத்திரிகைகள் விடுத்து டிக்கட்டுகள் வெளிப்படுத்திச் சொற்பதொகை சேகரித்தார். அவ்வவதானத்தின் உண்மையும் செய்கையும் பின்வரும் விபரத்தால் விளங்கும்.

---

## சதாவதானம்.

நா. கதிரைவேற்பிள்ளை செய்த சதாவதானத்தைப்பற்றி, அச்சதாவதான பரிக்ஷகருளொருவரா யிருந்த வித்வான், திருமயிலை இராமலிங்க முதலியார் அவர் தம் நண்பர் ஒருவருக்கு எழுதிய விபரம்.

(24-2-1907) ஆதிவாரம், நா. கதிரைவேற்பிள்ளை சென்னை லக்ஷ்மிவிலாச நாடகசாலையிற் செய்த அவதானத்திற்குப்போக உத்தேசித்து நானும் எனது நண்பர்களாகிய வித்வான் ஸ். வீ. ஆறுமுகஞ்சேர்வையவர்களும், தேவாமிர்த பிரசங்கக் களஞ்சியம் கோட்டாறு கா. ப. ஷெய்குத்தம்பிப்பாவலர்வர்களும், அ. வா. நயினுமுகம்மது சாஹிபு அவர்களும், மற்றுஞ் சிலரும் பிரவேசச்சீட்டு விற்குமிடங் குறுகித் தொகை செலுத்திப் பிரவேச சீட்டு கேட்டோம். அங்குள்ளார் முகம்மதியர் உட்பிரவேசிக்கலாகாதென்றார். அதற்கு முகம்மதிய நண்பர்களி லொருவர் "ஐயா! நீவிர் பிரசுரித்த விளம்பரப்பத்திரத்தில் முகம்மதியர்கட்கு இவ்வவதானத்திலிடங் கிடைக்காதென்று குறிக்கப்பட்டிராமையால் நாமிங்கு வந்தோம்" என்றார். இதைக்கேட்ட பிரவேசச்சீட்டு விற்குமிடத்திருந்த மற்றொருவர் நாடக வரங்கிற்கேகிச் சின்னேரத்திற்கெல்லாம் வெளிப்போந்து "நீங்கள் அவதான விஷயத்தில் யாதேனு முசாவு முத்தேசமுடையராய் வந்துள்ளீரோ?" என்று முகம்மதியர்களைக்கேட்க, அவருளொருவர் "எமக்கத்தகைய உத்தேசமேயில்லை. அவதான விஷயத்தைச் சிரவணிப்பான் வந்தோம்" என்றனர். உடனே எல்லோர்க்கும் பிரவேசச் சீட்டுக் கொடுக்கப் பெற்றுட்சென்றோம்.

அவதானமியற்று மேடைமீது பரிக்ஷகராக வீற்றிருந்தோருட் பெரும்பாலோர் அவதானியாருடைய நண்பர்களாகக் காணப்பட்டனர்.

முதலில் கதிரையாரெழுந்து நாம் சின்னாட்கு முன்னே வெளிநாட்டில் சோடசாவதானமும், அட்டாதசாவதானமும் சுலபமாகச் செய்து முடித்துள்ளோம். இன்று செய்யப்புகுந்த சதாவதானத்திற்குப் பல காரணங்களுண்டெனினும், அவற்றுண் முதன்மையானது இதிற் கிடைக்கும் ஊதியத்தைத் தர்மகாரியத்தின் பொருட்டு வினியோகிப்பதே என்று கூறிப், பின்னர் அவதானஞ் செய்யப்பழகல் மனவொடுக்கத்தைத் தருமென்றும், அதனாலுண்டாகும் நன்மைகள் இன்னின்னவென்றும் பேசி முடித்தார். பின்னர் அவதான விஷயம் இன்னின்னவென்று வழங்கலாயினர். அங்ஙனம் வகுத்தவற்றுள் முப்பத்திரண்டவதானங்களே தேறின. இவர் பத்திரிகையில் வெளியிட்ட நூறவதான மென்பதொழிந்து, அதிலரைப்பாகமு மின்றி மூன்றி லொருபங்காக, அதாவது முப்பத்திரண்டவதானமாக வகுத்தார். இவற்றுள் இலாடசங்கிலி கழற்றல் தேவநாமம் உச்சரிப்பு ஆக இரண்டும், ஈற்றடிதந்து மற்றை மூன்றடியும் முடித்துத் தருவதில் இருவரும், குறித்த விஷயத்தைப் பாடலாகக் கூறுவதி லிருவரும், இலக்கணப்பாட மொருவரும், கண்டபத்திர மொருவரும் தருவதென்றும், சித்தாந்த முடிபுகூறலும், புராண கதை சொல்லலும், மற்றய வெல்லாம் கணித வகையாகவும் வகுத்துப் பின்னர் அவதானஞ் செய்யத் துவக்கினார். அப்போது, பால சரஸ்வதி ஸ்ரீமான் ஞானானந்த சுவாமிகள் சபைத்தலைவராக வமர்ந்திருந்தார்.

முதற்பரிக்ஷகர் :—"குளத்தில் நெருப்பு கொதித்தது சுட்டது குற்றமன்றே." என்னுங் கட்டளைக் கலித்துறை ஈற்றடியைக் கொடுத்து, மற்றை மூன்றடியும் பாடி முடிக்கவேண்டுமென்றார். இச்சமிச்சையை அவதானியார் விரைவிற் பாடி முடித்ததற்குக் கழக மகிழ்வெய்த வேண்டுமெனினும், இப்பாடல் சங்கேதம் (எனவே இச் சதாவதானியார் இதற்கு முன்னமே பாடிப் பழகியிருக்கவேண்டும்) என்று அச்சபையில் வந்திருந்த பல புலவர்கள் எண்ணினார்கள்.

இரண்டாம் பரிக்ஷகர் :—குமரவேளையும், அவர்தம் வேலுமயிலையும் நிரோட்டக வெண்பாவிற் சிறப்பித்துப் பாடவேண்டுமென்றார். நிரோட்டகத்திற்குப் பொருத்தமல்லாத மகர - வகர - பகரங்களை அவதானியார் (பலர் பலதரம் எச்சரிக்கவும் உணராராய்) மும்முறை கூறி (இவ்வவதானியார் நிரோட்டக விலக்கண மெட்டுணையுமறியாத நிரக்ஷரகுக்ஷியென்றெள்ளி நகையாட) அவமானமுற்றனர். பாவம்!

மூன்றாம் பரிக்ஷகர் :—கொடுத்த கோவைத்துறைப் பாட்டை ஒருவாறு முடித்து, அதிலமைத்த புலி புல்லி என்னும் பதங்கட்குத் தமிழ்

மோர் என்று விபரீதார்த்தஞ் செய்து இவ்வரியப் பிரயோகம் ஐங்குறு நூற்றிலுள வென்று புதுமை காட்டினர். ஐங்குறு நூற்றை ஆதியோடந்தமாக மகாமகோபாத்தியாயராய சாமிநாதையர் அவர்களுடன் பன்முறை ஆராய்ந்த அந்தண ரொருவரெழுந்து "அவதானியார் எடுத்துக்காட்டிய பதப்பிரயோகம் ஐங்குறு நூற்றிற் கிடையாதென்று மறுத்தார். வேதியர் கூறியது உண்மையாதலின் அதனை மறுத்துரைக்கவேலாமல் அவதானியார் பயனற்ற சீற்றங்கொண்டாராய்த் தர்க்கத்தானும் இலக்கணத்தானும் இவர் கூற்றை மறுத்துச் சபிப்பேனென்று பொருத்தமற்ற வாய்மதம் பேசித்தறுக்கினர். இவர்தம் நண்பர் முகங்கள் பூரணகிரண சந்திரன் போன்றிருந்தன. இக்காக்ஷியைக்கண்ட ஏனைய புத்திமான்கள் பரிகசித்தனர். அந்தணரை அதிகம் பேசவிடாமல் உட்காரவைத்தனர். இதனிடையே இலக்கணப்பாடம், சித்தாந்தப் பிரசங்கம் என்னு மிரு விஷயங்களையும் நீள நடத்தி வீண்காலம் போக்கினர்.

நான் பரிக்ஷித்த இருபதெழுத்துக்களா லாய கண்டபத்திரத்தில் ஏழெழுத்துக்கள் வரையில் கேட்டு மற்றதைக் கேளாதொழிந்தார். கேட்டதையாவது சொல்லித் தொலைத்தாரில்லை. இதிலும் அவதானியார் அவமானமுற்றனர்.

கணித பரிக்ஷையிலும் பலதரம் அவதானியார் தவறினர். கணித பரிக்ஷகராயிருந்தோர் ஆங்கிலங் கைவந்த வரயர்களாதலால் அவதானியாரவதானம் அவர்களிடஞ் செல்லாதாயிற்று. அவதானியார் திறத்தையும், தற்புகழ்ச்சியையும் கவனித்த அன்னோர் அவதானஞ்செய்தற் கெட்டுணையும் அருகரல்லாத இவர் இதிற் றலையிட்டுக்கொண்டது, இவர் திறமறியாத சில விவேக சூனியர்கள், இவர்பால் வைத்திருந்த மதிப்பை இழப்பதற்கன்றி வேறன்றென்று வயிறுநோக நகைத்திகழலாயினர்.

"கழுதை தேய்ந்து கட்டெறும்பாயிற்று" என்னுங் கதைபோல நூறவதானம் செய்கிறேனென்று கூறிவந்த இந்நா - கதிரைவேற்பிள்ளை முப்பத்திரண்டவதானமாக்கியபோதே அவர் தோல்வித்தான மெய்தினரன்றோ! கடைசியாக நிகழ்த்திய அவதானம் பத்தாயிற்று. அப்பத்தவதானமாவது சிறப்ப முடிக்காமல் குளறிவழிந்தார். இவ்விழி வவதானத்தைப்போல இந்நாட்டினு மற்றெந்நாட்டினும் நடந்ததேயில்லை. இக்காலத்தும் முற்காலத்தும் அவதானஞ் செய்வேமென வெளிவந்த வித்வரத்னங்கள் தோல்வித்தான மடையாதது கண்டுங் கேட்டு மிருக்கின்றோம்.

இவ்வளவில் இரவு மணி எட்டாயிற்று. அவதானம் அறைகுறையாயிருக்கையில் அவதானியார் இவ்வவதானத்தின் பொருட்டு இரண்டுநாள்

உபவாச மிருந்ததாகவும், அதனால் தேக சிரமமும் களைப்பு முண்டாகிற தென்றும், அவதானத்தை நிறுத்திக்கொள்ளத் தந்திரவார்த்தை யாடினார். மேடைமீதிருந்த அவர் தம் நண்பர்கள் எல்லோரும் இவ்வளவு போதும் போதுமென்றனர். நா. கதிரைவேற்பிள்ளையும் சள்ளையொழிந்ததென்று சந்தோஷமாயுட்கார்ந்தார்.

இத்தகைய உப்பிலா அவதானத்தை ஒருவர் ஒப்பிலா அவதானமென்று கூறி மகிழ்ந்தார் கண்டீர்! அவர் யார்? இச்சாரமற்ற அவதான பரிக்ஷகரி லொருவராகிய ம. ஸ-ஸ-ஸ்ரீ ஆலால சுந்தரம்பிள்ளை யென்பாரொருவர் எழுந்து நின்று நாமெல்லாம் கண்டு கேட்டானந்திக்கும்படி இன்று சதாவதானத்தைச் செய்து முடித்த நா - கதிரைவேற்பிள்ளை யவர்கட்குச் சதாவதானப் பெயர்தகும்! தகும்!! என்று கூறி யெல்லோரும் கரகோஷங்கள் செய்யுங்கள் என்றார். ஆ! என்ன கலிகாலப்புதுமை! ஸ்ரீ நா - கதிரைவேற்பிள்ளை தம்முடைய நண்பரே எனினும் அப்பெருஞ் சபையில் மனசாக்ஷி விரோதமாக இவ்வாறெழுந்து கூறுதல் கூடுமோ? அவ்வரங்கினிருந்த அறிஞர் பலர் ஆலால சுந்தரம்பிள்ளை யவர்களின் பயனற்ற சொல்லில் அருவருப்புற்றனர். இதோடு சபை கலைந்தது. இதன் படியே இவர்செய்த அவதானம் அவமானமாக முடிந்திருக்கவும், அன்றே நா - கதிரைவேற்பிள்ளை சென்னையி லின்று சதாவதானஞ் செய்து ஜயம்பெற்றாரென மதுரைச் சங்கத்திற்கு எழுதி விடுத்தும் பற்பல பத்திரிகைகளில் விளம்பரஞ் செய்து மகிழ்ந்தார்கள்.

கதிரையார் ஏதோ சிற்சில அவதானங்களைச் செய்து சதாவதானப் பட்டப்பெயர் பெறுதற்கருதி நான்கு வருடத்திற்கு முன்னரே, அதாவது (30-9-1903) பூலோக நண்பன் பத்திரிகையில் "அஷ்டாவதானம் ஏவை?" என்னும் தலைப்பின்கீழ் அவதானங்களை விளக்கவந்தவர் "எட்டுத்தொழில்களை அவதானிப்பவர் அஷ்டாவதானியென்றும், பத்தில் வல்லவர் தசாவதானி என்றும், பதினாறில் வல்லவர் சோடசாவதானி யென்றும், அவற்றிற்கு மேற்பட்ட அவதானங்கள் செய்பவர் சதாவதானி யென்றுஞ் சொல்லப்படுவார்" என அஸ்திவாரம் போட்டுக்கொண்டு 1907-ம் ஞூ சில போலிஅவதானங்களைச் செய்துவிட்டு, அவர் அவதானங்கள் செய்வதில் தவறிவிட்டார் எனப் பலபேர் கூறவும், தாம் சதாவதானஞ் செய்து வெற்றிபெற்றதாகச் சதாவதானியாரென நாணமின்றிப் பட்டப்பெயர் சூட்டிக்கொண்டார்.

பின்னும் இக்கதிரையார் தாம் செய்த அவதானத்தில் பரிக்ஷகர்களாக ஏற்படுத்திக் கொண்டவர்களில்,

முதலாவது பரிக்ஷகர்.—சோமசுந்தரம் பிள்ளை என்பவர். இவர் போலீசுகேசில் கதிரையாருக்காக 3-வது சாக்ஷிக்காரர்.

2.—வது பரிக்ஷகர்.—காஞ்சிபுரம் - பி. சே. முருகேச முதலியார். இவர் ஷெ கேசில் வந்த 10-வது சாக்ஷிக்காரர்.

3—வது பரிக்ஷகர்.—மயிலை - அரங்கசாமி நாய்க்கர். இவர் ஷெ கேசில் வந்த 12-வது சாக்ஷிக்காரர்.

4—வது பரிக்ஷகர்.—யாழ்ப்பாணத்துத் தெல்லியம்பதி இராஜரத்தினம் பிள்ளை. இவர் நாவலர் கக்ஷியைச் சேர்ந்த யாழ்ப்பாணத்துத் தாமோதரம் பிள்ளையின் தமயன் மருமகன்.

5—வது பரிக்ஷகர்.—காஞ்சி - ஆலாலசுந்தரம் பிள்ளை என்பவர். இவர் முன்னர் இராமலிங்க சுவாமிகள் கக்ஷியிலிருந்து பொருளுதவிக் காசைப்பட்டுக் கதிரையார் கக்ஷியிற் சேர்ந்தவர்.

இவரைப்போன்றோரே ஏனைய பரிக்ஷகர்களுமெனக்கொள்க. இவர் அவதானமெல்லாம் போலீசு கேசில் தமக்குச் சாக்ஷிசொல்லும்படி ஆள்களைப் பிடித்து அவர்களுக்கு இன்னின்னவாறு சாக்ஷி சொல்லவேண்டுமென இரவெல்லாங் கற்றுக்கொடுத்து அரங்கிலாட்டிவித்துப் பின்னர் போலீசில் வந்து சாக்ஷிசொல்வித்ததுபோலு மிருக்கின்றது. அதுவுமன்றி அச்சபைக்கு அத்தியாச்சிரம பாலசரஸ்வதி ஸ்ரீ ல ஸ்ரீ ஞானானந்த சுவாமிகள் அக்கிராசனாதிபதியாக ஏற்படுத்திக்கொண்டார். 1902-ம் ஹு பிப்பிரவரி ௴ 16-ம் உ சென்னை வேணுகோபால அரங்கத்தில் வைணவமத சண்டைக்காகக் கூடிய சபையிலும், இன்னும் இக் கதிரையார் கூட்டும் பிரசங்க சபைகளிலும் ஷெ சுவாமிகளைச் சபைத்தலைவராக ஏற்படுத்தப்பட்டு வருவதால் ஷெ சுவாமிகள் இவரிடத்துப் பக்ஷமுடையவராக விருந்திருக்கவேண்டும். அங்ஙனம் எவ்வாறு கொள்ளலாமெனின், அவதான முடிவில் பிராமணப் பரிக்ஷகர் ஒருவர் எழுந்து இந்த அவதானம் பூர்த்தியாகவில்லை யென்றும், தமது கவியை முடித்துத்தரவில்லை யென்றும், முடித்த கவிகளிலே அநேக குற்றம் கூறியும் பேசினார்.

கதிரையாருக்கு மிக்க நண்பராயும் பரிக்ஷகராயு மிருந்த கருங்குளம் குப்புசாமி முதலியார் B. A., என்பார் இவர் அவதானந் தவறிவிட்டாரெனக் கூறி யிருக்கின்றார். இவ்வாறிருக்கவும் "நடத்திய விஷயத்தில் குற்றமிருப்பதாகக் காணப்பட்டாலும் பாலையும் நீரையும் கலந்தவிடத்தும் நீரையொழித்துப் பாலைப்பருகும் அம்ஸத்தைப்போலக் குற்றத்தைக் கருதாது குணத்தையே கருதல் விசேஷ" மெனச் சபாநாயகர் கூறினார். இவர் கூற்றைச் சுதேசமித்திரனில் (26-2-1907) ல் காண்க.

இதனால் பதினாறு அவதானத்தின் மேற்படச் செய்தால் அவரைச் சதாவதானியாரெனக் கூறலாமெனக் கதிரையார் பூலோக நண்பனில் கூறி முன்னரே எழுதிவைத்துக் கொண்டதைப் பிரமாணமாகக் கொண்டே சதாவதானஞ் செய்து முடித்ததாகத் தெரியவருகிறது. ஆனால் இதற்குப் பிரமாணம் என்னையோ?

## கதிரைவேற்பிள்ளை குன்னூர் ஆஸ்பத்திரியில் போடப்பட்டிறந்தது.

இச்சதாவதானத்தில் தோல்வியுற்றமைகண்டு இனி நாம் இந்நாட்டி லிருந்தால் அவமான முண்டாமெனக் கருதி இவர் உடனே கரூர் சென்று ஆங்குள்ள (Revd. A. C. Glaton) கிளேட்டன் பாதிரியாருக்கு முனிஷியாக வமர்ந்து அவருடன் மார்ச்சு மீ முதலில் நீலகிரி ஜில்லாவி லுள்ள குன்னூருக்குப் போய்ச்சேர்ந்தார். அக்காலத்தில் முன்னரே பெண்ணோய் காரணமாக இவருக்குண்டாயிருந்த (Acute Nephritis) என் னும் மூத்திரப்பிண்டதாபன ரோகம் என்னும் பொல்லா நோயாற் பீடிக் கப்பட்டு அவ்வூர் ஆசுபத்திரியில் கொண்டுபோய்ப் போடப்பட்டுப் பின்னர் (Double Pneumonia) என்னும் சுவாசப்பை ரோகத்தால் பீடிக்கப்பட்டு சாக 4 நாள் முன்னரே வாயடைத்துப்போய்த் தமது பந்து மித்திரர்க ளிருக்குமிடத்தையும் வாய்விட்டுச் சொல்லமுடியாமல் இயமவாதனை பட் டுக்கிடந்தார்.

அதனால் அவ்வூரிலிருந்த சொக்கலிங்கம் பிள்ளை என்பாரொருவர் இவர்மீது இரக்கமுற்றவராய் இது செய்தியை அவரது பந்து மித்திரர் களுக்கறிவிக்கக் கருதி அவர்களின் விலாசத்தைத் தெரிவிக்கும்படி (26-3-1907) சுதேசமித்திரன் பத்திரிகையில் விண்ணப்பஞ் செய்து கொண்டனர். ஆகிலும் அன்றிரவே நா-கதிரைவேற்பிள்ளை தமது 33 வது வயதில் இறந்துபோயினர். இவர் இவ்வாறாக அற்பாயுளாக இறந்த விஷயம் எல்லோரும் மிகவும் விசனிக்கத் தக்கதேயாம்.

ஆயினும் இவர் இராமலிங்கசுவாமிகள் விஷயத்திலிழைத்த தீமை களை நினைத்தால் சிவநேயச் செல்வர்களாயுள்ள ஒவ்வொருவர் மனமும் இக்காலத்தும் பகீரெனப் பற்றியெரிகின்றது.

# அநுபந்தம்.

## இராலிங்க சுவாமிகளின்மேல் கதிரையார் ஏற்றிய தோஷங்களெல்லாம் தமக்கே யாயினமை.

இக்கதிரையார் குசப்பேட்டையிலும் புரசவாக்கத்திலும், காமவலை யிற்பட்டு அலைதிப்பட்டவையெல்லாம் இராமலிங்க பிள்ளையின் மீதேற்றிப் பூப்புப் பெண்ணைப்புணர்ந்து பெண்ணை வாங்கிக்கொண்டாரென்றும், அதனால் பரியாரி கந்தப்பிள்ளையிடத்தில் இரசஞ்சேர்ந்த மருந்தினைவாங்கிச் சாப்பிட்டு அதனால் பல்விழுந்தாரென்றும், நிமித்தமில்லாமலே ஏட்டில் எழுதியும் கோர்ட்டில் தாக்கல் செய்தும் பொய்ச்சான்று கூறுவித்த பழி வீண்போகுமா? அந்நோய் இவர் தமது இறுதி காலத்தில் தம்மையேவந்து சூழ்ந்துகொண்டது. அதுகாரணமாக இவர்மாத்திரமா இவ்வாறிறந்தார்? அந்தச்சுவாமிகளைத் தூஷித்த ஈழநாட்டுச் சபாபதிநாவலரும் பெண்ணை மிகுதியால் நீர் ரோகமும் அதன்மேற் கட்டியுங்கண்டு ஆஸ்பத்திரியிற் கொண்டுபோய்ப் போடப்பட்டும் சத்திரம் செய்யப்பட்டும் மரணவேதனை பட்டிறந்தார்.

இக்கதிரையார் இராமலிங்கசுவாமிகளைக் கருங்குழியார் என்றும், கருக்குழியார் என்றும் இகழ்ந்த காரணத்தானே தாமே தமது இறுதி காலத்தில் அக்கருவூரில் வசித்திருந்தது மன்றித் தமது பெண்டினையும் பிள்ளையையும் அக்கருவூருக்கே ஒப்படைக்க நேர்ந்தது. இது யாவரு மறிந்த விஷயமே.

பின்னு மிக்கதிரையார் தாமியற்றிய மருட்பா மறுப்பு முடிப்புரை யில் இராமலிங்கபிள்ளையையும் அவர் பாடல்களையும் போற்றுவோரும் புகழ்வோரும் படிப்போரும் சிவநிந்தை சைவசித்தாந்த நிந்தை சிவனடி யார் தூஷணம் திருவருட்பா நிந்தை என்னும் இக்கொடிய அதிபாதகங் கள் சேரப்பெற்று மீளா நரகத்தை யடைவரென்பதும் சத்தியம் சத்தியம் முக்காலுஞ் சத்தியம் என்று பிரமாணங் கூறினமையானே, இவர் மர ணந்த காலத்தில் சிவபெருமானெழுந்தருளியிருக்கும் வெள்ளியங்கிரியை யடையாது இயமனுக்கிடமாகிய நீலகிரியைச் சேர்ந்து உயிர்நீங்கி னமை வியப்பினும் வியப்பே. (நீலம்—இருள்) எனவே இராமலிங்க சுவாமிகள் அருட்சோதியை நாடி அருட்சோதியானார். கதிரையார் இருளை நாடி இருள் வடிவானார். கதிரையார் நிறமும் இருள், மனமும் இருள், அவர் அடைந்த இடமும் இருளாய் முடிந்தன.

" அடக்க மமரரு ளுய்க்கு மடங்காமை
யாரிரு ளுய்த்து விடும்."

இவர் மருட்பாமறுப்பு எழுந்தது 20-3-1904. இவர் மாணமானது 26-3-1907. இந்த 3 வருஷத்துக்குள்ளாக விஷப்பரிக்ஷை செய்வதுபோல சிவயோகியராயுள்ள இராமலிங்க சுவாமிகளையும் அவரது திருவருட்பாவையும் நிந்திக்கப்போய்த், தீராநரகிற் காளாயினர்.

---

## கதிரையார்க்கும் அவரைச் சேர்ந்தவர்க்கும் நேர்ந்த விபத்து.

---

தக்களு ரன்றே தலையிழந்தார் தக்கன்
மக்களைச் சூழநின்றுந் தீபற
மடிந்தது வேள்வியென்றுந் தீபற.

என்ற மாணிக்கவாசக சுவாமிகளின் கட்டளையின்படி இவர் தமது மகனைப் பறிகொடுத்ததும், மனைவியைப் பறிகொடுத்ததும், கடைசியாகத் தாமும் தம்முயிரைப் பறிகொடுத்ததும், பரிதபிக்கத் தக்கதேயாம்.

இனி யிவரிழைத்த அதி பாதகம் இவர்மட்டிலா நின்றது? இவருக்காகப் பொய்ச்சான்று கூறினவர்களும் இவர் செய்யும் நிந்தனைகளுக்குத் துணைப்பட்டார்களும் பலருளர். அவர்களையுஞ் சூழ்ந்துகொண்டது. நமக்குத் தெரிந்தவரையில் சிலவற்றைக் குறிப்பாம்.

திருவருட்பாவைப்பாடிச் சீவனஞ் செய்துவந்த செக்காருள் ஒருவர் கதிரையார் மாயவலையிற்சிக்கி, அவரால் தேவாரப்பாரதி பட்டம்பெற்றுத் திருவருட்பாவைத் தூஷித்துவந்ததால் மகோதரங்கண்டு, நிற்க நிழலுமில்லாமல் அனுதிப்பிணமாய் முத்தியாலுப்பேட்டையில் வந்திறந்தார். வண்ணாரப்பேட்டையில் தேவாங்குல ஜாதியாருள் பொய்ச்சான்று கூறின சோதிடர் ஒருவர் தம்மைக் காப்பாற்றக்கூடிய ஒரேமகனைப் பறிகொடுத்தார்.

சிந்தாத்திரிப்பேட்டையில் கதிரையாரது அதி பாதகங்களுக்கு உதவியாயிருந்த ஓர் முதலியார் தம் மகனுக்குக் கல்யாணஞ் செய்து சாந்திமுகூர்த்தஞ் செய்வதன்முன் அவனைப் பறிகொடுத்தார்.

குசப்பேட்டையில் கதிரையாரின் மாணவரா யிருந்த செட்டியார் ஒருவர் அகாலமாக இறந்தார்.

காஞ்சிபுரத்தில் கதிரையார்க்கு உதவியாயிருந்த ஓர் பிரபு தன்மகனை யும், வேறு இருவர் கிரிமினல் கேசிலகப்பட்டு ஆயிரக்கணக்கான பொரு ளையும் இழந்தார்கள்.

காஞ்சிபுரத்தில் இராமலிங்கபிள்ளை இப்போதகப்பட்டால் 2 டஜன் சவுக்காலடிப்பேன் என வாய் மதங்கொண்டுபேசின ஒரு பெரியமனிதன் தனக்குள்ள கோச்சுவண்டியும்போய்க், குதிரையும்போய்ச், சவுக்கும்போய் இப்போது கழனியி லேரோட்டுஞ் சிறு கோலூன்றித் திரிகின்றார்.

காஞ்சிபுரத்தில் இராமலிங்கபிள்ளையை நிந்தனை செய்தமையாற் றான் கதிரையாருக்கு ஆண்பிள்ளை பிறந்ததெனச் செருக் குற்றுரைத்த இருவர் பின்னுஞ் சில நாளைக்குள்ளாகக் கதிரையார் பிள்ளையோடு தம் பிள்ளைகளையுமிழந்தனர்.

காஞ்சிபுரத்தில் ஆதியில் இராமலிங்க சுவாமிகளைப் போற்றிவந்த ஒருவர் பிழைப்பி னிமித்தமாகக் கதிரையாருடன் சேர்ந்து, அச்சிவயோகி யார்மீது முழு வாதஞ்செய்யத் தலைப்பட்டுத், தமக்கு அரைவாதமுங் கால் வாதமுஞ் சித்திக்கப்பெற்றார்.

கிளியனூரில் சுவாமிக்கு விரோதமாகப் பொய்ச்சான்று கூறின பண்டாரச்சாதியா னொருவன் மாண்டான்.

சிதம்பரத்தில் சுவாமிக்கு விரோதமாகப் பொய்ச்சான்று கூறிய ஒரு சைவன் தம்மைக் காப்பாற்றிவந்த மகனை யிழந்தான்.

அயனவரத்தில் முக்குண வயத்தின் மூறைமறைந் தறைதல் என்ற பொய்ப்பத்திரம் எழுதிப் பொய்ச்சான்று கூறிய ஒருவன் மீளவும் வே றோர் (forgery) பொய்ப்பத்திரம் பிறப்பித்து, அது காரணத்தால் 4 வருஷ கடுங்காவலில் அடைக்கப்பட்டிருக்கிறான். இம்மூன்று வருஷத்திற்குள் தெண்டிக்கப்பட்டார் எத்தனை? மாண்டார் எத்தனை? அவர்களை யெடுத் துக் கூறுவதினால் பயனின்றாம்.

அம்பலத்தி லெங்களைய ராடியநல் லாட்டம்
அன்போடு துதித்தவருக் கானதுசொல் லாட்டம்
வம்புசொன்ன பேர்களுக்கு வந்ததுமல் லாட்டம்
வந்ததலை யாட்டமன்றி வந்ததுபல் லாட்டாம்.

என இராமலிங்கசுவாமிகள் சிவநாமாவளியிற் கூறியபடி இத்தீங்குக ளெல்லாம் நேரிட்டிருக்கின்றன.

அடியர் தங்களை யாசுரைத் தவரது கேட்டவர் கேட்பித்தோ ருடன்வி ராவினர் மூட்டின ருடன்பட லுற்றவ ரிவரெல்லாம்

விடிவில் வெந்நர கழுந்துவ ராதலான் விமலமெய்ப் பொருளென்றே
கடிகொள் பூசனை புரிவதலாற் கரி சடியர் பா லுரையற்க,

எனச் சிவனடியாரை நிந்தனை கூறினவரும், அவரோடு சம்பந்தப்பட்டோர் எல்லோரும் தீரா நரகிற் காளாவாரெனத் தணிகை புராணத்திற் கூறினமை யாவரு மறிந்த விஷயமே. பின்னும்,

எழின்ஞானி யையிகழ்வார் கேட்டா ரிகழ்கேட்
டகலா ரவமதியார் நால்வர்—கழலுதன்
மேதக வென்றவரை விட்டகலா தார்பஞ்ச
பாதக ரென்னப் படும்.

என்னுஞ் செய்யுளேயு முணர்க.

இவற்றிற் கிணங்கியே வடலூர்ப் பெருவெளியில் சிவயோகியரா யெழுந்தருளியிருந்த திருவருட்பிரகாச வள்ளலாரென்னும் ஸ்ரீமத் இராம லிங்கசுவாமிகளேயும் அவரது திருவருட்பாவையும், ஈழநாட்டு ஆறுமுக நாவலரும், அவர்பின்னர் ஈழநாட்டு சபாபதி நாவலரும், அவர்பின்னர் ஈழநாட்டு நா - கதிரைவேற்பிள்ளையும் பரம்பரைப் பகைமை பாராட்டித் தூஷித்துத் தீயநரகி லாழ்ந்தனர்கள்.

அடியிற் குறித்திருக்குஞ் செய்யுட்களானும் ஈழநாட்டாராகிய வன்னோரது தீச்செயல் நன்குணரப்படும்.

சீர்பூத்த கவுணியர்கோன் முதனால்வர் பதம்பூத்த சிந்தை பூத்த
பேர்பூத்த போதசிதம் பரராம லிங்கனெனும் பெரியோற் கிந்தப்
பார்பூத்த சைவரெலாம் பணிபூத்த றகுதியெனப் பரிவி னோடும்
ஏர்பூத்த பாமாலை சோமசுந்த ரக்குரிசி லியற்றி னானல்.

சென்னைநகர் வேதாக மோக்தசபைச் சிலருளத்தைச் சிதைத்துக் காழி
மன்னவனைப் பசுவென்று மீழநகர்க் கதிரைவேன் மாசு ளத்தோன்
அன்னவன்சொ லருட்பாவை யலர்தூற்றும் புன்மொழியா லறிவு மாழ்கி
யின்னல்படுஞ் சைவர்தமக் கென்னுரைப்பேன் கலிமாகூஷி யியல்பான்
[மன்னோ?

முன்னாளின் மாணிக்க வாசகர்க்குத் தீங்கிழைத்து மூகை யாயும்
பின்னாளிற் பத்திரனார் பத்தினிக்குப் பகைவிளைத்துப் பிற்பட் டாரின்
னன்னாளி லாறுமுக நாவலரு மழுக்காற்றா னானி யெய்த்தார்
எந்நாளு மீழநகர் கவிஞர்க்கிங் கிடர்செயலே யியற்கை மாதோ.

---

# நா-கதிரைவேற் பிள்ளையின் கல்விச்செருக்கு.

கதிரையார் இலக்கண இலக்கியங்களில் தமக்கு ஒப்பாரு மிக்காரு மொருவரு மிலரெனத் தம்மைத்தாமே மதிக்குந் தகைமையுடையார்.

கடலே யனையம்யாங் கல்வியா லென்னு
மடலே றனையசெருக் காழ்த்தி—விடலே
முனிக்கரசு கையான் முகந்து முழங்கும்
பனிக்கடலு முண்ணப் படும்.

என்ற ஆன்றோர் வாக்கியத்தை யிவருணர்ந்திலார் போலும்.

இவர் மதுரைச்சங்கத்து வித்வான் சோழவந்தான் சண்முகம் பிள்ளையவர்கள் இலக்கண விஷயத்தில் கேட்ட கேள்விக்கு விடையளிக்க வகையறியாது அவமானப்பட்டமை ஈழநாட்டுப் பகட்டுரை மறுப்பில் பரக்கக் காணலாம். அங்ஙனமாகவும் இவர் மதுரை மாணவசங்கத்தார்முன் சாதி சண்டையில் தோல்வியுற்ற காலத்திலும் மதுரைச் சங்கத்திலுள்ள சாஸ்திரிமார்கள் யானைகள் என்றும், கவிராயர்கள் குரங்குகளென்றும் தான் இளஞ்சிங்கவேறென்றும் சற்றும் நாணமின்றி எழுதிவிடுத்தது யாவரு மறிந்ததொன்றே.

பின்னர் இவர் மருட்பாமறுப்பு எழுதப் பிள்ளையார் குட்டிக் கொண்டபோதே நூல் ஆரம்பத்தில் முதல் வாக்கியத்திலேயே "இற்றைக்கு முப்பது வருடங்களுக்கு முன்னர் இருந்த இராமலிங்க பிள்ளை என்பார் தம்மைத் திருவருட்பிரகாச வள்ளலாரென்றும், தமது பாடல்களைத் திருவருட்பாவென்றும், பொருந்தாப் பெயர்களிட்டெழுந்த அக்கணந்தொட் டிதுகாறும் வைதிக சைவசுத்தாத்வித சித்தாந்த மெய்ந்நிலை நிற்கும் பெரியோர்களாற் கண்டிக்கப்பட்டு வருகின்றன" என வாரம்பித்தார். இதில் எழுவாய் பயனிலை யமைத்து நால் வரி வசனநடையில் எழுத முடியவில்லை யென்பது யாவரு மெளிதி லோர்ந்துணரலாம். இறங்கு துறையிலேயே நீச்சு நிலை கொள்ளவில்லை யென்றால் இந்நூல் முழுதும் ஆராயவேண்டுமோ? ஆராயுங்கால் மணற்சோற்றில் கல் லாராய்வதுபோல முடியும். இவர் நூலில் எடுத்தவிடமெல்லாம் மயக்கும் மலைவும் முரணும் வழுக்களும் பொதிந்துள்ளனவாம். இவர் இராமலிங்க பிள்ளை பாடல் ஆபாச தர்ப்பணமென எழுதப்போய் இவரெழுதியவையெல்லாம் ஆபாசமாகி அந்நூல் அவைகளை விளக்குந் தர்ப்பணம் (கண்ணாடி) ஆகி முடிந்தது.

குலமணி வெளி யுறுதாழ் குரவையூ டொளித்தி ருக்கும்
சலமிசை யெவருங் காணச் சஞ்சரித் திடுந்து ரும்பு
கலமென மானம் பூண்ட கலைவலோ ரடங்கி நிற்பார்
புலனில்சீ த்தையர்த மைத்தாம் புகழ்ந்தெங்குந் திரிவர் மாதோ.

என்பதற்கிவரே போதிய சான்றுவர்

## நா—கதிரைவேற் பிள்ளையின் பட்டாபிதான விசாரம்.

கதிரையார் தாம் ஆரணி சமஸ்தான வித்வான் என்றும், மாயாவாத தும்ஸகோளரி யென்றும், அத்துவித சைவசித்தாந்த மஹோத்தாரண ரென்றும், மதுரை நான்காஞ் சங்கப்புலவரென்றும், சதாவதானி யென் றும் பற்பல பத்திரிகைகளில் வெளியிட்டு ஆரவாரஞ்செய்து திரிந்தார். இவற்றி னுண்மையினைச் சற்றே விசாரிப்பாம்.

## ஆரணி சமஸ்தான வித்வான்.

ஆரணி ஜாகிர்தாரவர்கள் குமாரருக்குக் கதிரையார் ஒன்றரைமாதம் பள்ளிக்கான புத்தகங்களைக் கற்பித்துவந்தார். அதுகாலத்தில் கதிரை வேற்பிள்ளை சில பத்திரிகைகளில் தம்மை "ஆரணி நகர சமஸ்தான வித்வான்" என விளம்பர மிட்டதைக் கண்ட மேற்படி ஜாகிர்தாரவர்கள் இவரிடத்தில் அருவையைகொண்டு இவரை நீக்கிவிட்டுப்பச்சையப்பன் கலா சாலைத் தமிழ்ப்பண்டிதர் கிருஷ்ணசுவாமி முதலியா ரவர்களைத் தங் குமாரருக்கு உபாத்தியாயராக ஏற்படுத்திக்கொண்டார். இவர் உண்மை யில் சமஸ்தான வித்வானாகவிருந்தால் இவருக்கு ஏதேனும் மானியம் விடப்பட்டிருக்கிறதா? ஜாகிர்தார் இவரை தம்மைவிட்டு நீக்குவானேன்? இந்த ஒன்றரை மாதத்துக்குள்ளாகச் சமஸ்தான வித்வான்பட்டம் இவ ருக்கு எங்கே கிடைத்தது? அதனு லிதுவும் தாமே வைத்துக்கொண்ட பட்டமே.

மாயாவாத தும்ஸகோளரி யென்னும் பட்டத்தைப்பற்றி முன்னரே யெழுதியுள்ளோம்.

## அத்துவித சித்தாந்த மஹோத்தாரணர்.

அத்துவித சித்தாந்தத்திற்கு அழிவு நேரிட்டாலன்றோ இவர் உத்தா ரணஞ் செய்தல்வேண்டும்? என்று மழியாது வச்சிரஸ்தம்பம்போல் நிலை பெற்று விளங்கும் அத்துவித சித்தாந்தங் கிலமாயிற்று; அதை உத்தார ணஞ் செய்கின்றேனென்பது, பழுக்கக்காச்சிய இரும்புஸ்தம்பத்துக்கு வெண்ணெய்யினுற் பூண் கட்டுகிறேனென்பது போலாம். சைவசித்தாந்த

மூணர்ந்த ஒவ்வொருவரும் புறச்சமயத்தார் எதிரிட்டால் அவர் மதத்தைக் கண்டித்துத் தம் மதத்தை நாட்டுவ தியல்பாம். "அவ்வாறு நாட்டிய ஒவ்வொருவரும் அத்துவித மதோத்தாரணர் ஆகவேண்டுமே" அதனால் இவருக்கு அப்பட்டம் எப்படி சித்திக்கும்?

## மதுரை நான்காஞ்சங்கத்துப் புலவர்.

மதுரையில் முதற்சங்கம் இடைச்சங்கம் கடைச்சங்கமென மூன்றே சங்கமிருந்தன. அதனால் நான்காஞ் சங்கமென்பது ஒன்று ஏற்படவில்லை. தற்போது நிலவுஞ் சங்கமோ மதுரைமாணவர் செந்தமிழ்ச் சங்கமெனப் படும். இவர் அதிற்சேர்ந்த காரணத்தால் தம்மை மதுரைமாணவர் செந்தமிழ்ச்சங்கப் புலவரெனக் கூறிக்கொள்ளலாம். அவ்விதங்கூற வகையறியாது இவ்வாறு கூறியது குளறுபடையே போலும். வேளாளரைச் சூத்திரரென நிறுவவேமெனப் பந்தயங்கட்டி வந்து தாம் எடுத்தகக்ஷியை நிறுவ முடியாது கரந்தனன்று ஆங்குள்ளாரொருவர் திருவிளையாடற் புராணக்கதைக் கிணங்க "இத்தலத்தில் முன்னொரு யாழ்ப்பாணன் இரவிற் கரந்தோடினன். தற்போது இந்தக்கதிரையார் என்ற யாழ்ப்பாணன் பகலிற் கரந்தோடினன். எப்பொழுதும் இங்கு யாழ்ப்பாணர்கள் தோல்வித்தான மெய்தி யோடுவது வழக்கமே" எனக் கூறியதற்கேற்பத் திகிற் பட்டு ஓட்டம்பிடித்த இவருக்கு அத்தலச் சங்கப்புலவர் பட்டம் எவ்வாறு சித்திக்கும்?

---

## திருவருட்பா உண்மை விளக்கம்.

இராமலிங்க சுவாமிகள் பாடிய பாடல்கள் திருவருட்பாவெனப் பெயரிடப்பட்டு வழங்கிவருவது யாவருமறிந்தவிஷயமே. ஆனால் ஈழ நாட்டாரும் அவரைச்சார்ந்துளார் சிலரும் அந்நூற்கு அப்பெயர் சூட்டத் தக்கதன்றெனக் நினைக்கிறார்கள். ஆனால் அந்நூற்கு அப்பெயர் எவ்வாறு வந்ததெனக் விசாரிக்கப்புகின் ஒருவர் செய்த நூலில் எதுமிகுதியாக விதந் தோதப்படுகின்றதோ, அதையே அந்நூற்குப் பெயராகக் கொள்ளலாமென நன்னூலார் தமது பொதுப்பாயிரத்தில் விதித்திருக்கின்றார். வருமாறு:—

முதனூல் கருத்த னளவு மிகுதி
பொருள்செய் வித்தோன் றன்மைமுத னிமித்தினு
மிடுகுறி யானுநூற் கெய்தும் பெயரே.

மரபை மிகுதியாக எடுத்துக்கூறு நூற்கு மரபியல் என்றும், களவை

மிகுதியாகக் கூறும் நூற்கு களவியல் என்றும் பெயர் வந்ததுபோல இராமலிங்க சுவாமிகள் பாடல்களில் சிவ பெருமானது திருவருளை மிகுதியாக வெடுத்தெடுத்து விதந் துரைத்திருத்தலின், அந்நூற்குத் திருவருட்பாவெனப் பெயரிடல் தகுதியாமென விளங்குகின்றது. அது ஒருபா லிருக்க,

திருவருட்பா வரலாற்றில்,

ஆயவரு ளிறையெங்கள ருட்பிரகா சப்பெருமான்
தூயவரு ளாற்பொழிந்த சொல்லமிழ்தாந் தமிழ்ப்பெருக்கு
நேயவருட் பற்றுகி நிறைமனத்துப் பெரியர்க்கு
மாயமயக் குழலென்போன் மறவர்க்கு முள்ளுருக்கி.

அளவாத பேரன்பு சொரிந்தருளை விளைவித்துத்
தளவாரு நகைக்கயற்கட் டையலிடங் கொண்டபிரான்
வளமாருங் கழன்மலரோ டிரண்டறுத்து வாழ்விக்கு
முளவாலே யருட்பாவென் றொருநாமம் பூண்டதுவே.

என்றபடி அந்தச் சுவாமிகளின் பாடல்களைப் படித்தாலுங் கேட்டாலும் அவரவர் மனதையுருக்கி அன்பினைப்பெருக்கி அருளை விளைவித்துச் சிவபெருமான் திருவடியி லிரண்டறக் கலக்கச்செய்யும் தன்மையினால், அந்நூற்கு அருட்பாவென அவர் மாணுக்கர் உபயகலாநிதிப் பெரும்புலவர் தொழுவூர்-வேலாயுத முதலியாராற் பெயர் சூட்டப்பட்டது எனக் கூறி யிருக்கின்றது. பின்னும்,

மருளாலே சிலரென்போன் மருளாலே மயங்கியுணர்ந்
தருளாலே யுரைத்ததெனு வருட்பாவி னுரைகொண்டார்
தெருளாதேன் சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கும்
அருளாலே யுரைத்ததெனு வருட்பாவி னுரைகொண்டாம்.

என்றபடி மருள்கொண்டார் சிலர் இப்பாடலுக்கு அருளினாலே பாடியதெனப் பொருள் கொள்வர். யாங்களோ அவ்வாறின்றித் தெளிவிலாத என்போன்றார் மனதைத் தெளியச் செய்து சிவமாக்கும் அருட்டன்மை யுடையதால் அப்பாடல்கள் அருட்பாவெனக் கொண்டாம் என அவர்மாணுக்கரால் கூறப்பட்டிருக்கின்றது. இவை இவ்வாறிருக்க,

ஆதியில் ஆறுமுகநாவலர் சென்னையில் வந்து பிரசங்கஞ் செய்த காலத்துத் தாமோதரம்பிள்ளை என்பார் இவரை இணையில்லாத வித்வானெனக் கூறவும், இராமலிங்கபிள்ளை கூட்டத்தார் இவரை அவமானப்படுத்தின காரணத்தானே இராமலிங்கபிள்ளை பாடல் அருட்பாவாகா மருட்

பாவாமெனவும், தேவார திருவாசக மாதிய திருமுறைகளே அருட்பாவா மெனவும் நாவலர் கூறினாரென முன்னரே கூறியுள்ளாம். தேவாராதிய திருமுறைகள் அருட்பாவென வழங்கப்படுவதற்குப் பிரமாண மெங்குள தெனச்சிலவித்வான்கள் இந்நாவலரை வினவின காலத்து, அச்சுப்பதிப் புக்கு வாராதிருந்த திருக்கோவையா ருண்மையிலிருப்பதாகச் சொல்லி யொழித்தார். அவர் எழுதிய போலியருட்பா மறுப்பென்னும் ஓர் சிறிய சுவடியின் முதலாவது பக்கத்தினும் அவ்வாறே எழுதிவைத்திருக்கிறார். மேற்படி திருக்கோவையார் உண்மையென்னும் நூல் இற்றைக்குச் சுமார் 8 வருடங்களுக்குமுன் கதிரையார் கேசில் அதிக உதவியாக விருந்த சாமிநாதபண்டிதர் என்னும் ஓர் யாழ்ப்பாணத்தாரால் அச்சிடப் பட்டு நமது தமிழ்நாட்டில் அநேகரிடம் இருக்கிறது. அதில் ஆறுமுக நாவலர் கூறியபடி தேவார திருவாசகங்களுக்கு அருட்பாவென்ற பெயர் குறிக்கப்படவேயில்லை. இதை "உண்மை தெரித்தல்" என்ற பத்திரிகை யின் 7-வது பக்கத்திற்காண்க.

இம்மட்டில் விடாது இராமலிங்க பிள்ளை பாடல்கள் திருவருட் பாவாமெனில், அவை அருளைப்பெற்றுப் பாடியனவா? அல்லது அருளைப் பெறப் பாடியனவா? வெனக் குதர்க்கவாதஞ் செய்திருக்கின்றார். அதை யுஞ் சற்றே விவகரித் தொழிப்பாம்.

திருஞான சம்பந்தப் பிள்ளையார் மூன்று வயதிலே ஞானப்பாலுண்டு ஓதாதுணர்ந்து அருள்பெற்றுப் பாடினாரென்பது உலகறிந் திருக்கவும்,

திருவோத்தூர் - பண் - பழந்தக்க ராகம்.

தோட்ட ரேதுத்தி யைந்தலை நாகத்தை
யாட்ட ரேஅடி யார்வினை
யோட்டரே யும்மை யேத்து மோத்தூர்
நாட்ட ரேயரு ளல்குமே.

குழையார் காதீர் கொடுமழு வாட்படை
யுழையாள் வீர்திரு வோத்தூர்
பிழையா வண்ணங்கள் பாடிநின் றாடுவார்
அழையா மேயரு ளல்குமே.

மிக்கார் வந்து விரும்பிப் பலியிடத்
தக்கார் தம்மடி யீர்களென்
றுட்கா தாரு ளதிரு வோத்தூர்
நக்கீ ரேயரு ளல்குமே.

தாதார் கொன்றை தயங்கு முடியுடை
நாதாவென்று நலம்புகழ்ந்
தோதா தாருளரோ திருவோத்தூர்
ஆதி ரேயரு ணல்குமே.

என்னும் இத்திருவோத்தூர் தேவாரத்தில் சம்பந்தப் பிள்ளையார் அருளைப்பெறப் பாடிய வாறென்னை?

பின்னும் மாணிக்கவாசக சுவாமிகள் நேராகச் சிவபெருமானிடத்தில் அனுக்கிரகம் பெற்றும், திருவருள்பெற்றும் பாடிய திருவாசகத்

திருச்சதகத்தில்.

யானேதும் பிறப்பஞ்சே னிறப்பதனுக் கென்கடவேன்
வானேயும் பெறில்வேண்டேன் மண்ணாள்வான் மதித்துமிரேன்
றேனேயு மலர்க்கொன்றைச் சிவனேயெம் பெருமானெம்
மானேயுன் னருள்பெறுநா ளென்றேன்றே வருந்துவனே.

என அருளைப்பெறப் பாடியவாறென்னை? இவற்றால் திருவருளின் றன்மை இன்னவாறென நாவலர் உணர்ந் திருப்பாராயின் இராமலிங்க சுவாமிகள்பாடிய திருவருட்பா அருள்பெற்றுப் பாடியதா அருளைப்பெறப் பாடியதாவென ஆக்ஷேபனை செய்திரார்.

இது நிற்க, அவர் சார்பில்வந்த ஈழநாட்டுச் சபாபதி நாவலர் அப்பெருந் தகையாரை அலர்தூற்றி மாய்ந்தொழிந்தார். ஆறுமுக நாவலரின் மாணாக்கரின் மாணாக்கரெனப் பிற்காலத்தில் வந்த இந்நா - கதிரைவேற் பிள்ளை தமது பரமாசிரியராகிய ஆறுமுக நாவலர் எடுத்துக்கொண்ட கக்ஷியை முற்றுப்பெறச் செய்ய வேண்டுமென்று அரைச்சொற்கொண்டு அம்பலமேறித் தேவாராதிய பன்னிரு திருமுறைகளே திருவருட்பாவா மென்றும், இராமலிங்க சுவாமிகள் பாடல் மருட்பாவென்றும் அச்சிட்டும் பிரசங்கித்தும் ஏழை மதியினர்களை மயங்கவைத்தனர். தேவாராதித் திரு முறைகள் அருட்பாவென்பதற்குப் பிரமாண மெங்குளதென வினவின தற்குச் சமாதானமாகச் சிவாலயமுனிவர் பாடியிருக்கின் றாரெனவும், அநபாயசோழன் பாடியிருக்கின்றா ரெனவும் சிற்சில பாடல்களைக் கற் பித்துப் பொய்ப் பத்திரிகைகள் எழுதி அச்சிட்டு வெளியிட்டிருக்கின்றார். 21, 24-வது பக்கங்களிற் காண்க.

பின்னும் திருமுறைகளைக் கூறுமிடத்துப் பன்னிருமாதம், பன்னிரு விராசி, பன்னிருகலை, பன்னிருவந்தம், தமிழ்ப் பன்னிரு உயிரெழுத்து எனச் சிவபெருமான் சங்கேதமாகப் படைப்புக் காலந்தொடங்கி நிலை

பெறுகின்றன. அதனால் திருமுறைகளும் பன்னிரண்டாக எற்பட்டன வென எதேதோ தமது மனதுக்குத் தோன்றியவாறே பொருத்தமில்லாத வார்த்தைகளைப் பிரமாணமாகக் குளறிவழிந்தார். திருமுறைகளுக்கும் மாதம் இராசி முதலியவைகளுக்கும் சம்பந்த மென்னையோ! வாரம் எழு திதி பதினைந்து நக்ஷத்திரம் இருபத்தேழு வருடம் அறுபது சூரியகலை பனிரண்டு சந்திரகலை பதினாறு இவ்வாறு படைத்தவருஞ் சிவ பெருமானன்றோ? அவற்றிற்கும் பன்னிரு திருமுறைகளுக்கும் எவ்வாறு ஒற்றுமை கூறுவரோ?

இது நிற்கப் பன்னிரு திருமுறைகளை திருவருட்பா வெனக்கூற வந்தவிடத்துத் "திருத்தொண்டத் தொகையருளாற் செப்பினாரென்றும்" புரிந்தருளாற் பரமனையே பாடவல்லார்" என்றும் பற்பல பாடல்களைப் பிரமாணமாக எடுத்துக் காட்டுகின்றார். இதனை ஒருவரு மறுப்பாரில்லை "அவனருளாலே யவன்றாள் வணங்கி" என்பது வேதவாக்கியமா யிருப்பதால் பாடுதற்கும் அவனதருளில்லாமல் முடியாது. இராமலிங்க சுவாமிகள் அருள் பெற்றிருந்ததால் ஆறு திருமுறைகள் பாடினாரென்பதும், ஆறுமுக நாவலரும், கதிரைவேலரும் அருள் பெறாமையால் பாடவேலா தொழிந்தார்களென்பதும் வெட்ட வெளியாக வில்லையா?

பின்னும் அருள் என்பது சிவத்திற்கு அங்கமா யிருத்தலினாலும், அச்சிவம் "அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமா யானந்த பூர்த்தியாகி யருளொடு நிறைந்தது.............அது என் கருத்திற்கிசைந்ததுவே" எனத் தாயுமான சுவாமிகள் கூறியபடி, முற்காலத்தும், பிற்காலத்தும், இக்காலத்தும், எக்காலத்தும் சகல ஆன்மகோடிகளிடத்தும், அதனதன் பரிபாகத்திற்கேற்ப மிகுந்துங் குறைந்தும் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது. சமயாசிரியர் நால்வருள்ளும் அருள் ஏற்றக் குறைவாயிருப்பதையும், அந்நால்வருக்கும் ஏனைய நாயன்மார்களுக்குமுள்ள அவ்வருள் மிகுந்துங் குறைந்து மிருப்பதையும் கண்டுணரலாம். அவ்வாறின்றெனில், கருணைகரக் கடவுள் என்றபெயர் அவருக்குத் திரிகாலத்தும் பொருந்தாதாம். அதனால் அந்த அருள் 63 நாயன்மார்களுக்கே சொந்த மென்றும், அது அவர்கள் காலத்தோடே யொழிந்துவிட்டது, பிற்காலத்தில் வந்த குமரகுரு சுவாமிகள், தாயுமான சுவாமிகள், சிதம்பர சுவாமிகள், இராமலிங்க சுவாமிகள் முதலானவர்களுக்குக் கிடையாதென்பது பொருந்தா விஷயமாம்.

பின்னும் முக்கண்ணன் என்பது விநாயகர் முருகக்கடவுள் உருத்திர மூர்த்திகள் இவர்களுக்கெல்லாம் காரண இடுகுறிப் பொதுப்பெயராக

விருப்பினும், அது காரண இடுகுறி சிறப்புப் பெயராகக்கொண்ட உருத்திரமூர்த்தியையே குறிக்குமாப்போல், அருட்பா வென்பது வேதம் ஆகமம் பன்னிரு திருமுறைகளுக்குக் காரண இடுகுறிப் பொதுப்பெயராக வலிந்து கொள்ளினும் அதுகாரண இடுகுறிச் சிறப்புப் பெயராகவந்த இராமலிங்க சுவாமிகள் பாடலையே குறிக்குமெனக் கொள்க. எங்ஙனமெனில்? பிரசங்க காலத்தில் ஓர் பாடலை மேற்கோளாகக் கூறி அது அருட்பாவிலுள்ளதெனக் கூறின் சபையார் அது இராமலிங்க சுவாமிகள் பாடலெனக் கொள்வாரன்றித் தேவாரமென்றாவது திருவாசகமென்றாவது ஆகமமென்றாவது கொள்ளார். அதனால் இராமலிங்க சுவாமிகள் பாடலே அருட்பாவாமென்பது சித்தமாயிற்று.

ஈழநாட்டார் தேவாராதிய பன்னிரு திருமுறைகளுக்கு அருட்பாப் பட்டஞ் சூட்டப்போய்த் தராசின் ஓர் தட்டில் இராமலிங்க சுவாமிகளின் அருட்பாவையும், மற்றோர் தட்டில் பன்னிரு திருமுறையருட்பாவையும் வைத்து நிறுத்துச் சமநிறை காட்டுவனபோல் முடிந்தது. அதனால் இராமலிங்க சுவாமிகளின் பாடலுக்கு இவர்கள் இழிவுகூறப்போய் அதற்குப் பெருமை நேர்ந்தமையை இவருணர்ந்தாரில்லை. இதுவும் சிவபெருமான் திருவருளேயாம். இது நிற்க,

யோசனை யொன்று நூறு முள்ளடி யுள்ள தாக
ஈசன்மண் ணளந்த தேய்ப்ப விருங்கட லினிது தாவி
வாசவன் முதலோர் வந்து மலையினு மிலங்கை வாழும்
நீசரை யெல்லா நூறி நினைத்தது முடிப்பல் பின்னும்.

என கம்பராமாயணத்தினும்,

பறைய ரூரிலே சிறையிருந்த வென்னைப்
பரிந்துகை தொடுவரோ—திரிசடையே.

என இராமாயண கீர்த்தனைப் பாடலினும், ஈழநாடு பறைச்சேரி எனக் கூறப்பட்டிருப்பதால், தலங்கள்தோறுஞ் சென்று பாடிவந்த சமயகுரவர்களாகிய மூவர் முதலிகளும், அவ்வீழ நாட்டை மிதிக்கலாகாதென இக்கரையி லிருந்தபடியே அந்நாட்டிலுள்ள திருக்கோணமலை திருக்கேதீச்சுரங்களுக்குப் பதிகம்பாடித் திரும்பிவிட்டார்களென்பதும், அவ்வீழநாட்டிற் சென்ற தீக்ஷிதர்கள் இருவர் நடேசப்பெருமானைப் தீண்டப்பெறாதெனப் பூசையில் நின்று நீக்கி வைக்கப்பட்டிருந்ததும் யாவருமறிந்த தொன்றே.

மூவர் தமிழுக்கும் பொதுவகையால் தமிழ்வேதம், திருநெறித்தமிழ், தமிழ்மறை என்றும்; சிறப்பு வகையால் சம்பந்தசுவாமிகள்பாடல்களுக்குத்

திருக்கடைக்காப் பென்றும் ; திருநாவுக்கரசு சுவாமிகள் பாடல்களுக்குத் தேவாரம் என்றும், சுந்தரமூர்த்தி சுவாமிகள் பாடல்களுக்குத் திருப்பாட்டென்றும் அபய குலசேகர சோழன், அநபாயசோழன், நம்பியாண்டார் நம்பிகள், சேக்கிழார் சுவாமிகள், உமாபதி சிவம் முதலிய சிவானுபவச் செல்வர்களால் வழங்கி வந்திருக்கவும், சைவசமயாசிரியர்களாலும், வணங்கப்பெற்ற தீக்ஷித சுவாமிகளை கோர்ட்டில் கொண்டுபோய் நிறுத்தி அபராதம் போடுவித்த இப்பறைச்சேரியி லுள்ளார்தாமோ இவற்றிற்குரிய இப்பெயர்களை மாற்றி அருட்பாப்பட்டஞ் சூட்டுதற் கருகராவார் ?

கிறிஸ்தவக் கொள்கையுடைய ஈழநாட்டார் சென்னையிற் றோன்றி நூதனமாகச் சைவமதம் புகுந்து கரியமேனியில் வெளிய நீற்றை வெளுக்கப்பூசி உருத்திராக்கமாலைக ளணிந்து தாம் முன்கண்டறியாத உயர்ந்த நிலையில் வந்துவிட்டோமென் றெண்ணிக்கொண்டு சைவசமயம் பெரும் பள்ளத்தில் விழுந்துவிட்டதாகவும் அதை ஆகாயமளாவ உயர்த்தி விடுவதாக வெண்ணித் தேவாராதிய பன்னிரு திருமுறைகளுக்கு அருட்பாப் பட்டஞ்சூட்டி, ஊரூர்கடோறும் யானையின்மீதேற்றி இதோபாரும் பன்னிரு திருமுறை திருவருட்பா ! இதோபாரும் பன்னிரு திருமுறை திருவருட்பா! எனப் பறையடித்துத் திரிகின்றார்கள். அன்றியும் இவருட் சிலர் திருவிழாக் காலங்களில் தேவார திருவாசகங்களில் சிற்சில பாடல்களை எடுத்துத் தேவாரத் திருவருட்பா வென்றும், திருவாசகத் திருவருட்பாவென்றும், திருவிசைப்பாத் திருவருட்பா வென்றும் காசுசெலவு அதிகமில்லாமல் அச்சடித்து வழங்கி மகிழ்கின்றார்கள்.

பின்னும் பன்னிரு திருமுறைகளை ஜீரணோத்தாரணஞ் செய்கிறேமென்று ஏழைமதியினர்களை மயக்கிப் பணம்பறித்து ஜீவிக்கின்றார்கள். ஒருவன் நீராழிமண்டபம் பற்றிக்கொண்ட தென்றோடவும், அவனைக்கண்ட மற்றவர்கள் (அது குளத்தின் சலத்தி னடுவிருக்குங் கருங்கற் கட்டடமாமன்றோ அது எவ்வாறு தீப்பிடிக்கு மென்றெண்ணாது) அதை அவிக்க பின்றொடர்ந்தோடு மூட சிகாமணிகளைப்போல, (அச்சிடப்பட்டு பலபேரால்போற்றி வரப்பட்ட பன்னிரு திருமுறைகள் எவ்வாறு ஜீரணமாமென்றெண்ணாது) ஐயோ என் செய்வதென்றேங்கி இவருக்குப் பணமுதவினபேரும் பலருளர். இவர்கள் மதியை யென்னென்றுரைப்பேம்.

இவ்வாறு பன்னிரு திருமுறைகளுக்குத் திருவருட்பாப் பட்டஞ்சூட்டி உயர்த்தப்போய்க் கீழ்நிலையிலுள்ள காசிதுண்டி விநாயகர் திருவருட்பா, கண்டிகதிர்காமவேலவர் திருவருட்பா, மாரியம்மன் திருவருட்பா, மதுரைவீரன் திருவருட்பா, ஏசுநாதர் திருவருட்பா, மயிலை சல்லாசர் திருவருட்பா

இவைகளோடொப்பச் சேர்த்து அத்தமிழ் வேதங்களுக்குள்ள பெருமை யினைமாற்றிச் சிறுமை கற்பிக்கின்றார். ஐயோ பாவம்! கொடுமை! கொடு மை! பரம்பரைச்சைவராயுள்ளவர்கள் இவ்வாறுசெய்யத்துணிவரா? சிலநாளைக் குமுன் இராமலிங்க சுவாமிகள் பாடலுக்கேற்பட்ட திருவருட்பாப் பெய ரை, வெகுகாலத்தின்முன் ஏற்பட்ட தமிழ்வேதங்களுக்கிடுவது அறிபாத கமன்றோ! இக்கதிரையார் தந் தந்தையின் பெயர் நாகப்பிள்ளை யென் றிருக்க அப்பெயரை மாற்றி வீரப்பிள்ளை யென்றழைத்தால் யாவரே ஒப்புவர்?

எப்பொரு ளெச்சொலி னெவ்வா றுயர்ந்தோர்
செப்பின ரப்படிச் செப்புதன் மரபே.

எனக் கூறிய விலக்கண விதியையும் மறந்தார் கொல்லோ? இதனால் மரபறியார் மணம் பேசப்போய்வலிது நகைக்கு வல்லிலக்காயினார் என் பது இவரிடத்தே வெளியாயிற்று.

இவ்வீழ நாட்டுப்புரட்டர்கள் பன்னிரு திருமுறைகளுக்குத் திரு வருட்பாப் பட்டஞ்சூட்டப்போய் இக்கதிரையாரை ஆசிரியராகக்கொண்ட சில பரமானந்த சீடர்கள் **ஆரியவேத திருவருட்பா** வென்றும், **திராவிட வேத திருவருட்பா** வென்றும் இயலாப்பெயர் கொடுத்து வழங்கிவருகி றார்கள். இல்லாத திருவருட்பாவை எழுப்பிவிட்டமையால் உண்மைத் திருவருட்பா ஒளித்துவிடுமென்ப திவர் கருத்தேபோலும்.

---

## ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகள் பாடல்கள்

திருவருட்பாவேயாமெனச் சென்னை மகாஜன
சபையாரால் நிர்மாணிக்கப்பட்டன.

---

( 11-10-1903 ) இங்ஙனமியும் திருவருட்பாமீது இக்கதிரையார் கூறு வனவெல்லாம் உண்மையாமோ அல்லது பொய்மையாமோ என விசா ரித்தொழிக்கவேண்டுமெனச் சென்னையிலுள்ள வித்வ சமூகத்தாரால் மகா ஜன சபையொன்று கூட்டப்பட்டது. அதில் பலபேர் பண்டித சிகா மணிகளும் தமிழிலும் ஆங்கிலேயத்திலும் பட்டாபிதானங்கள் பெற்றுள்ள வித்வசிரேஷ்டர்களும் ஹைகோர்ட்டு வக்கீல்களும் இராஜாங்கத்தி லுயர்ந்த உத்தியோகஸ்தர்களும் வர்த்தகர்களும் விவசாயப் பிரபுக்களு மாக ஆயிரக்கணக்காக வந்து கூடினார்கள். அவர்களுள் தெரிந்தவரையில் சிலரை எடுத்துக் காட்டுவாம்:

ஸ்ரீமான் S. அநவரத நாயகம்பிள்ளை அவர்கள், M. A., L. T.
" V. விஸ்வநாத சாஸ்திரியார் அவர்கள், B. A. B. L. ஐகோர்ட் வக்கீல்.
" S. வேணுகோபாலு செட்டியார் அவர்கள், B. A., B. L.
" T. S. இராமலிங்கம்பிள்ளை அவர்கள், B. A.
" V. முத்துக்குமாரசாமி முதலியார் அவர்கள், B. A.
" M. ஜீவரத்தினம் அவர்கள், B. A.
" K. குப்புசாமி முதலியார் அவர்கள், B. A.
" V. கலியாணசுந்தரம் பிள்ளை அவர்கள், B. A.
" T. B. இராமச்சந்திர முதலியார் அவர்கள், B. A.
" S. விநாயக முதலியார் அவர்கள், B. A.
" பரமஹம்ஸ ஆத்மராம ஸ்வாமிகள்.
" திருமயிலை - சண்முகம் பிள்ளை அவர்கள், வித்வான்.
✓ " அஷ்டாவதானம் பூவை - கலியாணசுந்தரமுதலியார் அவர்கள்.
✓ " ப. அப்பாவு செட்டியார் அவர்கள், ஸ்ரீலஸ்ரீ நாயகர் மாணாக்கர்.
✓ " ஈக்காடு - இரத்தினவேலு முதலியார் அவர்கள், தமிழ்ப்பண்டிதர்.
" திருமயிலை வி. சுந்தர முதலியார் அவர்கள், வித்வான்.
✓ " முத்தமிழ் ரத்நாகரம் பாணுகவி அவர்கள்.
✓ " தி. செ. முனிசாமி முதலியார் அவர்கள், ஸ்ரீலஸ்ரீ நாயகர் மாணாக்கர்.
" பிரசங்க ரத்நாகரம் தி. வடிவேற் பிள்ளை அவர்கள்.
" திரு. சிவப்பிரகாச ஐயர் அவர்கள், தமிழ்ப்பண்டிதர்.
✓ " கோ. வடிவேலு செட்டியார் அவர்கள், தமிழ்ப்பண்டிதர்.
" மாயூரம் - நமசிவாயம் பிள்ளை அவர்கள், வித்வான்.
" மதுரகவி - மாணிக்க முதலியார் அவர்கள்.
" கோவளம் - அப்பாசாமி செட்டியார் அவர்கள், வித்வான்.
" தி. சி. வில்வபதி செட்டியார் அவர்கள், பத்திராசியர்.
" சண்முகசாஸ்திரியார் அவர்கள், வித்வான்.
" சீவரம் - வேலாயுத முதலியார் அவர்கள், தமிழ்ப்பண்டிதர்.
" திருத்தணிகை - குருசாமி ஐயர் அவர்கள், தமிழ்ப்பண்டிதர்.
" கந்தசாமிப் பிள்ளை அவர்கள், தமிழ்ப்பண்டிதர்.
" நெல்லி - அப்பாசாமி உடையார் அவர்கள், வித்வான்.

ஸ்ரீமான் வல்லி ப. தெய்வநாயக முதலியார் அவர்கள், தமிழ்ப்பண்டிதர்.

,, வன்னிணக்களஞ்சியம் காஞ்சீ - நாகலிங்க முதலியார் அவர்கள்.

,, திருவருட்பா தூஷண தும்ஸகோளரி பாலசுப்பிரமணியப் பிள்ளை.

,, மயிலை - சிவராஜம் பிள்ளை அவர்கள், வித்வான்.

,, செங்கற்பட்டு - அரங்கசாமி நாயகர் அவர்கள், வித்வான்.

,, நின்றை - தங்கவேலு முதலியார் அவர்கள், வித்வான்.

,, அற. துரைசாமி நாயகர் அவர்கள், ஸ்ரீலஸ்ரீ நாயகர் மாணுக்கர்.

,, அரக்கோணம் பா. சி. சரவண முதலியார் அவர்கள், சைவப் பிரசாரகர்.

,, சாமிநாத ஐயர் அவர்கள், சைவப்பிரசாரகர்.

,, புராணிகர் பொ. சுந்தரம் பிள்ளை அவர்கள், சமரச வேதசங்கத்து வித்வான்.

,, டாக்டர் சண்முகம் பிள்ளை அவர்கள், முத்தமிழ்க் கவியரசு.

,, வல்லை - சண்முகசுந்தர முதலியார் அவர்கள், செந்தமிழ் ரத்ஞகரம்.

,, அப்பாய் நாயுடு அவர்கள், F. T. S.

பின்னும் பலருளர்.

அது காலையில் கதிரைவேற் பிள்ளைக்கு விளம்பரப் பத்திரிகை யனுப்பியும் வரவில்லை. அக்காலையில் கிறிஸ்ட்டியன் காலேஜு தமிழ்ப் பண்டிதர் ஸ்ரீமான் நாகை - வேதாசலம்பிள்ளை எதிரியின் பிரதிவாதங்களைச் செவ்வனே எடுத்து விவகரித்துத் தக்க சமாதானங்களையுஞ் சொல்லி திருவருட்பாவின் சிறப்பை யெடுத்துக் கூறினர். அச்சபையில் வந்திருந்த ஸ்ரீமான் முத்துக்குமாரசுவாமி முதலியார் B. A. அவர்கள் கெவர்ன்மெண்டு தமிழ் டிரான்ஸ்லேட்டர் ஆப்பீசு தண்டலம் - பாலசுந்தர முதலியாரவர்கள் முதலிய பிரபுக்களும், வித்வ சமுகத்தாரும் தேவார திருவாசகங்கள் பதி வாக்குகளெனினும், திருவருளுக் கிலக்காகிய மெய்யரும்பல், விதிர் விதிர்த்தல், கண்ணீர் ததும்பல், உள்ளம் வெதும்பலாதி பக்தி தோற்றங்களை யுண்டாக்கி, இன்னிசைக்குப் பொருந்திய சொற்சுவையும், பொருட்சுவையும், அமைந்து ஜீவர்களுடைய மருளை நீக்கி யருளைப் பிரகாசிக்கச் செய்யும் ஸ்ரீமத் இராமலிங்க சுவாமிகள் பாடல்

கள் திருவருட்பாவே யெனத்தகும். அத்திருவருட்பாவின் சிறப்பானது வேதாகம புராணங்களுக்கு அவிரோதமான தென்றும், தேவார திருவாசக திருமுறைகளுக்கு அடுத்தபடியில் எற்றுக்கொள்ளத் தக்கதென்றும் தீர்மானித்தார்கள். இவற்றின் விரிவை வேதாகமோக்த சைவசித்தாந்த சபையார் (1-11-1903) திருவருட்பா விவாதிகளுக்கொரு விளக்கமென்று வெளியிட்ட பத்திரிகையால் விளங்கக் காணலாம்.

இராமலிங்க சுவாமிகளின் பாடல் களங்கமற்ற கண்ணாடியைப் போல் விளங்குவதால் அதன் முன்னிற்கும் மருளுடையார்க்கு மருட்பாவாகவும், அருளுடையார்க்கு அருட்பாவாகவும் தோற்றுகின்றது. இது காரணத்தால் மருள்கொண்ட ஈழத்தார் அதை மருட்பாவெனக் கூறுகின்றாரன்றி அருளுடையார்க்கெல்லாம் அது அருட்பாவாகவே இருக்கின்றது.

## போலிச் சைவரின் புதுமையும்
## ஈழநாட்டார் பகட்டொழுக்கமும்.

சைவ சமயாசிரியர்களா யுள்ள நால்வரும் திருமுறைகளில் பிரம விஷ்ணுக்களாலும் அறிதற்கரிய சிவபெருமானெனப் பாடி வைணவத்தைக் கண்டித்திருக்கவும், அதற்குமாறாக இராமலிங்க பிள்ளை ஸ்ரீராமனையும், இலக்ஷ்மியையும் தோத்திரஞ் செய்திருப்பதால் அவர் சைவராகாரெனவும், பாஞ்சராத்திரப் படுகுழியில் வீழ்ந்தாரெனவும் கதிரையார் தமது மருட்பா மறுப்பில் நிந்தைசெய் திருக்கின்றார்.

இவர் சைவத்தி னுண்மை யறிந்திருப்பாராயின் இவ்வாறு கூறார். உலக தோற்றத்திற்குக் காரணராயுள்ள பிரம விஷ்ணுக்களே எல்லாத் தேவர்களினு முயர்ந்தவர்களா யிருத்தல்பற்றி அவர்களாலு மறிதற்கரியவன் சிவனென்னுமிடத்து ஆங்குள்ள உம்மை, சிறப்பும்மையாமன்றி, இழிவும்மையாகாதாம். அதனால் சமயாசிரியர்கள் தங்கள் திருமுறையில் பிரம விஷ்ணுக்களை யாண்டு மிழிவுபடக் கண்டித்தார்களில்லை. கண்டித்துள்ளாரெனின் சம்பந்தப்பிள்ளையார் தமது திருவெழு கூற்றிருக்கையில் "படைத்தளித் தழிப்பமும் மூர்த்திக ளாயினை" "இருவரோடொருவனாகி நின்றனை" எனக் கூறார். நாம் பூசிக்கும் சிவலிங்கப்பெருமான் திருவுருவில் அடி கண்டம் பிரமாவென்றும், நடுகண்டம் விஷ்ணுவென்றும், மேற்கண்டம் சிவன் என்றும், சிவாகமங்களில் கூறியிருக்கவும், சிவாலயங்களில் சிவபெருமானைத் தரிசிக்கச்செல்வோர் பிரம விஷ்ணுக்களாகிய ஈருருவை நீக்கி உருத்திரவடிவாகிய ஒருருவை மாத்திரந் தெரிசிக்கிறார்களா? வென விசாரித்தறிக.

பின்னும் கதிரையார் இராமலிங்கபிள்ளை பிரமவிஷ்ணுவும் ஏறுதற்கரிய பெரிய நிலையின்மேல் நான் ஏறியிருக்கிறேனெனக் கூறுகின்றாரே? அஃதுண்மையாயின் அப்பிரம விஷ்ணுக்களிவரைத் துதிக்கவேண்டியதிருக்க, இவர் அவர்களை எவ்வாறு துதித்தாரெனக் கூறுகின்றார். குமரகுருசுவாமிகள் தாம்பாடிய மீனாக்ஷியம்மன் பிள்ளைத்தமிழ், முத்துக்குமரசுவாமி பிள்ளைத்தமிழ் ஆகிய இவற்றுள் அம்மையாரும் இளைய பிள்ளையாரும், பிரமவிஷ்ணுவைக் காத்தற்குரிய கடவுளர்களாக விருக்கவும், இத்தகைய இவ்விருவரையும் திருமால் காக்கவென மாறிக் காப்புப்பருவங் கூறியவாறென்னை? இவற்றினுண்மை இவருணர்ந்திருப்பாராயின் இவர் இவ்விதக் குதர்க்க வாதஞ்செய்கிறார்.

இந்த இராமலிங்க சுவாமிகள் சைவராகாரெனக் கண்டிக்கவந்த நா. கதிரைவேற் பிள்ளையின் சைவத்திறத்தினைச் சற்றே விசாரிப்பாம்.

இக்கதிரையார் பிறந்த நாடோ புலோலி, அந்த நாட்டிலும் பாதிரியார்களிடத்தில் ஜீவித்துவந்ததுமன்றி இச்சென்னை இராஜதானியில் வந்த பின்னும் 1892 முதல் சென்னைக் கிறிஸ்ட்டியன் காலேஜிலும், 1897-ம் ௵ முதல் வேப்பேரி ஸ். பி. ஜி. ஹைஸ்கூலிலும், 1898-ம் ௵ முதல் மயிலாப்பூர் சென்டு தோமையார் ஹைஸ்கூலிலும், 1904-ம் ௵ முதல் இராயப்பேட்டை வெஸ்லியன் மிஷன் கலாசாலையிலும், உபாத்தியாயராகவிருந்தும் முடிவில் கருஆர் பைபில் டிராக்ட்டு ஸொஸயிட்டியைச்சார்ந்த கிறிஸ்துவ வேதபுத்தகங்களைச் சீர்திருத்திக்கொடுத்தும் ஜீவித்து வந்தார். இவர் காலமெல்லாம் கிறிஸ்துவர்கள் சார்பிலிருந்து, அவர்கள் கிறிஸ்தவர் அல்லது ஞானியாரென்றும், ஹிந்துக்களாகிய நாம் அஞ்ஞானிகளென்றும், தங்கள் வேதம் "சத்தியவேத"மென்றும், நமது வேதம் அசத்தியவேதமென்றும், தங்கள் தேவன் பரமண்டலத்திலுள்ள பிதாவென்றும், நம்முடைய தேவர்கள் பிசாசுகளென்றும், பிரமன் பொய்சொன்னான், விஷ்ணு திருடினான், சிவன் விபசாரஞ்செய்தான், இவர்கள் கடவுளாகாரெனத் தூஷிக்கும் வாசகங்களைப் பிள்ளைகளுக்குக் கற்பித்து கிறிஸ்துவர் செய்யுந் தூஷணைகளையெல்லாம் தாமும் ஒப்பி டிராக்ட்டுகள் எழுதிக்கொடுத்தும், அவர்கள் சத்தியவேதமென்னும் பைபிலைச் சீர்திருத்திக்கொடுத்தும் ஜீவித்துவந்ததும், தமது உத்தியோகத்துறையில் நின்றும் நீங்கி வெளிப்பட்டகாலத்தில் சிவ சின்னங்களாகிய விபூதி உருத்திராக்கங்களை யணிந்துகொண்டதும், பிறரும் அச்சிவசாதனங்க ளணியவேண்டுமெனப் போதித்ததும், அதற்காகவே சைவபூஷணச் சந்திரிகையென்ற நூலை எழுதி வெளியிட்

டதும் யோசிக்குமளவில், ஆறுமுக நாவலர் தாமெழுதிய யாழ்ப்பாண சமயநிலை 22-வது பிரிவில் "பாம்புக்குத் தலைகாட்டி மீனுக்கு வால் காட்டும் மலங்குபோலச் சைவருக்குச் சைவராயும், கிறிஸ்தவருக்குக் கிறிஸ்தவராயும் நடித்தல் முதலிய இப்பெருங் கொடுந் தீமைகளெல்லாம் யாழ்ப்பாணத்திலே வரவரத் தலைப்பட்டோங்குகின்றன" எனக் கூறி யிருப்பதை இக்கதிரையார் இக்காலத்தில் புதிப்பித்துக் காட்டினரென் பது வெளியாகின்றது.

இக்கதிரையார் மாத்திரமா இவ்விதச் சைவரெனின் இவரது பரமாசிரியர் ஆறுமுக நாவலரும், அவ்விதமாகவே கிறிஸ்தவர்களின் சார்பி லிருந்து கிறிஸ்தவர்கள் வேதபுத்தகங்களை (பைபில்) சீர்திருத்தஞ் செய்துகொடுத்து ஜீவித்துவந்தார். ஷை ஆறுமுக நாவலர் சரித்திரம் 13, 14-வது பக்கங்களில் "நாங்கள் திருத்திய பைபிலில் ஒருபிழையு மில்லை, வசன நடையும் நன்றாயிருக்கிறது, அப்படியிருக்க அவர்கள் (சென்னையிலுள்ளவர்கள்) குற்ற மேற்றுவார்களாயின், அதிலே ஒருகுற்ற முமில்லை யென்று பல பிரமாணங்களைக்கொண்டு நாங்கள் தாபித்து எங்களாலே திருத்தப்பட்டபடியே அச்சிடுவிப்போம்" என (Revd. Percival.) பர்ஸிவல் பாதிரியாருக்கு ஆறுமுக நாவலர் கூறினர் என்று எழுதியிருப்பதாலும், கோயிலூர் மடத்தில் விளங்கிய ஸ்ரீமத் துறவுசாமிகள் சரித்திரம் 21-வது பக்கத்தில் "இன்று முதல் புராணபிரசங்கஞ் செய்து வரவேண்டுமேயன்றிப் பாதிரியார்களுக்குப் பாடஞ்சொல்லுத லாகாதென்று ஷை துறவுசாமிகள் நாவலருக்கு உத்தரவுசெய்ய நாவலர் அவ்வாறே அன்றுமுதல் பாதிரியாருக்குப் பாடஞ்சொல்லுத லொழித்துப் புராணப்பிரசங்கஞ் செய்தலோடு சைவநூல்களும் பயின்றுவந்தனர்" என்றெழுதி யிருக்கின்றது.

இஃதன்றியும் ஆறுமுக நாவலருக்கு மிக்க நண்பராயும் சைவப்பிழம் பாயுமுள்ள C. W. தாமோதரம் பிள்ளை B. A., B. L. என்பார் ஒருவ ரிருந்தார். C. W. என்பவற்றின் பொருளென்னை எனக் கிறிஸ்தவர்கள் வினவின் "சார்லஸ் உன்ஸ்லோ" வென்றும், சைவர்வினவின் "சித்தூர் வைரவநாதன் பிள்ளை" என்றுங் கூறுவர்.

இவர் குமாரகுரு சுவாமிகள் செய்த நீதிநெறி விளக்கத்திற்கு 1854-ம் ஞு ல் உரையிட்டு, அப்புத்தகத்தி னிறுதியில்,

சீர்பூத்த விவிலியநற் சுருதி வாழி
திருச்சபைக ணிதம்வாழி செங்கோல் வாழி

நார்பூத்த திரயம்பகன் வாழி பாத
நறுமலர்கொ டெண்ணியடிமை யாண்ட ஞான
நீர்பூத்த குரவர்பதி கழகம் வாழி
நிலமுழுதுந் தருமநலம் வாழி யீழப்
பேர்பூத்த பதிபெரியோர் வாழி வாழி
பெருமையசெந் தமிழ்வாழி வாழி வாழி.

எனப் பாடிச் சேர்த்திருக்கின்றார். இதனால் இவ்வீழத்தார் சிவ சின்ன மாகிய விபூதி உருத்திராக்கங்களைத் தரிப்பதும் சிவபூசை செய்வதும், சிவ சரித்திரங்களைப் பிரசங்கிப்பதும் நாடகமாத்திரையாக விருக்கின்றனவே யன்றி இவர்கள் உண்மைச் சைவரன்றும். எனவே போலிச் சைவரெனக்கொள்க.

## இராமலிங்க சுவாமிகளுக்குத் திருவருட்பிரகாச வள்ளலார் என்ற பட்டாபிதான விசாரம்.

கதிரையார் "திருவருட்பிரகாச வள்ளலார்" என்னும் பெயர் சிவ பெருமான் ஒருவனுக்கே உரியதன்றி வேறொருவருக்கும் அப்பெயரிட் டழைத்தல் தகாதென்றார். அங்ஙனமாயின் முருகக்கடவுளுக்கே உரிய சிறப்புத் திருநாமங்களில் ஒன்றாகிய "வேலர்" என்றபெயரை இவர் தமக்கு இயற்பெயராகக் கொண்டதும், ஒருவர் பொருளை அபகரித்தபின்னர் "கதிரைவேலர்" என இரட்டைத் திருநாமம் பூண்டதும் எந்தப் பிரமாணத்தைக்கொண்டு செய்தனரோ? விளக்கினாரில்லை.

அன்றியும் முற்காலத்திருந்த பெரியோர்கள் "வள்ளலார்" என்றும் "கண்ணுடையவள்ளலார்" என்றும் தீக்ஷா நாமங்கள் பெற்றிருந்தது போல இராமலிங்க சுவாமிகள் "திருவருட்பிரகாச வள்ளலார்" எனத் தீக்ஷாநாமம் பெற்றுளாரென இவரேன் அறிந்தாரில்லை. இக்கதிரையார் ஞானம் இத்தன்மையதென்றும், அதை யடையு மார்க்க மித்தன்மைய தென்றும் உணர்ந்திருப்பாராயின் இவ்விதமான குதர்க்கவாதஞ் செய்திரார். இது மாத்திரமோ? பின்னும்,

## சைவசமய குரவர்கள் நால்வர்க்குச் சுவாமிகள் பட்டாபிதான விசாரம்.

இத் தொண்டைநாட்டார் தா மச்சிட்ட பெரியபுராணப் பதிப்புகளெல்லாம் அறுபத்துமூன்று நாயன்மா ருள்ளும், சைவசமயாசிரியர்களா

யவதரித்தும், சிவபெருமானூரால் தடுத்தாட் கொள்ளப்பட்டவர்களு மாகிய மூவர் முதலிகளையும், திருஞான சம்பந்தசுவாமிகள், திருநாவுக்கரசு சுவாமிகள், சுந்தரமூர்த்தி சுவாமிகள் என அச்சிட்டிருக்கவும், சுவாமிகள் என்ற பட்டம் அவர்களுக்குத் தகாதெனு ஆறுமுக நாவலர் தாம் அச்சிட்ட பதிப்பில் "திருஞான சம்பந்தமூர்த்தி நாயனூர், திருநாவுக்கரசு நாயனூர், சுந்தரமூர்த்தி நாயனூர் என மாற்றி அச்சிட்டிருக்கின்றனர். அதற்குச் சம்பந்த சுவாமிகள் திருநாவுக்கரசு சுவாமிகள் இவ்விருவரும் தங்களுக்குள் ஒருவருக்கொருவர் நாயன்மார் என வழங்கிக் கொண்டார்களென்றும், சேக்கிழார் சுவாமிகளும் அவ்வாறே தமது பெரிய புராணத்தில் கூறியிருக்கிறூரென்றும், திருவாதவூரர் புராணத்தில் மாணிக்க சுவாமிகளையும் நாயனூரெனக் கூறியிருக்கிறதென்றும், நாவலர் தாம் அச்சிட்ட திருத்தொண்டர் பெரியபுராணத்தில் ஏதேதோ சமாதானங்கள் எழுதியிருக்கின்றூர். மகான்கள் ஒருவர்க்கொருவர் அவ்வாறு வழங்கிக்கொள்வ திழுக்கன்றும். நமது தரத்துக்கு அத்தகைய சமயாசிரியர்களைச் சுவாமிகளெனக் கௌரவமாகக் கூறிக்கொள்வதே தகுதியன்றி நாயனூரெனல் தகுதியாகாவாம்.

பின்னும் நாயனூ ரென்பதே தகுதியாமென நாவலர் சாதிப்பாராயின் இவரால் அச்சிடப்பட்ட திருவாசகத்தில் மாணிக்கவாசக மூர்த்திகள் எனக் கூறுது மாணிக்கவாசக சுவாமிகள் என என் அச்சிட்டிருக்கின்றூர்?

பின்னும் பன்னிரண்டு திருமுறைகளில் திருவிசைப்பா திருப்பல்லாண்டு செய்தவர்களாகிய திருமாளிகைத்தேவர், சேந்தனூர், கருவூர்த்தேவர், பூந்துருத்தி நம்பி, காடவர்கோன் நம்பி, கண்டராதித்தர், வேணுட்டடிகள், திருவாலியமுதனூர், புருடோத்த நம்பி சேதிராயர், ஆகிய ஒன்பதின்மர்களுக்கும், பட்டினத்தடிகள், நம்பியாண்டார் நம்பிகளுக்கும் நாயனூர் பட்டஞ் சூட்டாமைக்கும், நற்கீரதேவர், கபிலதேவருக்கும் நாயனூர் பட்டஞ் சூட்டினமைக்குங் காரணமென்னையோ? இவர்களுள் ஒருவர்க்கொருவர் தாரதம்மிய முண்டெனக் கூறுவரேல், சைவ சமையாசிரியர் மூவர்க்கும் சுவாமிகள் என்ற பட்டஞ் சூட்டுவதால் இவருக்கு நேர்ந்த குற்றமென்னையோ?

பின்னும் ஆறுமுகநாவலர் சிற்சில இடங்களில் திருநாவுக்கரசு சுவாமிகளைச் சொற்சுவையில்லாத " அப்பமூர்த்தி " எனவுங் கூறத்துணிந்தார். இதைக்கண்ட இராமலிங்க சுவாமிகளின் சார்பார் அப்பமூர்த்தி, தோசைமூர்த்தி, வடைமூர்த்தி, இலட்டுக மூர்த்தி எனப் பெரியோர்களுக்குப்

பெயர் சூட்டியழைப்பது அசம்பவ வார்த்தையாமென ஏளனஞ் செய்திருக்கிறார்கள். அதைக் கண்டிருந்தும், ஆறுமுகநாவலரின் சார்பார் எனவே நா. கதிரைவேற்பிள்ளையும் அவர்தம் சார்பாரும் மூவர் முதலிகளுக்கு நாயனார் பட்டமே தகுதியாமென நாவலர் கக்ஷியையே கடைப்பிடித்து வழங்கி வருகிறார்கள்.

---

## ஈழநாட்டு ஆறுமுக நாவலருக்கும் பு. பாலசுந்தரநாய்க்கர் தந்தையார்க்கும் ஏலாப்பட்டங்கள் சூட்டியது.

இராமலிங்க சுவாமிகளுக்குத் திருவருட்பிரகாசவள்ளலார் பட்டமும், சைவ சமயாசிரியர்களாகிய மூவர் முதலிகளுக்குச் சுவாமிபட்டமும் வைத்தழைக்கச் சகியாத இக்கதிரையார், ஈழநாட்டு ஆறுமுகநாவலருக்குச் சிவபெருமானுக்கே உரிய பெருமான், பெருந்தகையார், பெருந்தகை வள்ளலார் என்ற இவை முதலிய பட்டங்களும்; தெய்வப்புலமைத் திருவள்ளுவ நாயனாருக்குரிய மெய்ப் பெரும்புலவர் பட்டமும், தேவியார் ஞானப் பாலுண்டு ஓதாதுணர்ந்த சம்பந்தப் பிள்ளையாருக் குரிய பரசமயகோளரி, பரமஞானாசிரியர் என்ற பட்டங்களும் இவர் எவ்வாறு சூட்டத் துணிந்தார்? இது புதுமையன்று. இவரது மாணாக்கராகிய வன்னியகுல பு. பாலசுந்தர நாய்க்கரின் தந்தை யாகிய வண்டி ஒட்டி ஜீவிக்கும் சாமானியத் தொழிலுடைய முனிசாமி நாய்க்கருக்கு வள்ளல் பட்டம் சூட்டியிருக்கின்றார். இதை

> "வரசை யன்மீதன்பு வைத்தவன் சீர்முனி சாமிவள்ளல்
> விரசை யனேன்பிற் பிறந்தவ னிறக்க மேன்மைகொண்டோன்
> கரசை யனற்றுணைத் தீந்தமிழ் நூலவை கண்டசெல்வன்
> புரசையன் பாலநற் சுந்தரன் பாவலப் பொற்பினனே."

எனப் பு. பாலசுந்தரநாய்க்கர் 1903-ம் வருஷத்தில் புரசை கங்காதரேசுரர் மீதிற் பாடிய தோத்திரப்பாமாலை யென்ற 10 பாடலுக்குக் கதிரையார் கொடுத்த சாற்றுக்கவியாற் காண்க.

---

## ஈழநாட்டு ஆறுமுக நாவலரை ஐந்தாங்குரவரெனப் புராணம் பாடிக்கொண்டது.

பின்னும் இவ்வீழநாட்டார் செய்த தீமையை அளவிட்டெழுத எம்மால் முடியாது. பெரிய புராணத்திற் கூறிய அறுபத்து மூன்று நாயன்

மார்கள் எல்லோரும் இந்தியாவின் உண்ணாட்டாராக விருக்கின்றார்கள். ஈழநாட்டா ரொருவருமில்லை, அதனால் அந் நாட்டிற் கோர் சிறப்புமில்லை. அதனால் ஆறுமுக நாவலரை அந் நாயன்மாரோ டொருவாராகச் சேர்த்து விடவேண்டுமென்றும், அந் நாயன்மாருள்ளும் நால்வரே சிறந்தவர்களாக விருத்தலின் அந் நால்வரோ டிவரை ஐந்தாங்குரவ ராக்கவேண்டுமென் றும் நினைத்து நாவலர் சரித்திரமென ஓர் புத்தக மெழுதி, அதில்

பிறந்திறந் துழலுஞ் செய்கைப் பெருச்சிவ பிரானைப் பாடன்
மறந்திடா நால்வ ரோடி வருமொரு வராத மென்னுந்
திறந்திகழ் தருசித் தாந்தந் தெளிந்தநா வலரை வேண்டி
யறந்திறம் பாச்ச பைக்கங் கதிபதி யாக்கிக் கொண்டு,

என ஓர் பாடலைப் பாடிவைத்திருக்கின்றார். இப் பாடலில் சிவபெரு மானைப் பாடுந் திறத்தால் பரமாசிரியர் நால்வரோடு நாவலரும் ஒப்பாவா ரெனக் கூறியிருக்கின்றது. பன்னிரு திருமுறைகளே திருவருட்பா வென்றும், அவற்றோடு இராமலிங்கபிள்ளை பாடல்களைத் திருவருட்பா வென ஒப்பக் கூறுதல் அதி பாதகமெனக் கூறிய இவ் வீழத்தார் அவ் வவதார புருஷர்களாய் எழுந்த சைவாசிரியர்கள் நால்வரோடு மரணவேத னைப்பட் டிறந்த நாவலரை ஒப்பக்கூறிய அதிபாதகத்தை எங்கே ஒழிக் கப் போகின்றார்கள்? அந்நால்வர் பாடிய பாடல்களுக்குத் திருக்கடைக் காப்பு, தேவாரம், திருப்பாட்டு, திருவாசகம் என வழங்குவனபோல, இந்நாவலர் பாடிய பாடல்களுக்கு என்ன பெயராமோ? சற்றே விளக் கினாரில்லை. ஓர் பாடலேனும் சுயமாகப் பாடும் ஆற்றலில்லாத இவரை எவ்வாறு நால்வரோ டொப்பாகக் கூறத்துணிந்தார்?

அற்றன்று தாம் பாடுவதிற் சிறப்பின்று. தேவாராதிய திருமுறைகள் தமிழ் வேதமாதலின் அவைகளையே இவர் சதா ஓதி வந்தமையான் இவரை நால்வரோ டொப்பாகக் கூறினாரெனின், இக்காலத்தில் சிதம்பர முதலிய சிவக்ஷேத்திரங்களில் தேவாரக் கலாச்சாலைகள் ஏற்பட்டு அவற்றில் சதா தேவாரங்கள் பாடஞ்செய்து வரும் சிறுபிள்ளைகள் ஒவ்வொருவரையும் நால்வரோடொப்பச் சேர்க்கவேண்டுமே. அப்பிள்ளைகளினும் இந்நாவலர் எவ்விதத்திற் சிறந்தவராவர்? ஆறுமுக நாவலரை ஐந்தாங் குரவரென்றது போலக் கதிரையாரை ஆறுங் குரவரெனக் கொள்வர்போலும்.

இவர்கள் செய்யுந் தீமைக ளிம் மட்டிலா நின்றது?

—(*)—

## ஈழநாட்டு ஆறுமுகநாவலர் ஈழநாட்டு நா. கதிரைவேற் பிள்ளை இவர்களின்

# குரு பூசை.

சைவ சமயாசிரியர்கள் குரு பூசைக்காக வருடந்தோறும் அச்சிட்டு வரும் அறுபத்து மூன்று நாயன்மார்கள் திரு நக்ஷத்திர பத்திரிகைகளில் ஆறுமுக நாவலரிறந்து போன நக்ஷத்திரத்தையும், அதன் அடியிற் சேர்த்து வெளியிட்டு வருகிறார்கள். இந்நாவலரை மாத்திரம் அப் பத்திரிகையில் சேர்த்தலால் உலகத்தார் ஆக்ஷேபனை செய்வர்களென் றஞ்சி ஆதி சங்கராச்சாரியார் கச்சியப்ப சுவாமிகள் குமரகுரு சுசாமிகள் முலியோரையும் ஆற்றலாதற்குச் சேர்த்திருக்கிறார்கள். மயிலாப்பூர் அறுபத்து மூவர் உச்சவத்தில் வந்திருந்த சில நாட்டுக் கோட்டைச் செட்டிகள், ஈண்டு எழுந்தருளப் பெற்ற நாயன்மார்களெல்லாரும் மொட்டையாக இருப்பது கண்டு இறந்து போன வைரவன்செட்டி வீரப்ப செட்டி முதலிய நாட்டுக் கோட்டை மொட்டைச் சாமிகளின் திரு நக்ஷதிரங்களையும் அப் பத்திரிகைகளில் சேர்த்து அச்சிட்டு வருகிறார்கள். இனி கதிரையார் திரு நக்ஷத்திரத்தையும் இதில் சேர்த்துக் கொண்டாடுவர் போலும்.

இவ்விதமாகச் சைவ சமயத்தின் வரம்பழித்த இவ்வீழ்த்தார் தாங்கள் மேன்மையடையு நிமித்தம் இராமலிங்கசுவாமிகளை ஏதம்பேசிப் பேசமை கற்பித்து,

பொல்லாத புத்தமே வைட்டிணவ மேகான்மம் புகன்றி யாமே
யெல்லாம்வல் பிரமமெனும் பெரும்பாவ மதமிவற்றை யிடித்துச் சைவ
நல்லார்கள் வியக்கவைத்துக் கருங்குழியான் மருட்பாட்டு நசுக்கிச் சீர்த்தி
வல்லான்மெய்க் கலைவல்லான் கதிரைவேனுவலன்பேர் மலிந்து வாழி.

எனக் கதிரையார் தமது மாணுக்க ரெழுதியதாகத் தம்மைப் புகழ்ந்து வாழியும் பாடி வைத்துக் கொண்டனர். இதனல், இக்கதிரையார் எமவாதனையிலகப்பட்டு நசுக்குண்டாரேயன்றி இராமலிங்க சுவாமிகளுக்கும், அவரது திருவருட்பாவுக்கும் யாதோர் குறைவும் நேர்ந்ததில்லையாம்.

இவர்கள் மருட்டால் இராமலிங்க சுவாமிகளின் கீர்த்தியும் திருவருட்பாவின் கீர்த்தியும் மாறிவிடுமோ? இக்கதிரையார் கதிரொளியைக் கையால் மறைக்க நினைத்தார். இவர் பேதைமை இருந்தவாறென்னே!

அடினு மாவின்பாற் றன்சுவை குன்றாது
சுடினுஞ் செம்பொன் றன்னொளி கெடாது

அரைக்கினுஞ் சந்தனந் தன்மண மறாது
புகைக்கினுங் காரகில் பொல்லாங்கு கமழா
கலக்கினுந் தண்கடல் சேறு காதே!

இம்முதுமொழி வாக்கியங்களை இக்கதிரையா ருணர்ந்திலார்போலும்.

இதனுல் சிவபெருமான் எந்தெந்தக் காலத்தில் யாரார் முன்னிலையில் எந்தெந்தப் பொருளை எவ்வாறு விளக்கவேண்டுமோ, அந்தந்தக் காலத்தில் அவரவர் முன்னிலையில் அவ்வப்பொருள்களை அவ்வாறுகவிளக்கி வருகின்றூர். எங்ஙனமெனில் சமயாசாரியர்கள் முன்னிலையில் பெரும்பாலும் தமது சகள வடிவையும், தாயுமான சுவாமிகள் முன்னிலையில் நிஷ்கள வடிவையும், இராமலிங்க சுவாமிகள் முன்னிலையில் சகள நிஷ்கள சமரசத்தையும் விளக்கி வைத்தனரெனத் தெரிய வருகின்றது.

---

## மருட்பாககூழி மாய்ந்தொழிந்தமை.

“கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளைக்குட்டெரியும்” என்ற பழமொழிக்கேற்ப இக்கதிரையார் இராமலிங்க சுவாமிகள் மீது குறை கூறிப் பொய்ப்பத்திரிகை யெழுதி விடுத்து உலகத்தாரை வஞ்சித்துப் பணம் பறித்து ஜீவித்து வந்தமை நாளுக்கு நாள் ஜனங்களுக்கு வெளியாயின. கூத்தாண்டான் கோயிலில் தாலி அன்று கட்டி அன்றேயறுப்பதுபோலக் கதிரையார் சென்னையிற் றோன்றிய காலத்து அவர் கட்டி லகப்பட்டாரெல்லோரும் அவரிந்நகர் நீங்குங் காலத்தே அவர் முழுப்புரட்டரெனக் கண்டு அவர்கட்டை அன்றே அறுத்தெறிந்து விட்டார்கள். அவர் மாணுக்கர்களென வெளி வந்தவர்களில் மந்த வறிவினராய சிலர் மானத்துக் காற்றூராய் இன்னும் அவர்கொள்கையே உண்மையாமெனச் சாதிப்பாரிருக்க, நடு நிலைமையிலுள்ளாரும், கல்வி கேள்விகளில் வல்லாரும், சத்தியத்துக் கஞ்சினேரெல்லாரும் இராமலிங்க சுவாமிகள் உண்மையில் சிவயோகி யாரென்றும், அவரது பாடல்கள் பன்னிரு திருமுறைகளுக்கு விருத்தியுரையாமன்றி அவற்றிற்கு மாறு பட்டதன் றென்றும் உணர்ந்தார்கள். எங்ஙனமெனின் “அருட்பா என்னும் பெயரை இராமலிங்க பிள்ளை தமது பாடல்களுக்கு வைத்தமையானே பெரிதும் அவலப்பட்டார். அது பற்றியே முன்னுள்ள சிவனடியார்களும், இப்போதுள்ள சிவனடியார்களும் அவரையும் அவர் பாடல்களையும் அருவருத்துக் கண்டித்துப் போயினர். இராமலிங்கபிள்ளை பாடலென்று வைத்திருப்பின் மிக்கப் பெருமையடைந்திருப்பார். அவர் பாடல்களுஞ் சிறப்புற்று விளங்கும்.” எனக்கதிரையார் தாமே தமது மருட்பா மறுப்பில் தமது மனசாக்ஷிக்கு

விரோதமின்றி எழுதியிருக்கின்றார். இதனால் அவர்மீதும் அவர்மரபார் மீதும் வேறுவகையால் யாதோர் குற்றமுமின்றெனை வெளியாகின்றது. ஆகவே கதிரையார் இது காறும் தமது நூலில் மருட்பாக்களின் வழூஉத் தொகுதியென் றெழுதியதும் படிற்றொழுக்கம் என்றெழுதியதும் உண்மையாகாவென உணர்ந்தார்கள். பின்னும் 1903-ம் ௵ அக்டோபர் ௴ல் சென்னையில் கூடிய மகாஜன சபையாரால் "மருளை நீக்கி யருளைப் பிரகாசிக்கச் செய்யும் ஸ்ரீமத் இராமலிங்க சுவாமி பாடல்கள் திருவருட்பாவே யெனத்தகும்." எனத்தீர்மானிக்கப் பட்டிருப்பதால் இக்கதிரையார் ஷெடி சுவாமிகளின் பாடல் மறுட்பாவென்ற கசுழியும் மாய்ந்தொழிந்ததெனக்கண்டார்கள்.

இராமலிங்க சுவாமிகளைக் குறை கூறிய அதி பாதகத்தால் கதிரையார் குடும்பத்தோடொழிந்தாரென்பதையுங் கண்கூடாகக் கண்டார்கள்.

இவ்விதமாக. சாமானிய ஜனங்கள் மனம் மாறியது ஒரு பாலிருக்கப் பன்னிரு திரு முறைகளுக்கு ஆபத்து நேரிட்டதென்றும், அவற்றை ஜீரணோத்தாரணஞ் செய்ய வேண்டுமென்றும் கூறியழுத கதிரையார் கள்ளத் தனத்தை உண்மையாமெனக் கொண்டு தேவ கோட்டையில் (1500) ரூ வரையில் உதவி செய்த சுவாமிநாத பண்டிதரவர்களை சிவஞான போதம் அச்சிடு நிமித்தம் சென்னையில் வந்த காலத்து இராமலிங்க சுவாமிகளும், அவர் சார்பாரும் சைவ சித்தாந்தத்திற்கு உரிமைப்பட்டாரன்றி, எட்டுணையும் மாறுபட்டவர்களன்றெனை விசாரித்துணர்ந்து, சுந்தரமூர்த்தி சுவாமிகளும் விறன் மிண்ட நாயனாரும் ஒருவர்க் கொருவர் மாறு கொண்டதுபோல முற்காலத்தில் ஏதோ ஓர் காரணத்தால், ஆறுமுக நாவலரும் இராமலிங்க சுவாமிகளும் ஒருவர்க் கொருவர் மாறு கொண்டார்கள், அது விஷயம் அவர்கள் மாட்டே நிற்க. நாம் அதில் பிரவேசிப்பது தகுதியன்றெனை நீங்கினார். ஆகிலும் இது விஷயத்தில் கதிரையார் செய்ததெல்லாம் வஞ்சகமென் றுணர்ந்து ஐயோ! நாம் சிவ புண்ணியமென இவருக் குதவிய 1500 ரூ.யும் சிவனடியார் நிந்தனைக்கும் சிவத் துரோகத்திற்கும் ஆயதே என மிக வருந்தினர். இதை யறிந்த நாட்டுக் கோட்டைச் செட்டிமார்களுட் பலரும் அவ்வாறே வருந்தினர்.

இது நிற்க சுவாமிநாத பண்டிதரிடத் திருந்த சைவசித்தாந்தத்திற்கு முதனூலாயுள்ள சிவஞான போத எட்டுப்பிரதியைச் சுத்தமாக எழுதித்தருவேமெனக் கதிரையார் வாங்கிக்கொண்டுபோய்த் தாமச்சிடத் தொடங்கினார். அது கண்டு பண்டிதர் அவரிடத்திற் கொடுத்த ஏடுகளை தந்திரோபாயஞ்செய்து மீட்டுக் கொண்டார். கதிரையார் இவ்வளவு ஏராளமான பொருளுதவிசெய்த பண்டிதருக்கும் வஞ்சனை செய்யலாமா!

இது நிற்க ஷெ பண்டிதர் அஷ்டாவதானம் சித்தாந்த சரபமாகிய பூவை - கலியாண சுந்தர முதலியாரால் சிறப்புப்பாயிரம் பெற்றபோது அது கண்ட கதிரையார் ஷெ முதலியார் இராமலிங்கபிள்ளை சார்பா ரென்றும் அவர் கவியை அந் நூலிற் பதிப்பித்தாற் புத்தகம் விலையாகா தென்றும், தாமொரு கவி இயற்றி அதை அந் நூலில் பதிப்பிக்க வேண்டு மென்றும் வேண்டினர். அதற்குப் பண்டிதர் நமது புத்தகம் விலையா காமற் போனாலும் போகட்டும், நமது சாற்றுக் கவியை நாம் ஒப்பே மென மறுத்து விட்டார். பின்னும் அச் சிவ ஞான போதத்திற்கு விளம்பரப் பத்திரிகை அம் முதலியாரின் மாணாக்கராகிய தி. ந. தங்கவேலு முதலியார் பேரால் வெளியிட்டனர். இதனு லிப்பண்டிதர் நடு நிலைமையி லுள்ளாரெனத் தெரிய வருகின்றது. இது காறும் இராம லிங்க சுவாமிகள் திருவருட்பாவைத் தொட்டாலும் கையழுகுஞ் சொன்னு லும் வாய் புழுக்குமெனக் கதிரையார் கூறிய வஞ்சகவாசகத்தை நம்பி மோசம் போனேம், இப்போது அத்திருவருட்பாவை பாடக் கேட்கக் கே ட்க எங்கள் மனமுருகி ஆனந்தப்பரவசமாகின்றேம். அதைத் தொட்டா லும் கை மணக்குஞ் சொன்னாலும் வாய் மணக்கு மெனக் கண்டோ மென உலகத்தவர்கள் கொண்டாடுகிறார்கள்.

வாழ்க வந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனு மோங்குக
ஆழ்க தீயதெல் லாமர னாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

முற்றிற்று.

எல்லாம் வல்ல இறைவ னருவருள்வாழ்க.